உ

அமுதசாகரரென்னும்

ஆசிரியராற்செய்யப்பட்ட

# யாப்பருங்கலக்காரிகை

மூலமும்

குணசாகரராற்செய்யப்பட்ட வுரையும்.



இயற்றமிழாசிரியராகிய

திருத்தணிகை

விசாகப்பெருமாளைய

ரவர்கள்

முன்னிலையில்,

தில்லையம்பூர்ச்

சந்திரசேகரகவிராஜபண்டிதரால்

பரிசோதித்தபிரதிக்கிணங்க

அ - வீராசாமி நாயுடு

அவர்களது

சற்குணநிதியச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

ஆங்கீரச௵ பங்குனி௴.

1873

# புத்தகவிளம்பரம்.



இதனால் சகலருக்குந் தெரிவிப்பது யாதெனில் சென்னபட்டணம் பீங்கான்கடைக்கடுத்த பாயண்ரோட்டில் ௱௪௬-வது நெம்பருடைய புத்தகஷாப்பிலும், கும்பகோணம் பெரிய கடைத்தெருவிலிருக்கும் உப்புக்கடை நாராயணசாமிநாய்ககரிடத்திலும், மதுரைபுதுமண்டபத்தில புத்தகவியாபாரஞ் செய்யும் சண்முகபிள்ளையிடத்திலும், திரிசிரபுரம் தேரடிக கடைத்தெருவிலிருக்கும- தி சபாபதிபிள்ளையிடத்திலும், பாலக்காட்டில் ஷாப்புக்கடைவைத்திருக்கும் அப்பாவுபிள்ளையிடத்திலும், பலவித தமிழ்கிரந்தங்களும், அகஸ்தியர்முதலியபெரியோர்கள் திருவாய்மலர்ந்தருளிய வைத்தியசாஸ்திரங்களும், ஆழ்வாராதிகள அருளிச்செய்த திவ்வியப்பிரபந்தங்களும், கம்பராமாயணவசனமும், சிலசோதிடசாஸ்திரங்களும், வேண்டியவர்கள் விலைக்குப்பெற்றுக்கொள்ளலாம்.

இப்போது நூதனமாயச்சிட்டிருக்கும்

புத்தகங்கள்.

மரணகண்டியென்னும சோதிஷசாஸ்திரம்
நவகிரகசிந்தாமணியென்னும் ஜாதககூடாமணி
பாலக்கிரகதோஷநிவர்த்தி
ஜீவோற்பத்திசிந்தாமணி
கணிதாமிர்தமென்னும்-ஜோதிஷசாஸ்திரம்
மார்க்கண்டேயர் சரித்திரஅம்மானை
தேரையர்பெருநூல்காவியம் ௩௫ா
தன்வந்திரிதைலம் ௫ா
ஸ்ரீராமர்மகாவிர்தம்

அச்சிட்டுவரும் புத்தகங்கள்.

சுப்பிரமணியர் மெய்ஞ்ஞானம் ா
அஸ்வனிதேவர்வைத்தியம் ா
தேரையர்கரசலை ௩ா

இங்ஙனம்.

அ - வீராசாமிநாயுடுமருமகன்.
வா-வரதராஜுலுநாயுடு.

உ

கணபதி துணை.

# யாப்பெருங்கலக்காரிகை

மூலமும். — உரையும்.



## பாயிரம்.

கந்தமடிவில்சடிமலர்ப்பிண்டிக்கண்ணார்நிழற்கீழ்
எந்தமடிகளிணையடியேத்தியெழுத்தசைசீர்
பந்தமடிதொடைபாவினங்கூறுவன்பல்லவத்தின்
சந்தமடியவடியான்மருட்டியதாழ்குழலே.

என்பது - காரிகை. நூலுரைக்குமிடத்து நூற்பெயரும், காரணமும், ஆக்கியோன்பெயரும், அளவும், பயனும், உரைத்துரைக்கற்பாலது. அற்றேல், இந்நூலென்ன பெயர்த்தோவெனின், பாலித்தியமென்னும்* பாகதவிலக்கணமும், பிங்கலமென்னுஞ் சந்தோபிசிதமும்போலக் காரிகையாப்பிற்றாய்க், குணகாங்கியமென்னுங் கருநாடகச்சந்தமேபோல மகடூஉமுன்னிலைத்தாய், அவையடக்கமுமுடையதாய், மயேச்சுரர் யாப்பேபோல உதாரணமெடுத்தோதி, இசைத்தமிழ்ச்செய்யுட் டுறைக்கோவையேபோலவும், அருமறையகத்தட்டகவோத்தின் வருக்கக்கோவையேபோலவும், உருபாவதாரத்திற்கு நீதகச்சுலோகமேபோலவும், முதனினைப்புணர்த்திய விலக்கியத்ததாய், வேதத்திற்கு நிருத்தமும், வியாகரணத்திற்குக்காரிகையும், அவிநயர்யாப்பிற்கு நாலடிநாற்பதும்போல யாப்பருங்கலமென்னும் யாப்பிற்கங்கமாய், அலங்காரமுடைத்தாகச்செய்யப்பட்டமையால், யாப்பருங்கலக்காரிகை யென்னும்பெயர்த்து. இந்நூல் யாதுகாரணமாகச்செய்யப்பட்டதோவெனின், பண்டையோருரைத்ததண்டமிழ்யாப்பிற் கொண்டிலாதகுறியினோனைக்குறிக்கொளுவுதல் காரணமாகவும், தொல்லைப்பனுவற் றுணிபொருளுணர்ந்த நல்லவையோரை நகுவிப்பதுகாரணமாகவுஞ் செய்யப்பட்டது. இந்நூல்யாவராற்செய்யப் பட்டதோவெனின். ஆரியமென்னும் பாரிரும்பௌவத்தைக் காரிகையாக்கித் தமிழ்ப்படுத்திய அருந்தவத்துப்பெருந்தன்மை அமுதசாகரரென்னு மாசிரியராற் செய்யப்பட்டது. இந்நூலெவ்வளவைத்

---

* பாகதமென்பது—வடமொழிச்சிதைவு.

தோவெனின், இயல்வகையான்மூன்றும், காரிகைவகையா றுபத்து நான்கும், கிரந்தவகையாற்றொண்ணூறுகிரந்தமு மிருபத்தெட்டெழுத் துமெனக்கொள்க. அவற்றுள், ஒருகிரந்தமாவது எற்றெழுத்து-உயிரும் உயிர்மெய்யுமாகிய முப்பத்திரண்டெழுத்தா மெனக்கொள்க. அவற்று ள், நேரசைமுதலாகிய காரிகைஇருபத்தொன்றும், நிரையசைமுதலாகி யகாரிகை யிருபத்துமூன்றுமெனக்கொள்க. நேரசைமுதலாகியகாரிகை யொன்றினுக்கு எழுத்தறுபத்துநான்கும், நிரையசைமுதலாகிய காரி கையொன்றினுக்கு எழுத்தறுபத்தெட்டு மெனக்கொள்க. இவ்விருதிற ங்கூட்டியுறழ இரண்டாயிரத்துத் தொளாயிரத்தெட்டெழுத்தா மெ னக்கொள்க. நேரசைமுதலாகியகாரிகை யொற்றொழித்தோரடிக் கெழு த்துப்பதினாறும், நிரையசைமுதலாகிய காரிகையொற்றொழித்தோரடிக் கெழுத்துப் பதினேழுமெனக்கொள்க. என்னை "அடியடிதோறு மைஞ்சீ ராகிமுதற்சீர்நான்கும் வெண்டளைபிழையாக், கடையொருசீரும்விளங்கா யாகி, நேர்பதினாறேநிரைபதினேழென், றோதினர்கலித்துறை யோரடிக் கெழுத்தே,, என்றாராகலின். இந்நூலாற்பயன்யாதோவெனின் யாப் பறிதல்பயன். யாப்பாராயவே- பா- தாழிசை - துறை - விருத்தங்க ளாகப்பட்ட அறம்பொருளின்பம் வீடென்னுமவற்றின் மெய்ம்மைய றிந்து விழுப்பமெய்தி இம்மைமறுமை வழுவாமணிகழுவாராதலின் இரு மைக்கும்உறுதிபயப்பதியாப்பெனக்கொள்க. யாப்பெனினும், பாட்டெனி னும், தூக்கெனினும், தொடர்பெனினும், செய்யுளெனினு மொக்கும். என்னை "யாப்பும், பாட்டுந்தூக்குந் தொடர்புஞ்செய்யுளே, நோக்கிற்றெ ன்பநுணங்கியோரே, என்றாராகலின். இந்நூல்உறுப்பியலும், செய்யு ளியலும், ஒழிபியலுமெனமூவகைப்படும். அவற்றுள்- இவ்வியலென்ன பெயர்த்தோவெனின், எழுத்தும், அசையும், சீரும், தளையும், அடியும், தொ டையும், என்னும்ஆறுறுப்பினையுமுணர்த்திற்றுதலான்உறுப்பியலென்னு ம்பெயர்த்து. இவ்வியலுள், இத்தலைக்காரிகை என்னுதலிற்றோவெனின் தற்சிறப்புப்பாயிர முணர்த்துதனுதலிற்று. என்னை "வணக்கமதிகாரமெ ன்றிரண்டுஞ்சொல்லச், சிறப்பென்னும் பாயிரமாம்,, "தெய்வவணக்க முஞ்செய்யப்படுபொருளு, மெய்தவுரைப்பது தற்சிறப்பாகும்,, என்றா கலின். கந்தமடியில்- தாழ்குழலே, எ - து. முருகுவிரியுமொய்ம்மலா சோகின்கீழிருக்கும் அருகனதடிவணங்கி, எழுத்தும், அசையும், சீரும் தளையும், அடியும், தொடையும், பாவும், பாவினமுமாமாறுரைப்பன் த ளிர்புரையுஞ் சிறுமெல்லடித்தகைநெடுங்குழற்றையலாய். எ-று. இஃது பொழிப்புரையெனக்கொள்க. என்னை "பொழிப்பெனப்படுவது பொருந் தியபொருளைப், பிண்டமாகக்கொண் டுரைப்பதுவே,, என்றாராகலின். கந்தமடியில்- இணையடியேத்தி எனவணக்கஞ்சொல்லப்பட்டது. எழு

கினங்கூறுவனென வதிகாரங்கூறப்பட்டது. "வழிபடுதெய்வவணக்க ஞ்செய்து, மங்கலமொழிமுதல் வகுத்தெடுத்துக்கொண்ட, விலக்கண இலக்கிய, மிடுக்கணின்றினிதுமுடியும்,, என்பவாகலின் ஈண்டுவணக் கஞ்செய்யப்பட்டது. இனியெழுத்துமுதலாகிய எட்டனையும், காரணக்கு றியான்வழங்குமாறு. என்னை "எழுதப்படுதலி னெழுத்தேயவ்வெழுத் தசைத்திசைகோடலி னசையேயசையியைந்து, சீர்கொணிற்றலிற்சீ ரேசீரிரண்டு, தட்டுநிற்றலிற்றளையேயத்தளை, யடுத்துநடத்தலி னடி யேயடியிரண்டு, தொடுத்தன்முதலாயின தொடையேயத்தொடை, பா விரிநடத்தலிற்பாவேபாவொத்; தினமாநடத்தலி னினமெனப்படுமே,, என்வரும், பந்தமெனினும், தளையெனினுமொக்கும். என்னை "பகுதநெறி யிற்பிற்பந்தந்தளையென, வகுத்தனர்மாதோவண்டமிழோரே,, என்று ராகலின். பல்லவத்தின்சந்தமடியவடியான் மருட்டியதாழ்குழலே.எ-து மதுடேஉமுன்னிலை. ஏகாரம்- ஈற்றசை. (க)

## அவையடக்கம்.

தேனூர்கமழ்தொங்கன்மீனவன்கேட்பத்தெண்ணீரருவிக்
கானூர்மலயத்தருந்தவன்சொன்னகன்னித்தமிழ்நூல்
யானுடைத்துநின்றேனென்றெனக்கேநகைதருமால்
ஆனுவறிவினவாகட்கென்னுங்கொலென்னுதரவே.

இ- கை. நூலினது பெருந்தன்மையும், ஆசிரியரது பெருந்தன் மையும், தனதுள்ளக்குறையு முணர்த்திய முகத்தான் அவையடக்கமு ணர்த்துமாறு. இ- ள். தேனிறைந்தமணங்கமழ்கின்ற வேப்பமாலையைத் தரித்த பாண்டியன்கெட்கத், தெளிந்த அருவிநீரையுடைய சந்தனச் சோலைசூழ்ந்த பொதியமலையி லெழுந்தருளியிருக்கின்ற அரியதவத்தினை யுடைய முதலாசிரியராகிய அகத்தியமுனிவரால் அருளிச்செய்யப்பட் ட அழிவின்றி நிலைபெற்றமுத்தமிழுள் இயற்றமிழின்கூறாகிய யாப்பிலக் கணநூலையானும், அவாவிருல்எனது புல்லியநாவைகொண்டுசொல்ல த்தொடங்கினேன் இதுஅறிவிலியாகிய எனக்கேநகையினை விளைக்குமா யின், குறைவில்லாத அறிவினையுடையவர்க்கு யாதாகுமோ- எ- று. ஏ- அசைநிலை. இழிவுசிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது - யானுடைத்து நின்றேனென்பதற்கு வேறுபொருள் கூறுவாருமுளர். (உ)

சுருக்கமில்கேள்வித்துகடீர்புலவர்முன்யான்மொழிந்த
பருப்பொருடானும்விழுப்பொருளாம்பனிமாவிமயப்
பொருப்பகஞ்சேர்ந்தபொல்லாக்கருங் காக்கையும்பொன்னிறமாய்
இருக்குமென்றிவ்வாறுரைக்குமன்றேவிவ்விருநிலமே.

இ- கை. புலவரதுசிறப்புணர்த்திய முகத்தான் அவையடக்கமுணர்த்துற்று. இ- ள். பனிதோய்ந்தநெடிய விடயவரையிடத்தைச் சேர்ந்த இழிவாகிய கரியகாக்கைப்புள்ளும், பொன்னிறமுற்றிருக்குமென்று பரந்தவிவ்வுலகத்தவர்சொல்வர் இவ்வாறேகுற்றந்தீர்ந்த அளவில்லாதநூற்கேள்வியையுடைய புலவர்க்குமுன் குற்றமுடைய வறிவில்லாதயான் கூறியசிறப்பில்லாத பிண்டபபொருளும், சிறந்தநுண்பொருளாம். எ-று அன்று- ஓ- ஏ- அசைநிலை. (௧)

பாயிரமுற்றிற்று.



உ

முதலாவது.

# உறுப்பியல்

குறினெடிலாவிகுறுகியவுயிராய்தமெய்யே
மறுவறுமுவினமைதீருயிர்மெய்யதிமருட்டும்
சிறுநுதற்பேரமர்க்கட்செய்யவாயையநுண்ணிடையாய்
அறிஞருரைத்தவளபுமசைக்குறுப்பாவனவே.

இ- கை. மேலதிகாரம் பாரித்தவெட்டனுள் அசைக்குறுப்பாமெழுத்துகளதுபெயர் வேறுபாடுணர்த்து. இ- ள். குறிலாவன. அ-இ-உ-எ-ஒ- எனவிவை. என்னை "அ-இ-உ-எ-ஒ- வென்னுமப்பாலைந்து, மோரளபிசைக்குங் குற்றெழுத்தென்ப,, என்றாராகலினெடிலாவன- ஆ-ஈ-ஊ-ஏ- ஐ- ஓ- ஔ- வினவிவையென்னை "ஆ- ஈ- ஊ- ஏ- ஐ- ஓ- ஔ- வெனுமப்பாலேழு, மிரளபிசைக்கு நெட்டெழுத்தென்ப,, -ஆவியாவன- அகரமுதல் ஔகாரமீறுப்கிடந்த பன்னிரண்டெழுத்துமெனக்கொள்க,, என்னை-"அகரமுதல ஔகாரவிறுவாய்ப், பன்னீரெழுத்துமுயிரொனமொழிப,, என்றாராகலின். குறுகியவுயிராவன - குற்றியலிகரமும், குற்றியலுகரமும், ஐகாரகுறுக்கமும். எனவிவை - இவைமேலே சொல்லுதும். ஆய்தமென்பதஃகேனம்- அஃகெனமெனினும், ஆய்தமெனினும், தனிநிலையெனினும், புள்ளியெனினும், ஒற்றெனினுமொக்கும். எனனை. "அஃகெனமாய்தந்தனிநிலைபுள்ளி, யொற்றிப்பாலவைந்துமிதற்கே,, என்றாராகலின். (வரலாறு) எஃகு-கஃசு- கஃடு- கஃது - கஃபு கஃறு- எனவரும். என்னை"குறியதன்முன்னராய்தப்புள்ளி, யுயிரொடுபுணர்ந்தவல்லாறன்மிசைத்தே,, என்றாராகலின்- இனிமெய்யாவன - ககரமுதல் னகரமீறுய்க்கிடந்த பதினெட்டெழுத்துமெனக்கொளக. எ

ன்னை "ககரமுதலன கரவிறுவாய்ப், பதினெண்ணெழுத்து மெய்யென மொழிப,, என்றாராகலின். மெய்யெனினும், உடம்பெனினும், உறுப் பெனினும், ஒற்றெனினும், புள்ளியெனினுமொக்கும். என்னை "மெய்யு டம்புறுப் பொற்றிவைதாமொருபொருட், செய்யுமென்றுசெப்பினர்புல வர்,, "மெய்யினியற்கைபுள்ளியொடுநிலையல்,, "எகரவொகரத்தியற்கை யுமற்றே,, "மெய்யினியக்கமகரமொடுசிவணும்,, "மெய்யுயிர்நீங்கிற்றன் னுருவாகும்,, என்றாராகலின். ஏகாரம் என்ணேகாரம். என்னை "என் ணேகார மிடையிட்டுக்கொளினு, மெண்ணேகக்குறித்தியலு மென்மனார் புலவர்,, என்றாராகலின். மறுவறுமூவினமாவன- வல்லினம்-மெல்லின ம்- இடையினம்- எனவிவை. வல்லினமாவன, கசடதபற. மெல்லினமா வன, ஙஞணநமன- இடையினமாவன, யரலவழள, என்னை "வல்லெழு த்தென்ப, கசடதபற,, "மெல்லெழுத்தென்ப ஙஞணநமன,, "இடையெ ழுத்தெனப, யரல வழள,, என்றாகலின்- மறுவறுமூவினமெனறு சிறப் பித்தவதனால் அவையுயிர்மெய்யாகியகாலத்தும், அப்பெயரானேவழங் கப்படுமெனக்கொள்க. என்னை "விருப்புத்தெளிவி வேண்டியாது விளக்கு ம்,, என்றாராகலின். உயிர்மெய்யாவன- உயிருமெய்யுங்கூட்டி யுச்சரிக் கப்படாநின்ற பன்னிருபதினெட்டிரு நூற்றிருபத்தா றெழுத்துமெ னக்கொள்க. அவையாவன- ககரமுதல் னகரமீறாய்க்கிடந்த பன்னிரு பதினெட்டிருநூற் றிருபத்தாறெழுத்து மெனக்கொள்க. என்னை "உ யிரீராறேமெய்ம்மூவாறே, யம்மூவாறுமுயிரொடுயிர்ப்ப, விருநூற்றிரு பத்தாறுயிர்மெய்யே,, "புள்ளியில்லாவெல்லாமெய்யு, முருவுருவாகி யகரமொடுயிர்த்தலு, மேனையுயிரோடுருவுதிரிந்துயிர்த்தலு, மாயீரியலவு யிர்த்தலாறே,, "மெய்யின் வழியதுயிர்தோன்றுநிலையே,, எனறாராகலின் மைதீருயிர்மெய்யென்று சிறப்பித்தவதனால் ஏறியவுயிரளவேயுயிர்மெ ய்க்குமளவெனக்கொள்க. என்னை "உயிர்மெய்களவு முயிரளவென்ப,, என்றாராகலின் மதிமருட்டும்- நுண்ணிடையாயென்பது மகடூஉமுன்னி லை. என்னை "இடம்படமெய்ஞ்ஞானங் கற்பினுமென்றும், அடங்காதா ரொன்றுமடங்கார் தடங்கண்ணாய், உப்பொடுசெய்தாறயிர்காயம் பெய்த டினும், கைப்பறுபேய்ச்சுரைக்காய்,, எனப்பிறருந்தடங்கண்ணாயென் றும்மகடூஉமுன்னிலை சொன்னருமுளரெனக்கொள்க. மதியென்பதிங்கு ப்பிறை- அஃது "இருகோட்டொருமதி யெழில்பெறவிலைச்சினை- என்று ம்போலக்கொள்க. அல்லதூஉம் அறிவினைமயக்குஞ் சிறுநுதன்முதலா கியவுறுப்புகளை யுடையாயென்றவாறாம். அறிஞருரைத்த அளபுமெனப து புலவராற்சொலலப்பட்ட அளபெடைகளும். எ-று. அளபெனினும் அளபெடையெனினும்- புலுதமெனினுமொக்கும். என்னை - அளபேபு லுதமாயிருபெயரு -- மளபெடையென்பவறிந்திசினோரே என்றாகலி

ன்- அவைபோக்கிச்சொல்லுதும். அசைக்குறுப்பாவனவென்பது- இப்
பதின்மூன்று திறத்தெழுத்து மசைக்குறுப்பாமெழுத்து. எ- று. ஏகா
ரமீற்றசை. தோற்றமெனினுமமையும் என்னை-தோற்றம் வினாவேயிரங்
கலெண்ணே, யீற்றசையிவ்வைந்தேகாரம்மே - என்றாராகலின். என்
னை- குறினெடிலளபெடையு யிருப்புயிர்மெய், வலியமெலியவிடைமை
யோடாய்தம்- இ- உ-ஐ- யென்மூன்றன்குறுக்கமோ- டப்பதின்மூன்று
மசைக்குறுப்பாகும்- என்றார். காக்கைபாடினியாருமெனக்கொள்க. இ
னிமூவுயிர்க்குறுக்கமும் - அளபெடைகளுமாமாறுசொல்லுதும். அவற்
றுட்குற்றியலுகரம்வருமாறு. நெடிற்கீழும் - நெடிலொற்றின்கீழும்- கு
றிலிணைக்கீழும் குறிலிணையொற்றின்கீழும்- குறினெடிற்கீழும்- குறினெ
டிலொற்றின்கீழும்- குற்றொற்றினகீழுமென் றிவ்வேழிடத்தாறு வல்லெ
ழுத்தினையு மூர்ந்துஉகரம்வந்தால் - அதுகுற்றியலுகரமென்று வழங்க
ப்படுமெனக்கொள்க.. என்னை நெடிலேகுறிலிணை குறினெடிலென்றிவை
யொற்றொடுவருதலொடு குற்றிறுதியென் - றேழ்குற்றுகரக்கிட னென
மொழிப- எழுவகையிடத்துங்குற்றியலுகரம் - வழுவின்றிவருஉம் வல்
லாறூர்ந்தே- என்றாராகலின். வ- று. நாகு- காசு- காடு- காது - காபு-
காறு- எனநெடிற்கீழாறுவல்லெழுத்தினையுமூர்ந்து குற்றியலுகரம்வந்த
வாறும்- நாக்கு- காச்சு- காட்டு- காத்து - காப்பு - காற்று - எனநெடி
லொற்றின்கீழாறு வல்லெழுத்தினையுமூர்ந்து குற்றியலுகரம்வந்தவாறு
ம்- வரகு- முரசு- முருடு- மருது- தூரபு- கவறு-எனக்குறிலிணைக்கீழா
றுவல்லெழுத்தினையு மூர்ந்துகுற்றியலுகரம்வந்தவாறும்- அரக்கு பொ
ரிசசு தெருட்டு குருத்து பொருப்பு சிரற்று எனக்குறிலிணை யொற்றின்
கீழாறுவல்லெழுத்தினையுமூர்ந்து குற்றியலுகரம்வந்தவாறும்- அசோகு
பலாசு மலாடு கெடாது புதாபு விராறு எனக் குறினெடிற்கீழாறு வல்
லெழுத்தினையுமூர்ந்து குற்றியலுகரம்வந்தவாறும்- நமாக்கு தடாச்சுப
ளுட்டு கடாத்து புதாப்பு விராற்று எனக்குறினெடி லொற்றின்கீழாறு
வல்லெழுத்தினையுமூர்ந்து குற்றியலுகரம்வந்தவாறும்- அக்கு கச்சு க
ட்டு கத்து கப்பு சற்று எனக்குற்றொற்றின்கீழாறு வல்லெழுத்தினையு
மூர்ந்து குற்றியலுகரம்வந்தவாறுங்காண்க. இனிக்குற்றியலுகரம் அறு
வகைப்படுமென்பாருமுளர். அவையாவன- ஈரெழுத்தொருமொழி உ
யிர்த்தொடர்மொழி இடைத்தொடர்மொழி ஆய்தத்தொடர்மொழி வ
ன்றொடர்மொழி மென்றொடர்மொழி என்றிவைஎன்னை- ஈரெழுத்தொ
ருமொழி யுயிர்த்தொடரிடைத்தொட ராய்தத்தொடர்மொழி வன்றொ
டர்மென்றொட ராயிருமூன்றேயுகரங்குறுகிடன் என்றாராகலின். இனி
க்குற்றியலிகரம்வருமாறு உகரந்திரிந்துந்திரியாதும் யகரமோடிணையின்

ணவ்ந்த இகரங்குற்றியலிகரமென்று வழங்கப்படும். என்னை வல்லெழுத்தாரேறெழுவகைபிடத்து முகரமனையாம் யகரமோடியையி னிகரமுங்குறுகுமென்மனார்புலவர் யகரம்வரும்வழியிகரங்குறுகு முகரத்தினவிதுவரத்தோன்றாது என்றாராகலின். வ - று. நாகியாது காசியாது நாடியாது காதியாது காபியாது காறியாது எனவரும் ஒழிந்தனவுமிவ்வாறேயொட்டிக்கொள்க. இனித்திரியாதுவந்த குற்றியலிகரம் வருமாறு கேண்மியா சென்மியாவெனக்கொள்க. என்னை குற்றியலிகரநிற்றல்வேண்டும் யாவென்சினைமிசையுரையசைக்கிளவிக் காவயின்வரூஉ மகரமூர்ந்தே" என்றாராகலின். இனிஐகாரக்குறுக்கத்திற்குச் சொல்லுமாறு. அளபெடுத்தற்கண்ணும், தனியேசொல்லுதற்கண்ணு மன்றியல்லாதவழி வந்தவைகாரந் தன்னளவிற்சுருங்கி ஒன்றரைமாத்திரையும், ஒருமாத்திரையுமாகக் குறுகுமெனக்கொள்க. அவைகுறுகுமிடத்து மொழிமுதலிடைகடையென மூன்றிடத்துங்குறுகும். என்னை அளபெடைதனியிரண்டல்வழி- ஐ ஔ, வுளதாமொன்றரை தனிமையுமாகும்" என்றாராகலின். (வ- று) ஐப்பசி மைப்புறம் மடையன் இடையன் குவளை தவளை தினை பனை எனமுதலும், இடையும் கடையுங்குறுகிய வாறுகண்டுகொள்க. என்னை "மொழிமுதலிடைகடை யெனமூன்றிடத்து, மழியாவைகாரங்குறுகும்மே" என்றாராகலின். இனி அளபெடைக்குச்சொல்லுமாறு அளபெடையிரண்டுவகைப்படும் உயிரளபெடையும், ஒற்றளபெடையுமென. என்னை "உயிரளபெடையு மொற்றளபெடையுமென், றுயிரெண்டன்பவளபெடைதாமே" என்றாராகலின். அவற்றுள் உயிரளபெடைக்குச்சொல்லுமாறு உயிருள்நெட்டெழுத்தேழு மளபெடுக்கும். அவையளபெடுக்குமிடத்து ஐகாரம் இகரத்தோடும், ஔகாரம் உகரத்தோடும். அளபெடுக்க ஒழிந்தனவுந்தமக்கினமாகியகுற்றெழுத்தோடளபெடுக்குமெனக்கொள்க. என்னை "குன்றிசைமொழிவயினின்றிசைநிறைக்கு, நெட்டெழுத்திம்பரொத்தகுற்றெழுத்தே" "ஐ ஔ வென்னுமாயீரெழுத்திற், கிகரவுகர மிசைநிறைவாகும்" என்றார். தொல்காப்பியனார். அவைநான்கிடத்தும்வந்தளபெடுக்கு என்னை தனிநிலைமுதனிலை யிடைநிலையீறென, நால்வகைப்படு மளபாய்வருமிடனே" என்றாராகலின். (வ- று) ஆஅ ஈஇ ஊஉ ஏஎ ஐஇ ஓஒ ஔஉ என இவையேழுந் தனிநிலையளபெடை- ஆஅரிடம் ஈஇரிலை ஊஉரிடம் ஏஎரிகள் ஐஇயவி ஓஒரிகள் ஔஉவியம். என இவையேழுமுதனிலையளபெடை. படாஅகை பரீஇயம் கழூஉமணி பேஎரம் வளைஇயம் புரோஒசை அனௌஉகம் என இவையேழுமிடைநிலை யளபெடை. கடாஅ- குரீஇ- கழூஉ மிலேஎ கடைஇ அரோஒ அனௌஉ என இவையேழு மிறுதிநிலையளபெடை. உயிரளபெடைஎழுத்துநோக்கவேழாம். இடநோக்கநான்காம். எழுத்துமிடமுமுறழ்ந்துநோ

க்கிருபத்தெட்டாமெனக்கொள்க. இனி ஒற்றளபெடைக்குச் சொல்லுமாறு. ஒற்றுகளுள் ஙஞணநமன வயலள வாய்தமென்னும் பதினொன்றும், குறிற்கீழும், குறிலிணைக்கீழும் வந்தளபெடுக்கு மெனக்கொள்க. என்னை "ஙஞணநமனவயலளவாய்த, மெனுமிவையீரிடத்தள பெழுமொரோவழி" வன்மையொடு ரஃகான் ழஃகானொழிந்தாங், கன்மையாய்தமோடளபெழுமொரோவழி" என்றாராகலின். வ- று. மங்ங்கலம் மஞ்ஞ்சு மண்ண்ணு பந்த்து அம்ம்பு மின்ன்னு தெவ்வ்வர் வெய்ய்யர் செல்ல்க கொள்ள்க எஃஃகு எனக்குறிற்கீழ்ப் பதினொரொற்று மளபெழுந்தவாறு கண்டுகொள்க. ஙங்ஙம் முரஞ்ஞ்சு முரண்ண்டு பருந்ந்து அரும்ம்பு முரன்ன்று குரவ்வ்வை அவய்ய்யர் குரல்ல்பன் திரள்ள்கள் வரஃஃகு எனக்குறிலிணைக்கீழ்ப் பதினொரொற்று மளபெழுந்தவாறு கண்டுகொள்க. இவ்விருபத்திரண்டு புள்ளியளபெடையுஞ் செய்யுளகத்தல்லது* பரவைவழக்கினுள் வாராவெனக்கொள்க. என்னை "மாத்திரைவகையாற் றளைதபக்கெடாநிலை, யாப்பழியாமையென் றளபெடைவேண்டும்" என்றாராகலின். அறிஞருணர்த்தவளபுமென்று சிறப்பித்தவதனால் குற்றெழுத்தும் ஒற்றளபெடையும் ஓரோவொன்று ஒருமாத்திரை நெட்டெழுத்திரண்டுமாத்திரை இயல்பளபெடை மூன்றுமாத்திரை ஆய்தமும் மெய்யும் குற்றியலிகரமும் குற்றியலுகரமும் ஓரோவொன்றரைமாத்திரை ஐகாரக்குறுக்கமும் ஔகாரக்குறுக்கமும் ஓரோவொன்றரைமாத்திரை மகரக்குறுக்கமும் ஆய்தக்குறுக்கமுமோரோவொன்று கான்மாத்திரை. என்னை "ஒன்றிரண்டொரு மூன்றொன்றரையாகா லென்றனர்பொழுதிலையிமைநொடியளவே" கண்ணிமைகைந்நொடியளவேமாத்திரை நுண்ணிதினுணர்ந்தோர்கண்டவாறே" ஒற்றுக்குமாத்திரையொன்றேயளபெழுந்தாற் றெற்றக்குறிலதுவேயாம் உளனல்காலேயூன்றலனாயே முறுகக்கண்முக்கால் விடுத்தலொன்றே" என்றார்பிறருமெனக்கொள்க. (௪)

குறிலேநெடிலே குறிலிணையேனைக் குறினெடிலே
நெறியேவரினு நிரைந்தொற்றடுப்பினு நேர்நிரையென்
றறிவேய்புரையுமென் றோளியுகாரமாழிவெம்மாவேல்
வெறியேசுறுசிறம்பின்டோடவிளாமென்றுவேணுவரோ.

இ- கை. நிரனிறைப்பொருள்கோள் வகையானேரசையுநிரையசையுமாமாறும் அவற்றிற்குதாரணமாமாறும் உணர்த்துற்று. இ - ள். குறிலேநெடிலே குறிலிணையேனைக் குறினெடிலே நெறியேவரினு நிரைந்தொற்றடுப்பினு நேர்நிரையென்றறி. எ- து. குற்றெழுத்துத்தனியேவரினும் நெட்டெழுத்துத்தனியேவரினும் குற்றெழுத்தொற்றடுத்து வரினும நெட்டெழுத்தொற்றடுத்துவரினும நேரசையாம் குறிலிணைந்துவரினும்

*பரவைவழக்கென்பது—உலகவழக்கு.

குறிநெடிலிணைந்துவரினும், குறிலிணைந்தொற்றடுத்துவரினும், குறிநெடிலிணைந்தொற்றடுத்துவரினும், நிரையசையாம். என்னை "நெடில்குறியாய்நின்றுமொற்றடுத்து, நடைபெறுநேரசை நால்வகையானே "குறிலிணைகுறிநெடிதனித்து மொற்றடுத்து, நெறிமையினான் காய்வருநிரையசையே" என்றாராகலின். வேயபுரையுமென்றேனி. எ-து- மகடூஉமுன்னிலை, உதாரணமாகி வெள்வேல்வெறியே சுறாநிறம்விண்டோய் விளாமென்று வேண்டுவரோ.எ-து. நேரசைக்குதாரணம்-ஆ- பூ- வெள்- வேல்-ம- நிரையசைக்குதாரணம். வெறி- சுறா- நிறம் - விளாம் - எனவுஞ்சால்லுவாபுலவா.எ-று. அகலம்- உரையிற்கொள்க. அகலமெனினும்,விரித்தியுரையெனினு மொக்கும். என்னை" அகலமென்ப தாசறக்கிளப்பிr, விட்லமின்றி விரித்துரைப்பதுவே. எனறாராகலின். விண்டோய்விளாமெனறு சிறப்பித்தவதனால் நேரசை ஓரலகுபெறும் நிரையசைஈரலகுபெறுமெனக்கொள்க. வ-று- ஆ - எனத்தனிநெடில்நேரசையாயினவாறும், பூ- எனத்தனிக்குறில் நேரசையாயினவாறும், வெள் - எனக்குத்தழுதொற்றடுத்து நேரசையா யினவாறும், வேல்எனநெட்டெழுத்தொற்றடுத்து நேரசையாயினவாறும், வெறி-எனக்குறிலிணைந்து நிரையசையாயினவாறும், சுறா எனக்குறிநெடிலிணைந்து நிரையசையாயினவாறும. நிறம்- எனக்குறிலிணைந்தொற்றடுத்துநிரையசையாயினவாறும், விளாம்- எனக்குறிநெடிலிணைந்தொற்றடுத்து நிரையசையாயினவாறுங்கண்க. இவற்றிறகுச்செய்யுள்வருமாறு. ஆ" போது சாந்தம் பொற்பவந்தி, ஆதிநாதற்சேர்வோர, சோதிவானந்துன்னுவாரே" இதுநேரசைநான்கும்வந்தசெய்யுள். ஆ" அணி யிழ லசோ கமர்ந் தருணெறி நடாத்திய, மணிதிகழவிரொளிவரதனைப், பணிபவர் புவநனி பரிசறுப்பவரே" இதுநிரையசை நான்கும் வந்தசெய்யுள். குறிலே நெடிலே யென்னுமிக்களைதனனேயே. யிலக்கியமாகவலகிடினுமிழுக்காது. என்னை "குறிலேநெடிலே குறிலிணைகுறிநெடில், லொற்றொடுவருதலொடு மெய்ப்படநாடி,நேர்நிரையுமென்றுசிற்பெயரே" என்றார்தொல்காப்பியனார். "கோழிவோன் நேரசைநிரையசை, யாழ்புனல்வாழ்க்கை வெறிசுறாநிறங்குரால்," என்றுதாரணமெடுத் தோதினாருமுளரெனக்கொள்க. (ரு)

ஈரசைநாற்சீரகவற்குரியவெண்பாவினவாம்
நேரசையாலிற்றமூவசைச்சீர்நிரையாலிறுப
வாரசைமென்றலைமாதேவருத்தவஞ்சிக்குரிசசீர்
ஓரசையேநின்றுஞ்சீராம்பொதுவொருநாலசையே.

இ-கை- அவ்வசைகளானாகிய சீர்களதுபெயர் வேறுபாடுணர்த்து-ற்-ஈரசைநாற்சீரகவற்குரிய- எ-து இரண்டசையினானாகிய நான்குசீரு

மாசிரியவுரிச்சீரெனப்படும்.எ-று: அகவலெனினும், ஆசிரிய மெனினு
மொக்கும். என்னை" அகவலென்பதாசிரியப்பெயரோ" என்றாராகலின்.
வெண்பாவினவாம்நேரசையாலிற்ற மூவசைச்சீர்.எ-து. நேரசையிறுதி
கிய மூவசைச்சீர்நான்கும் வெண்பாவுரிச்சீரெனப்படும். எ-று. நிரைய
லிறுப- வகுத்தவஞ்சிக்குரிச்சீர்,எ-து. நிரையசையிறுதியாகிய மூவசை
ச்சீர்நான்கும் வஞ்சியுரிச்சீரெனப்படும். எ- று. வாரசைமென்மூலைய
தே-எ-து. மகவே௳மூன்னிலை. ஓரசையேநின்றுஞ்சீராம்,எ-து. ஓரோவிட
த்து நேரசைதானே நின்றுஞ்சீராம். நிரையசைதானே நின்றுஞ்சீராம்
அவ்வயசைச்சீரெனப்படும். எ-று. பொதுவொருநாலசையே.எ-து. நால
சையினாகியசீர்பொதுச்சீரெனப்படும்.எ-று. நான்கென்பதனை யெல்
லாவற்றோடுங்கூட்டி மத்திமதீபமாகப் பொருளுரைத்துக்கொள்க.என
னை" ஈரசைகூடியசீரியச்சீரவை, யீரிரண்டென்பரியல் புணர்ந்தோர்,மே
மூவகைச்சீருரிச் சீரிருநான்கினு' ணேரிறுநான்கும் வெள்ளையல்லனப
விநுள்வஞ்சியின்பாற்பட்டனவே" "நாலசையானுநடைபெறு மோரசை
ச், சீர்நிலையெய்தலுஞ்சிலவிடத்துளவே" என்றார்காக்கைபாடினியார்.

தேமா புளிமா கருவிளங் கூவிளஞ் சீரகவற்
காமாங் கடைகா யடையின் வெண்பாவிற்கந்தங்கனியா
வாமாண்கலையல்குன்மாதேவகுத்தவஞ்சிக்குரிச்சீ
நாமாண்புரைத்தவசைச்சீர்க்குதாரணநாண்மலரே,

இ-கை. முறையானே முதனான்குசீருக்கு முதாரணமாமாறுணர்
து- ற்று- தேமா புளிமா கருவிளங் கூவிளஞ் சீரகவற்காம்.எ- து- நே
நேர்- நிரைநேர்- நிரைநிரை-நேர்நிரையாகிய தேமா- புளிமா- கருவிளம்
று- ஆங்கடைகாயடையின் வெண்பாவிற்கென்பது- அவைகடையிற்கா
யென்னுஞ் சொற்பெற்று- தேமாங்காய் - புளிமாங்காய் - கருவிளங்காய்
கூவிளங்காய் எனவரு நான்குசீரும் வெண்பாவுரிச் சீருக்குதாரணமாம்.
எ-று. அந்தங்கனியா- வகுத்தவஞ்சிக்குரிச்சீர்.எ-து. அவ்வீற்றின்கட்க
னியென்னுஞ் சொற்பெற்றுத்தேமாங்கனி- புளிமாங்கனி- கருவிளங்கனி
கூவிளங்கனிஎனவரு நான்குசீரும்வஞ்சி யுரிச்சீருக்குதாரணமாம்.எ-று
வாமாண்கலையல்குன்மாதே.எ-து,மகவே௳மூன்னிலை.நாமாண்புரைத்தவசை
சச்சீர்க்குதாரணநாண்மலரே. எ-து. ஓரோவிடத்தாமென்றுரைக்கப்பட்ட
ஓரசைச்சீருக்குதாரணம். நாள்என்பதூஉம்- மலர்என்பதூஉம்- ஆமென்
றவாறு. நாள்-எ-து. நேரசைச்சீருக்கும், மலர்-எ-து - நிரையசைச்சீரு
க்கும் உதாரணமாம். ஆமென்பதனை எல்லாவற்றோடுங் கூட்டி மத்திமதீ
பமாகப் பொருளுரைத்துக்கொள்க. வெண்டுறை"அம்பவள்வரிநெடுங்
கணைப்வஞ்சிக், கொம்பவள்கொடிமருங்குல் கோங்கின், அரும்பவன்

லையொக்குமேயொக்கும், கரும்பவள்வாயிற்சொல்" என்னும்பொய்
யார் வாக்கினுள்ளொக்குமென்பதனை எல்லாவற்றோடுங்கூட்டிப்பொரு
ளாகத்துக்கொண்டாற்போலக்கொள்க. (௧)

தண்ணிழறண்பூநறும்பூநறுநிழற்றாநான்கும்
எண்ணிருநாலசைச்சீர்வந்தருகுமினியவற்றுட்
கண்ணியபூவினங்காய்ச்சீரனையகனியொடொக்கும்
ஒண்ணிழற்சீரசைச்சீரியற்சீரொக்குமொண்டொடியே.

இ-கை. பொதுச்சீருக்குதாரணமாமாறும், அவற்றைத்தண்ணும்பொ
துச்சீரும், அசைச்சீரும, செய்யுளகத்து வருங்காற்றளைவழங்குமுறை
மையு முணர்த்து-ற். தண்ணிழல்- அருகும்-எ-து. தேமா- புளிமா- க
ருவிளம்- கூவிளம்-என்னுமாநான்கினோடும். தண்ணிழல்- தண்பூ-நறும்பூ
நறுநிழலென்னுநான்கினையும், முறைபானேதொணாநுறழ்ந்தாற் பதி
னாலசைச்சீருக்குதாரணமாம.எ-று. தேமா புளிமா- கருவிளம - கூவி
ளம் என்பன அதிகாரத்தால் வருவித்துரைக்கப்பட்டன. அருகுமென்
றதனால் அசைச்சீர்செய்யுளகத்து அருகியன்றி வாராவெனக்கொள்க.வ-று. தே
மாந்தண்ணிழல்-புளிமாந்தண்ணிழல்- கருவிளந்தண்ணிழல்- கூவிளந்த
ண்ணிழல.எ-ம்- தேமாந்தண்பூ-புளிமாந்தண்பூ -கருவிளந்தண்பூ-கூவிள
ந்தண்பூ.எ-ம.தேமாநறும்பூ புளிமாநறும்பூ-கருவிளநறும்பூ-கூவிளநறும்பூ
எ-ம்- தேமாநறுநிழல்.புளிமாநறுநிழல்- கருவிளநறுநிழல- கூவிளநறுநிழ
லெனவுங்கொள்க. இனியவற்றுள்- காய்ச்சீரனைய-எ-து. அந்நாலசைச்
சீர் பதினாறனுள்ளும், பூவென்னுஞ்சொல்லிறுதியாகிய நேரீற்றுப்பொ
துச்சீரொடும, காயென்னுஞ் சொல்லிறுதியாகிய வெண்பா வுரிச்சீரோ
போலக் கொண்டுவருஞ்சீர் முதலசையோடொன்றி வந்து வெண்சீர் வெ
ண்டளையாகவும், ஒன்றாது கலித்தளையாகவும, வழங்கப்படும,எ-று- க
னியொடொக்கு மொண்ணிழற்சீர்.எ-து- நிழலென்னுஞ்சொலலிறுதியா
ய நிரையீற்றுப்பொதுச்சீரொடும், கனியென்னுஞ்சொல்லிறுதியாகிய
வஞ்சியுரிச்சீரோபோலக் கொண்டுவருஞ்சீர்முதலசையொடொன்றினும்
ஒன்றாவிடினும, வஞ்சித்தளையென்றுவழங்கப்படும்.எ- று- அசைச்சீரிய
ற்சீரொக்கும்.எ- து- ஓரசைச்சீர் ஆசிரியவுரிச்சீரோபோலக் கொண்டுவ
ருஞ்சீர் முதலசையோடொன்றுவது ஆசிரியத்தளையாகவும், ஒன்றாது
இயற்சீர்வெண்டளையாகவும் வழங்கப்படும.எ-று- இயற்சீரொன்றினும், ஆசி
ரியவுரிச்சீரொன்றினுமொக்கும். என்னை "இயற்சீரல்லாமாசிரியவுரிச்சீ
ரொன்றாகாவின் ஒண்டளைக்கே.எ-து ஒள்ளியதளைவழங்குமிடத்து-
-று. ஒண்டொடியெனபரனே இறுதிவிளக்காகப் பொருளுணர்த்துக்சொ
ல். கண்ணியபூவினமென்று சிறப்பித்தவதனால் வெண்பாவினுள் நாலசை
ச்சீர்வாரா. ஆசிரியத்துள்ளுங் குற்றுகரம் வந்துழியன்றிவாரா. கலி

யினுள்ளும் பெரும்பான்மையுங் குற்றுகரம் வந்துழியன்றிவாரா. வஞ்சி
யுட் குற்றுகரம் வாராதேயும் வரப்பெறும். வஞ்சியுள் இரண்டு நாலசைச்சீரோ
ரடியுள் ளொருங்கிக்கண்ணுற்றுநிற்கவும் பெறும். அல்லனவற்றுள் பெரு
பான்மையு மோரடியுளொன்றன்றிவாரா, இரண்டுவரினுங்கண்ணுற்று
ல்லா. பாவினத்துள்ளும் பயின்றுவாராவெனக்கொள்க. ஒண்ணிழற்சீ
ன்று சிறப்பித்தவதனால் நிழலென்னுஞ் செல்லிறுதியாகிய நிரையீற்று
பொதுச்சீரொட்டும், வஞ்சியுளல்லதுவாராவெனக்கொள்க. என்னை "நா
லசையானடைபெற்றன வஞ்சியு- ளீரொன்றிணைதலு மேனுழியொன்றுமெ
ன், றாகலுமந்நிரையசைவந்தன, கூறியவஞ்சிக்குரியனவாதலு, மா
மென்பவறிந்திசினோரே" என்றார் காக்கைபாடினியார். இனி ஒருசாரா
வெண்பாவினுளளபெழுந்தால் நாலசைச்சீர் வருமென்பாருளராயினும்
அவ்வாறலகிட்டுதாரணவாய்ப் பாட்டாலோசை யூட்டும்பொழுது செ
பலோசைபிழைக்குமென்பதூஉம், ஆண்டுச்சீருந்தளையுஞ்சிதைபவா
மையானளபெடுப்பனவுமல்ல. அளபெடுப்பினுமளபெடைகள் அல
காரியம் பெறுவனவுமல்லவென்பதூஉம், காக்கைபாடினியார்முதலாகி
தொல்லாசிரியர் துணிவு, அதுவேஇந்நூலுடையாருக்குமுடன்பாடு. (மு

குன்றக்குறவனகவல்பொன்னாரம்வெண்பாட்டுவஞ்சிக்
கொன்றுமுதாரணப் பூந்தாமரையென்பவோரசைச்சீர்
நன்றறிவாரிற்கயவரும் பாலொடுநாலசைச்சீராக
கன்றதென்னூரள்ளர்ப்பள்ளத்திலேடங்கண்வானத்துமே.

இ-சை. முறைபானே ஐந்துவகைப்பட்ட சீராறும், வந்தவிலக்கி
யங்கட்கு முதனினைப்புணர்த்து - ற்று. குன்றக்குறவ னகவல். எ-து. ஆ
குன்றக்குறவன் காதன்மடமகள், வரைபரமகளிர் புரையுஞ்சாயல, ஐ
யளருப்பியமூலையள், செய்யவாயினள் மார்பினள்சுணங்கே" இச்செய்யு
ளில் ஆசிரியவுரிச் சீர்நான்கும் வந்தவாறுகண்டுகொள்க. பொன்னா
வெண்பாட்டென்பது "பொன்னாரமார்பிற் புனைகழற்காற்கிள்ளிபேர், 
ன்னேனென்றாழலக்கை பற்றினேற் - கென்னோ, மனையுடுவாயெல்ல
மல்குநீர்க்கோழிப், புனலூடன்பேரோவரும்" இச்செய்யுளில் வெண்பா
ரிச்சீர்நான்கும் வந்தவாறுகண்டு கொள்க. வஞ்சிக்கொன்றுமுதாரண
பூந்தாமரையென்ப. எ-து. "பூந்தாமரைப்போதலமரத், தேம்புனலிடை
மீன்றிரிதரும், வளவயலிடைக்களவயின்மகிழ், வினைக்கம்பலைமனைச்
சிலம்பவும், மனைச்சிலம்பிய மணமுரசொலி, வயற்கம்பலைக் கயலார்ப்
ம், நாளும், மகிழுமகிழ்தூங்கூரன், புகழ்தலானாப் பெருவண்மையனே
இச்செய்யுளில்வஞ்சி யுரிச்சீர்நான்கும் வந்தவாறுகண்டுகொள்க. ஓரசை
சீர் நன்றறிவாரிற்கயவரும் பாலொடென்பது. எ-து. "நன்றறிவாரிற் கய
ர்திருவுடையர், நெஞ்சத்தவலமிலர்," "பாலொடுதேன் கலந்தற்றே பல

பொழி, வாவெயி றுறியசீர்,, என்றுமிச் செய்யுட்களில் இவர் எ-ம். நீர் எ-ம். அசைச்சீர்களாயினவாறு கண்டுகொள்க. நாலசைச்சீர்க்கண் ஒன்றுக்கு உதாரணம் பள்ளத்திடைப்பங்கண் வரும் உதாரணத்துள் காண்க. எ-து. "அள்ளற்பள்ளத் தகனசோணாட்டு, வேங்கைவாயில் விபன்குன்றூரன்,, என்னும் பழம் பாட்டினுள் ஓரடியுளிரண்டு நாலசைச்சீர் வந்தவாறு கண்டுகொள்க. "தூங்கெண்வான்றதடாராசரும், வெங்களியானை வேல்வேந்தரும், வடிவார்கூந்தன் மங்கையரும், கடிமலரேந்திக்கதழ்ந்திறைஞ்சச், சிங்கஞ்சுமந்த மணியணைமிசைக், கொங்கவிரசோகின் குளிர்நிழற்கீழ்ச், செழுநீர்ப்பவளத் திரள்காம்பின், முழுமதிபுரையு முக்குடைநிழல், வெங்கண்வினைப் பகைவிளிவெய்தப் பொன்புனைநெடுமெதில் புடைவளைப்ப, அனந்தசதுட்டயம்மைவெய்த, நனந்தலையுலகுடனவைநீங்க, மந்தமாருதமருங்கசைப்ப, அந்தரதுந்துபி நின்றியம்ப, இலங்குசாமரை யெழுந்தலமர, நலங்கிளர்பூமழை நனிசொரிதர, இனிதிருந், தருணெறிநடாத்திய வாதிதன, திருவடிபரவுதுஞ்சித்தி பெறற்பொருட்டே,, இச்செய்யுளில் நாலசைச்சீர் பதினாறும் அடிதோறுமுதற் கண்ணேவந்த வாறுகண்டுகொள்க. இதனுள் - நேரீற்றுப்பொதுச்சீர்நின்று தன்வருஞ்சீர் முதலசையோடொன்றுவது வெண்சீர்வெண்டளையாகவும், ஒன்றாதது கலித்தளையாகவும், நிரையீற்றுப்பொதுச்சீர்நின்று தன்வருஞ்சீர் முதலசையோடொன்றினும்; ஒன்றாவிடினும் வஞ்சித்தளை யாகவுங்கொண்டு வழங்கப்படும். எ-று. இவ்வாறுபிறரும் "குறுகூதிரபண்புதோழி, விளியிசைமுத்துற மென்மையெல்லார், தெளியவந்த செந்துறைச் செந்துறை,, என்றுதாரண மெடுத்தோதினாரெனக்கொள்க. அன்றெனதென்றொன்பதை அன்றவென்றெனக்கொள்க. (௧௰)

தண்சீர் தனதொன் றிற்றன் றளையாந்தணவா தவஞ்சி
வண்சீர் விகற்பமும்வஞ்சிக குரித்துவல்லோர்வகுத்த
வெண்சீர் விரவுபடங் கலித்தளையாய் விடுமவெண்டளையாம்
ஒண்சீரக வலுரிச்சீர் விகற்பமுமொன்றுதலே.

இ-கை. நிறைசீரினீற்றசையும், வருஞ்சீரின்முதலசையுந் தம்முளொன்றுவதும், ஒன்றாததுமாகிய வேழ்தளையுமாமாறுணர்த்து-ற்று. தண்சீர் தனதொன்றிற்றன்றளையாம். எ-து. தன்சீர்நின்று தன்வருஞ்சீர் முதலசையோடொன்றுவது தன்றளையாம். எ-று எனவே ஆசிரியவுரிச்சீர் நின்று தன்வருஞ்சீர் முதலசையோடு நேராயொன்றுவது நேரொன்றாசிரியத்தளையாம். நிரையாயொன்றுவது நிரையொன்றாசிரியத்தளையாம். வெண்பாவுரிச்சீர்நின்று தன்வருஞ்சீர்முதலசையோடொன்றுவது வெண்சீர் வெண்டளையாம். வஞ்சியுரிச்சீர்நின்று தன்வருஞ்சீர் முதலசையோடொன்றுவது ஒன்றிய வஞ்சித்தளையாம். எ-று. தணவாதவென்று மிகுத்து

ச்சொல்லியவதனால் தன்சீர்நின்றுபிறிதாகிவருஞ்சீர் முதலசையோடொன்றுவதூஉந் தன்றளையே சிறப்பின்றாயினு மெனக்கொள்க. வஞ்சிவண்சீர்விகற்பமும் வஞ்சிக்குரித்து. எ-து. வஞ்சியுரிச்சீர்நின்று தன்வருஞ்சீர்முதலசையோடொன்றாததூஉம், ஒன்றாதவஞ்சித்தளையாம் -எ- று வண்சீரொன்று சிறப்பித்தவதனால் வஞ்சியுரிச்சீர்நின்று பிறிதாகிவருஞ்சீர்முதலசையோ டொன்றாததூஉம், ஒன்றாதவஞ்சித்தளையே சிறப்பின்றாயினுமெனக்கொள்க. வல்லோர்வகுத்த வெண்சீர்விகற் பங்கலித்தளையாய்விடும். எ- து. வெண்பாவுரிச்சீர்நின்று தன்வருஞ்சீர் முதலசையோடொன்றாதது கலித்தளையாம். எ-று. வல்லோர்வகுத்தவென்று சிறப்பித்தவதனால், வெண்பாவுரிச்சீர்நின்று பிறிதாகிவருஞ்சீர் முதலசையோடொன்றாததூஉம், கலித்தளையே சிறப்பின்றாயினு மெனக்கொள்க, வெண்டளையாமொண்சீரகவலுரிச்சீர் விகற்பமும். எ-து. ஆசிரியவுரிச்சீர் நின்று தன்வருஞ்சீர் முதலசையோடொன்றாதது இயற்சீர்வெண்டளையாம். எ-று. ஒண்சீரொன்று சிறப்பித்தவதனால் ஆசிரியவுரிச்சீர்நின்று பிறிதாகிவருஞ்சீர் முதலசையோடொன்றாததூஉம், இயற்சீர்வெண்டளையே சிறப்பின்றாயினுமெனக்கொள்க, ஒண்ணுதலெனபது மகடூஉமுன்னிலை. என்னை "இயற்சீரிரண்டு தலைப்பெயன்முன், விகற்பமிலவாய் விரவிதடப்பி, னதற்பெயராசிரியத்தளையாகும்,, வெண்சீரொன்றலுமியற்சீர்விகற்பமு, மென்றிரண்டென்ப வெண்டளைக்கியல்பே "இயற்சீரிரண்டுதலைப்பெயரம்முன், விகற்பவகையது வெண்டளையாகும் "உரிச்சீரதனுளுரைத்தமையன்றிக், கலக்குந்தளையெனக் கண்டிசினோரே, "வெண்சீரிறுதிக்கிணையசைபின்வரக், கண்டனவெல்லாங்கலித்தளையாகும்,, "தன்சீரிரண்டு தலைப்பெயறம்முனோத், தொன்றினுமொன்றா தொழியினும்வஞ்சியின், பந்தமெனப்பெயர் பகரப்படுமே,, என்றார் காக்கைபாடினியார். (௰)

திருமழையுள்ளாரகவல்சிலைவிலங்காகும்வெள்ளை.
மருளறுவஞ்சிமந்தாநிலம்வந்துமைதீர்கலியின்
தெரிவுறுபந்தநல்லாய்செல்வப்போர்க்கதக்கண்ணனென்ப
துரிமையின்கண்ணின்மையோரசைசீருக்குதாரணமே.

இ-கை-அந்தளைகளான்வந்த இலக்கியங்கட்குமுதனினைப்புணர்த்துற்று. திருமழையுள்ளாரகவல்.எ-து. "ஆதிருமழைதலைஇயவிருணிறவிசும்பின்,விண்ணதிரிமிழிசை கடுப்பப்,பண்ணமைந்தவர்தேர்சென்றவாறே" இதுநிரையொன்றாசிரியத்தளையான்வந்தசெய்யுள்.ஆ "உள்ளார்கொல்லோ தோழிமுள்ளுடை, அலங்குகுலையீந்தின்சிலம்பிபொதிசெங்காய், துகில்பொதிபவளமேய்க்கும், அகில்படுகள்ளியங்காடிறந்தோரே "இதுநேரொன்றாசிரியத்தளையான்வந்தசெய்யுள்.சிலைவிலங்காகும் வெள்ளை.எ-து.வெஞ்சிலைவிலங்குநீன் புருவஞ்சென்றுசியநோக்கி. முலைவிலங்கிற்றென றமு

ணிவாள்மலைவிலங்கு, தார்மாலைமார்பதனிமைபொறுக்குமோ, வார்மாலைக ண்கூடும்போதுஇதுவெண்சீர் வெண்டளையானும்,இயற்சீர்வெண்டளையா னும்வந்தசெய்யுள்.மருளறுவஞ்சிமந்தாநிலம்வந்து.எ-து“மந்தாநிலம்வந்த சைப்ப,வெண்சாமரைபுடைபெயர்தரச்,செந்தாமரைநாண்மலர்மிசை,என வாங்கினிதிறைதுங்கியவிறைவனை, மனமொழிமெய்களின்வணங்குதுமகி ழ்ந்தே. “இதுமயக்கறவகுத்தவஞ்சித்தளையொன்றுததூஉம்,ஒன்றியதூஉமா க வந்தசெய்யுள். “மைதீரகலியின்றெரிவுறுபர்தம்- செல்வப்போர்க்கத க்கண்ணன்.எ-து. க-பா “செல்வப்போர்க்கதக்கண்ணன் செயிர்க்தெறிந் தசினவாழி, முல்லைத்தார்மறமன்னர் முடிததலையைமுருக்கிப்போய்,எ ல்லைநீாவியன்கொண்மூவிடை நுழையுமதியம் போல், மல்லலோங்கெழி ல்யானைமருமம்பாய்ந்தொளிததே“ இதுமயக்கமில்லாக்கலித்தளையான் வந்தசெயயுள். நல்லாய். எ- து- மகடூஉமுன்னிலை. உரிமையின்கண்ணி ன்மையோ ரசைச்சீருக்கு தாரணம். எ . து . வ வி . “உரிமையின்க ண்ணின் மையால், அரிமதர்மழைக்கண்ணாள், செருமதி செய்தீமை யால், பெருமைகொன்ற வென்பவே.” இமமூசசீரடிவஞ்சி விருத்தத்து ண்மழையென்னு நிரையசைசசீரியற் சீரேபோலநின்று வருஞ்சீர்முதல சையோ டொன்றுமையினியறசீா வெண்டளையாயிற்று. செய்யென்னு ம்நேரசைச்சீரியற் சீரேபோலநின்று வருஞ்சீாமுதலசையோ டொன்றி னமையினாசிரியத்தளை யாயிற்று. (௰௧)

குறளிருசீரடிசிந்துமுச்சீரடிநாலொருசீர்
அறைதருகாலையளவொடுநேரடியையொருசீர்
நிறைதருபாதநெடிலடியாநெடுமென்பணைத்தோட்
கறைகெழுவேற்கணல்லாய்மிக்கபாதங்கழிநெடிலே.

இ - கை. அச்சீர்களான் வந்தவடிகளது பெயர் வேறு பாடுணர்த்து- ற்று. குறளிருசீரடி . எ - து. இருசீரான்வந்தவடி குற ளடியெனப்படும.சிந்துமுச்சீரடி. எ - து . முச்சீரான் வந்தவடி சிந் தடி யெனப்படும். நாலொரு சீரறை தருகாலை யளவொடு நேரடி எ- து. நாற்சீரான்வந்தவடி யளவடியென்றும், நேரடியென்றுஞ்சொல்ல ப்படும். ஐயொருசீாநிறைதருபாத நெடிலடியாம் எ- து. ஐஞ்சீரான்வந் தவடி நெடிலடியெனப்படும. எ- று. நெடுமென்பணைத்தோட்கறைகெழு வேற்கணல்லாய். எ- து. மகடூஉமுன்னிலை. மிக்கபாதங்கழிநெடில். எ- து. ஐஞ்சீரின்மிக்கசீரான் வருமடியெல்லாங் கழிநெடிலடி யெனப்படும் எ- று. அகலம் உரையிற்கொள்க. என்னை “குறளடிசிந்தடியிருசீர்முச் சீரளவடிநெடிலடிநாற்சீரைஞ்சீர், நிரனிறைவகையானிறுத்தனர்கொள லே. “கழிநெடிலடியேகசடறகிளப்பி, னறுசீர்முதலாவையிரண்டிறு,வ ருவனபிறவும்வகுத்தனர்கொளலே“என்பனயாப்பருங்கலம். (௰௨)

ழுமகிழ்ந்தகோன், தடங்கொடாமரை யிடங்கொள் சேவடிதலைக்கு
வைப்பவர்தம்க்குவெந்துயர்தவிர்க்குமே” இது ஒன்பதின்சீர்க்கழிநெடி
லடியானவந்தசெய்யுள். “கொங்குதங்குகோதை யோதிமாதரோடு கூடி
நீடுமோடைநெற்றி, வெங்கண்யானைவேந்தாபோந்து வேழநீதாரத்வென்
றுநின்றுதாழ, அங்க ❁ புங்கமாதியாயவாதி நூலினீதிபோதுமாதியா
புதுசெங்கண்மாலைகாலைமாலைசென்று சேர்வாசோதிசேர்ந்தசித்திதானே”
இதுபதின்சீர்க்கழி நெடிலடியான்வந்தசெய்யுள். மற்றுமென்பதனால்பதி
ன்சீரினமிக்கு வருவனவுமுள, அவையாப்பருங் கலவிருத் தியுட்கண்டு
கொள்க. வேனெடுங்கண்ணி என்பதும், கரிக்கைக்கவான் மருப்பேர்மு
லைமாதர்என்பதும்,மகடூஉமுன்னிலை. கழிநெடிலே. எ-து. இவையெல்லா
ங்கழிநெடிலடியாம். எ- று. விரிக்கு நெடிலடியென்றுசிறப்பித்தவதனால்,
எண்சீரின்மிக்கசீரான்வருமடிகள் பிறப்பிலவெனக்கொள்க. என்னை “இ
ரண்டு முதலாவெட்டீறாகத, திரண்டசீரானடிமுடிவுடைய, விறந்துவரி
னுமடிமுடிவுடைய, சிறந்தவலலசெய்யுளுள்ளே,, என்றூா காக்கைபாடி
னியார். (௰௩)

வெள்ளைக்கிரண்டடிவஞ்சிக்குமூன்றடிமூன்றகவற்
கெள்ளப்படாக்கலிக்கீரிரண்டாகுமிழிபுரைப்போர
உள்ளக்கருததினளவேபெருமையொண்போதலைத்த
கள்ளககருநெடுங்கட்சுரிமென்குழற்காரிகையே.

இ-கை. அவ்வடிவரையறையான்வந்த நான்குபாவிற்குஞ் சிறுமை
பெருமையுணர்த்து - ற்று. வெளளைககிரண்டடி. எ-து. வெண்பாவிற்கி
ரண்டியேசிறுமை. எ-று. வஞ்சிககுமூன்றடி. எ-து. வஞ்சிப்பாவிற்கு
மூனறடியேசிறுமை. எ-று. மூன்றகவற்று. எ-து. ஆசிரியப்பாவிற்கு மூ
னறடியேசிறுமை. எ-று- எள்ளப்படாக்கலிக்கீரிரண்டாகும, எ-று. கலி
ப்பாவிறகுநான்கடியேசிறுமை, எ-து. இழிபு. எ-று. நான்குபாவிற்குஞ்
சிறுமை. எ-று. உரைப்போருள் ளக்கருத்தினளவேபெருமை, எ-து. நா
ன்குபாவிற்கும் பெருமைக்கெல்லை பாடுவோனது பொருண்முடிவுக்கு
றிப்பே வரையறையில்லை. எ - று. ஒண்போதலைத்தகாரிகையே. எ- து.
மகடூஉமுன்னிலை. எள்ளப்படாக் கலிக்கென்று சிறபபித்தவதனால், துள்
ளலோசையிற்சிறிதுவழுவாது நாற்சீர்நாலடியான்வருவது தரவுகொச்ச
கக்கலிப்பாவென்றும, துளளலோசையிற் சிறிதுவழுவி நாற்சீர்நாலடியா
ன்வருவது கலிவிருத்தமென்றும், தெரிந்துணரப்படுமெனக்கொள்க.இவ

---

❁ பூரவமென்றும்பாடம்.

ன்னிக்கிரண்டா மகவற்குமூன்று கலிக்கடிநான்கெனப்படா வஞ்சிப் பாவிற்கு மூன்றுமிழிபென்று பாக்களைமுறையிற்கூறாததலை தடுமாற்றமாகக் காரிகைசொல்லவேண்டியது தென்னையோவெனின், தலைதடுமாற்றந்தந்து புணர்ந்துரைத்தலெனுந் தந்திரவுத்தியாகலின், அன்றியும், மயேச்சுரர்முதலாகியவொரு சாராசிரியர்வஞ்சிப் பாவிரண்டடியாலும்வரப்பெறுமென்றுரென்பதூஉம், ஆசிரியப்பா விரண்டடிச்சுரிதகமாய் வரப்பெறுமென்றுரென்பதூஉம், அறிவித்தற்கெனக்கொள்க. என்னை "வெண்பாவாசிரியங்கலியேவஞ்சியென, நுண்பாவுணர்ந்தோர்நுவலுங்காலை,யிரண்டுமூன்றுநான்குமிரண்டுந், திரண்டவடியின் சிறுமைக்கெல்லை, எனவெடுத்தோதிய மயேச்சுரர் வஞ்சிச்சிறுமைக் குக்காட்டும்பாட்டு "பூந்தண்சினைமலர் மல்கியபொழிற்பிண்டி, வேந்தன்புகழ்பரவாதவர்வினைவெல்லார், அதனால், "அறிவனதடியிணைபரவிப், பெறுகுவர்யாவரும்பிறவியினெறியே,, இதனை முச்சீரடிவஞ்சியாக வலகிட்டு இரண்டடியாமாறு கண்டுகொள்க.என்னை "ஒருதொடையீரடி வெண்பாச்சிறுமை, யிருதொடைமூன்று மடியினிழிந்து, வருவனவாசிரிய மில்லனமொழிப, வஞ்சியுமப்பா வழக்கினவாகும்,, "நான்காமடியினு மூன்றுந்தொடையினுந் தாழ்ந்துகலிப்பா தழுவுதலிலவே,, "உரைபபோர்குறிப்பினை நீக்கிப்பெருமை, வரைத்திதுணையென வைத்துரையில்லென், றுரைத்தனர்புலவோ வுணர்ந்திசிஞேரே,, என்றார் காக்கைபாடினியார். (௰௪)

அறத்தாறிதுவெனவெள்ளைக்கிழிபகவற்கிழிபு
குறித்தாங்குரைப்பின் முதுக்குறைந்தாமகுறையாக்கலியின்
திறத்தாறிதுசெல்வப்போர்ச்செங்கண்மேதிவஞ்சிச்சிறுமை
புறத்தாழ்கருமென்குழற்றிருவேயன்னபூங்கொடியே.

இ-கை. அவ்வடிவரையறையான்வந்த இலக்கியங்கட்கு முதனினைப்புணர்த்து -ற்று- அறத்தாறிதுவென வெள்ளைகிழிபு. எ-து. வெ "அறத்தாறிதுவென வேண்டாசிவிகை, பொறுத்தானோடூர்ந்தா னிடை,, இஃதிரண்டடியான் வெண்பாவிற்குச் சிறுமை வந்தவாறு. அகவற்கிழிபு குறித்தாங்குரைப்பின் முதுக்குறைந்தாம். எ-து. ஆ "முதுக்குறைந்தனளே, மலையனொள்வேற்கண்ணி, முலையும்வாரா முதுக்குறைந்தனளே, இஃதுமூன்றடியான் ஆசிரியப்பாவிற்குச சிறுமைவந்தவாறு குறையாக்கலியின்றிறத்தாறிது செல்வப்பேர். எ-து. க-பா. "செல்வப்போர்க்கதக்கண்ணன்-மருமம்பாய்ந்தொளித்ததே,, இஃதுநான்கடியாற் கலிப்பாவிற்குச் சிறுமைவந்தவாறு. செங்கண்மேதிவஞ்சிச்சிறுமை. எ-து. வ "செங்கண்மேதிகரும்புழக்கி, அங்கணீலத்தலரருந்திப், பொழிற்காஞ்சிநிழற்றுயிலும், செழுநீர்நல்வயற் கழனியூரன்; புகழ்தலானுப்பெரு வண்மைய

ன,. இஃதுமூன்றடியான் வஞ்சிப்பாவிற்குச சிறுமைவந்தவாறு. புறத்
ழ்கூருமென்குழற்றிரு வேயன்னபூங்கொடியே .எ-அ. மகவேமுன்னி
ஆங்கு-அசை. (௰௫)

எழுவாயெழுத்தொன்றின்மோனையிறுதியியைபிரண்டாம்
வழுவாவெழுத்தொன்றின்மாதேயெதுகைமறுதலைத்த
மொழியான்வரினுமுரணடிதோறுமுதன்மொழிக்கண்
அழியாதளபெடுத்தொன்றுவதாகுமளபெடையே.

இ-கை. அடிமோனை, இணைமோனை, பொழிப்புமோனை, ஒரூஉமோ
ா, கூழைமோனை, மேற்கதுவாய்மோனை, கீழ்க்கதுவாய்மோனை, முற்
மோனை, எ-ம. அடியியைபு, இணையியைபு, பொழிப்பியைபு, ஒரூஉ
யைபு, கூழையியைபு, மேற்கதுவாயியைபு, கீழ்க்கதுவாயியைபு, மு
றியைபு, எ-ம். அடியெதுகை, இணையெதுகை, பொழிப்பெதுகை, ஒரு
வெதுகை. கூழையெதுகை. மேற்கதுவாயெதுகை. கீழ்க்கதுவாயெது
கை, முற்றெதுகை. எ-ம். அடிமுரண். இணைமுரண். பொழிப்புமுரண்.
ரூஉமுரண். கூழைமுரண். மேற்கதுவாய்முரண். கீழ்க்கதுவாய்முரண்.
ற்றுமுரண். எ - ம். அடியளபெடை. இணையளபெடை. பொழி
பளபெடை . ஒரூஉவளபெடை . கூழை யளபெடை . மேற்கதுவா
ளபெடை. கீழ்க்கதுவா யளபெடை. முற்றளபெடை. எ - ம். அந்
ாதித்தொடை, இரட்டைத்தொடை, செந்தொடை.எ-ம் - கிடந்ததொ
டையும், தொடைவிகற்பமுமா மாறுணர்த்துவானெடுத்துக்கொண்டா
அவற்றுள்- இக்காரிகைஅடிமோனையும், அடியியைபும, அடியெது
கையும், அடிமுரணும். அடியளபெடையுமாமாறுணாதது- றறு- எழு
ாயெழுத்தொன்றின்மோனை. எ - து. அடிதோறுமுதலெழுத்தொன்றி
ரத்தொடுப்பது அடிமோனைத்தொடையெனப்படும்-எ - று. எழுவா
யெனினும். ஆதியெனினும, முதலெனினுமொக்கும். மோனையெனினு
, முதற்றொடையெனினுமொக்கும். இறுதியியைபு. எ - து. அடிதோ
மிறுதிக்கண்ணின்றவெழுத்தானும, சொல்லானும்,ஒன்றிவரத்தொடுப்
து அடியியைபுத்தொடையெனப்படும்- எ - று. இரண்டாம்வழுவா
வெழுத்தொன்றினெதுகை. எ- து- அடிதோறுமுதற்கண் இரண்டா
மெழுத் தொன்றிவரத்தொடுப்பது அடியெதுகைத்தொடையெனப்படு
. எ- று. மாதே-எ- து- மகடூஉமுன்னிலை. இரண்டாமெழுத்தொன்றி
னெதுகையென்னுது வழுவாவெழுத்தென்றுமிகுத்துச்சொல்லியவதனு
இரண்டாமெழுத்தொன்றிவரினு முதலெழுத்தெல்லாமமுயிரொத்த
ளவினவாய்வந்து நட்டென் பதற்குப்பட்டென்பதல்லது பாட்டென்
த்து கையாகாது - காட்டென்பதற்குப் பாட்டென்பதல்லது பட்டெ

ன்பதே துகையாகாதெனக்கொள்க - மறுதலைத்தமொழியான்வரினு முரண்- எ- து - அடிதோறுமுதற்கட்சொல்லானும், பொருளானுமறுதலைப்படத்தொடுப்பது அடிமுரண்டொடையெனப்படும். எ- று - மொழியான் வரினுமென்றவும்மையாற் பொருளான்வரினு மென்பதாயிற்று. அடிதோறும்- எ - து - மத்திமதீபமெனக்கொள்க. முதன்மொழிக்கண்ணழியாதளபெடுத்தொன்றுவதாகு மளபெடையே . எ - து - அடிதோறுமுதற்கணுயிரானும், ஒற்றானுமளபெடுத்தொன்றிவரத் தொடுப்பது அடியளபெடைத்தொடையெனப்படும்- எ- று. அழியாதென்றுமிகுத்துச் சொல்லியவதனால் நான்குயிரளபெடையும். இரண்டொற்றளபெடையும், தம்முளொன்றிவரத் தொடுப்பது சிறப்புடைத்து. தொடைவிகற்பத்துள், நான்குயிரளபெடையும், இரண்டொற்றளபெடையும், தம்முண்மறு தலைப்பட்டதொடுப்பினு மிழுக்காது.என்னை "முதலெழுத்தொன்றின் மோனையெதுகை, முதலெழுத்தளவோ டொத்ததுமுதலா, வஃதொழித்தொன்றி னாகுமென்ப,, என்றார்பலகாயனார். "இறுவாயொப்பினஃ தியைபெனமொழிப,, என்றார் கையனார். "மொழியினும பொருளினுமுரணுதன்முரணே,, என்றா தொலகாபபியனார். "அளபெடைத்தொடைக்கே யளபெடையொன்றும்,, எனறார்நததத்தனா. (௰௬)

அந்தமுதலாத்தொடுப்பதந்தாதியடிமுழுதும்
வந்தமொழியேவருவதிரட்டைவரன்முறையான்
முந்தியமோனைமுதலாமுழுதுமொவ்வாதுவிட்டால்
செந்தொடைநாமம்பெறுநறுமென்குழற்றேமொழியே

இ-கை. அந்தாதித்தொடையும், இரட்டைத்தொடையும்,செந்தொடையுமாமாறுணர்த்து- ற்று- அந்தமுதலாத்தொடுப்பதந்தாதி-எ-து. அடிதோறுமிறுதிக்கண்ணின்ற எழுத்தானும், அசையானும், சீரானும், அடியானுமற்றை யடிக்காதியாகத் தொடுப்பது அந்தாதித்தொடையெனப்படும்-எ-று. அடிமுழுதும் வந்தமொழியே வருவதிரட்டை வரன்முறையான்- எ-து. ஓரடிமுழுதும், ஒருசொல்லே வரத்தொடுப்பதுஇரட்டைத்தொடையெனப்படும்- எ-று. வரன்முறையானென்றுமிகுத்துச்சொல்லியவதனால், ஈற்றெழுத்தொன்றுகுறையினு மிழுக்காது- நாற்சீரின்மிகுவரப்பெறாதெனக்கொள்க. முந்தியமோனைமுதலா முழுதுமொவ்வாதுவிட்டாற் செந்தொடை நாமம்பெறும், எ- து-. மேற்சொல்லப்பட்ட மோனைமுதலாகியதொடையும், தொடைவிகற்பமும்போலாது, வேறுபடத்தொடுப்பது செந்தொடையெனப்படும். எ-று. முந்தியமோனையென்று சிறப்பித்தவதனால் அசையும், சீருந்தம்முண்மறுதலைப்படத்தொடுப்பது சிறப்புடைத்தெனக்கொள்க, நறுமென்குழற்றேமொழியே- எ-து

கவே முன்னிலை. என்னை. "அடியுஞ் சீரு மசையு மெழுத்து, முடிவுறுத் தலாற் செய்யுண் மொழியினஃ, தந்தாதித் தொடையென மறைதல் வேண்டும்" என்றார் நத்தத்தனார், "ஒருசொல் லடிமுழுதும் வருவ திரட்டை" என்றார் மயேச்சுரர். "சொல்லிய தொடையொடு வேறுபட் டியலிற், சொல்லியற் புலவர துசெந்தொடையென்ப" என்றார் தொல்காப்பியனார். "அசையினுஞ் சீரினு மிசையினு மல்லா, மிசையா தாவது செந்தொடை தானே" என்றார் காக்கைபாடினியார். (௰௭)

மாவும்புண் மோனை யியைபின் னகைவடியே யொழுகைக்
கேவின்முர ணுமிருள் பரந்தீண் டளபா ரவளிய
ஓவிலந் தாதி யுலகுடனு மாகுமே யிரட்டை
பூவருஞ் செந்தொடை பூத்தவென் றாகும் பணிமொழியே.

இ-கை. அடிமோனை முதலாகிய தொடைகளான் வந்த இலக்கியங் கட்கு முதனினைப்பு உணர்த்துற்று. மாவும்புண் மோனை-எ-து. ஆ. "மாவும் புள்ளும் வதிவயிற் படர, மாநீர் விரிந்த பூவுங் கூம்ப, மாலை தொடுத்த கோதையுங் கமழ, மாலை வந்த வாடை, மாயோ ளின்னுயிர் புறத்திறுத் தற்றே. "இஃதடிதோறு முதலெழுத் தொன்றி வரத் தொடுத்தமையான் அடிமோனைத் தொடை. எ-று. இயைபின்னகை. எ-து. ஆ "இன்னகைத் துவர்வாய்க் கிளவியு மணங்கே, நன்மா மேனி சுணங்கு மணங்கே, ஆடமைத் தோளி யூடலு மணங்கே, அரிமதர் மழைக்கணு மணங்கே, திருநுதற் பொறித்த திலதமு மணங்கே," இஃதடிதோறு மிறுதிச் சீரொன்றி வரத் தொடுத்தமையான அடியியைபுத் தொடை-எ-று. வடியே யொழுகைக்கு- எ-து இ- வெ. "வடியேர் கண்ணீர் மல்கவா னப்பொருட் கட் சென்றோர், கடியார் கனங்குழாய் காணார் கொல்லோ, இடியின் முழக்கஞ் சிறீஇக் கவுள் வேழம், பிடியின் புறத்தசைத் தகை. "இஃதடிதோறு மிரண்டா மெழுத் தொன்றி வரத் தொடுத்தமையான அடியெதுகைத் தொடை- எ-று. கேவின் முரணு மிருள்பரந்து-எ-து - ஆ. "இருள் பரந்தன்ன மாநீர் மருங்கில், நிலவுகுவித் தன்ன வெண்மணலொருசிறை, இரும்பினன்ன கருங்கோட்டுப் புன்னை, பொன்னினன்ன நுண்டாதுறைக்கும், சிறுகுடிப் பரதவர் மடமகள், பெருமதர் மழைக்கணு முடைய வாலணங்கே," இஃதடிதோறு முதற்கண்ணே மறுதலைப்படத் தொடுத்தமையான் அடிமுரண் தொடை. எ-று. ஈண்டளபா ரவளிய- எ- து. ப-வெ 'ஆஅவளிய வலவன் றன்பார்ப்பினோ, டிரிரை யுங் கொண்டிரை பப்பள்ளியுட், டோஒங் கிணையலைப்பத் துஞ்சாது றைவன் றோள், மேஎவலைப்பட்ட நம்போன்று தால, ஓஒ வுழக்குந் துயர்" இஃதடிதோறு முதற்கண் ணளபெடுத்தொன்றி வரத் தொடுத்தமையான் அடியளபெடைத் தொடை. எ- று. ஓவிலந்தாதி யுலகுடனும்- எ- து- ஆ

"உலகுடன்விளக்குமொளிதிகழவிர்மதி, மதிநலனழிக்கும் வளங்கெழுமுக்குடை, முக்குடை கீழறபொற்புடையாசனம், ஆசனத்திருந்ததிருந்தொளியறிவன், ஆசனத்திருந்ததிருந்தொளியறிவனை, அறிவுசேருள்ளமோடருந்தவம்புரிந்து, துன்னியமாந்தரீதென்ப, பன்னருஞ்சிறப்பின்விண்மிசையுலகே" இஃது காண்கந்தாதித் தொடையும் வந்தசெய்யுள். ஒக்குமேயிரட்டை.- எ-து-இ-சி-லெ. "ஒக்குமேயொக்குமே யொக்குமேயொக்கும், விளங்கினிற்சிறரி யொக்குமேயொக்கும், குளக்கொட்டிப்பூவினிறம்" இஃதோரடிமுழுதுமொருசொல்லே வரத்தொடுத்தமையால் இரட்டைத்தொடை-எ- று- பாவருஞ்செந்தொடை பூத்தவென்றுகும்- எ- து- ஆ. "பூத்தவேங்கைவியன்சினையேறி, மயிலினமகவுநாடன். நன்னுதற்கொடிச்சிமனத்தகத்தோனே "இதுமோனைமுதலாகிய தொடையும், தொடைவிகற்பமும போலாதுவேறுபட த்தொடுத்தமையாற் செந்தொடை- எ-று, பணிமொழியே. எ- து மகடூஉமுன்னிலை. (ம௪)

இருசீர்மிசையிணையாகும்பொழிப்பிடையிட்டொருவாம்
இருசீரிடையிட்டதிறலிகூழைமுதலிறுவாய்
வருசீரயலிலமேல்கீழ்வகுத்தமைதீர்கதுவாய்
வருசீர்முழுவதுமொன்றின் முற்றுமென்பமற்றவையே.

இ- கை. இணைமோனைமுதலாகிய முப்பத்தைந்துதொடைவிகற்பமுமாமாறுணர்த்து-ற்று. இருசீர்மிசையிணையாகும்- எ-து- முதலிருசீர்க்கண்ணும் மோனைமுதலாயினவரத்தொடுப்பது இணையெனப்படும்-எ-று. பொழிப்பிடையிட்டு- எ.து. முதற்சீர்க்கண்ணும், மூன்றுஞ்சீர்க்கண்ணும், மோனைமுதலாயினவரத்தொடுப்பதுபொழிப்பெனப்படும்-எ-று- ஒருவாமிருசீரிடையிட்டது-எ-து - நடுவிருசீர்க்கண்ணுமின்றி முதற்சீர்க்கண்ணும், இறுதிச்சீர்க்கண்ணும், மோனைமுதலாயினவரத் தொடுப்பது ஒரூஉவெனப்படும் எ று, ஈறிலிகூழை-எ-து- இறுதிச்சீர்க்கணின்றியொழிந்தமூன்றுசீர்க்கண்ணும், மோனைமுதலாயினவரத்தொடுப்பதுகூழையெனப்படும்- எ று. முதலிறுவாயவருசீரயலிலமேல்கீழ்வகுத்தமைதீர்கதுவாய்- எ- து- முதலயற்சீர்க்கணின்றியொழிந்தமூன்று சீர்க்கண்ணும், மோனைமுதலாயினவரத்தொடுப்பது மேற்கதுவாயென்றும், ஈற்றயற்சீர்க்கணின்றிஒழிந்த மூன்றுசீர்க்கண்ணும், மோனைமுதலாயினவரத்தொடுப்பது கீழ்ககதுவாயென்றும், சொல்லப்படும்-எ- று. இதுநிரனிறையெனக்கொள்க. என்னை "கடையயன்முதலயல் கதுவாய்கீழ்மேல்" என்றுர் அவிநயனுர் முசலயற்சீரக ணில்லாததனைக்கீழ்க்கதுவாயென்றும் ஈற்றயற்சீர்க்கணிலலாததமேற்கதுவாயென்றும், வேண்டினர்கையனுர் முதலாகிய ஒருசாராசிரியரென்பதறி வித்தற்கு மதீர்கதுவாயென்றுவி

நப்புணர்த் தாமெனக்கொள்க. வருசீர்முழுவதுமொன்றின் முற்றுமென் ப - எ - து - எல்லாச்சீர்க்கண்ணும் மோனைமுதலாயின வரத் தொ டுப்பது முற்றெனப்படும். எ - று. மற்றவையே. எ - து. இணைமோ னை முதலியமுப்பத்தைந்து தொடைவிகற்பமும். எ - று. இதனை றுதிவிளக்கெனக்கொள்க. சீர்முழுதுமொன்றின் முற்றுமென்னுது வரு சீரொன்று சிறப்பித்தவதனால், இணைமோனைமுதலாகிய முப்பத்தைந்து தொடைவிகற்பமும், அளவடிக்கண்ணே வழங்கப்படுமென்பதூஉம், இ ணையியைபுமுதலாகிய ஏழுவிகற்பமும், இறுதிச்சீரோமுதற் சீராகக்கொ ண்டு வழங்கப்படுமென்பதூஉம், அறிவித்தற் கெனக்கொள்க. என்னை. "இருசீர்மிசை வரத்தொடுப்பதிணையே", முதலொடுமூன்றுஞ் சீர்த்தொ டையொழிப்பே, சீரிரண்டிடைதபத் தொடுப்பதொரூஉத்தொடை, மூ வொருசீருமுதல் வரத்தொடுப்பது, கூழையென்மனுர் குறியுணர்ந்தோ ரே,, "முதலயற்சீரொழித் தல்லனமூன்றின், மிசைவரத்தொடுப்பதுமே ற்கதுவாயே,, "ஈற்றயற்சீரொழித் தெல்லாந்தொடுப்பது, கீழ்க்கதுவாயி ன்கிழமையதாகும்,, "சீர்தொறுந்தொடுப்பது முற்றெனப்படுமே (உ௯)

மோனைவிகற்பமணி மலர்மொய்த்துடனுமியைபிற்
கேனையெதுகைக்கினம்பொன்னினன்னவினிமுரணிற்
கானவிகற்பமுஞ்சிறடிப்பேரதளபெடையின்
தானவிகற்பமுந்தாட்டாஅமுமாயென்பதாழ்குழலே.

இ- கை. இணைமோனைமுதலாகிய முப்பத்தைந்து தொடைவிகற்ப ங்களால்வந்த இலக்கியங்கட்கு முதனினைப்புணர்ந்து - ற்று. மோனைவி கற்பமணிமலர். எ- து. ஆ. "அணிமலரசோகின் றளிர்நலங்கவற்றி, அ ரிக்குரற் கிண்கிணியரற்றுஞ்சீறடி, அம்பொற்கொடிஞ்சி நெடுந்தேரகற் றி, அகன்றவல்குலந்நுண் மருங்குல். அருப்பியகொங்கை யவ்வளையமை த்தோள். அவிர்மதியனையதிருநுதலரிவை, அயில்வேலனுக்கியம் பகைத் தமர்ந்த, கருங்கயனெடுங்கணோக்கமென், திருந்தியசிந்தையைத் திறை கொண்டனவே,, இதனுளிணைமோனை முதலாகிய எழுவிகற்பமும் மு றையானே வந்தவாறு கண்டுகொள்க. மொய்த்துடனுமியைபிற்கு. எ-து வ. "மொய்த்துடன்றவழு முகிலேபொழிலே, மற்றதனயலே முத்து றழ்மணலே, நிழலேயினியத னயலதுகடலே, மாதர்நகிலேவல்லேயி யலே, வில்லேநுதலேவேற்கண்கயலே, பல்லேதளவம்பாலேசொல்லே புயலேகுழலேமயிலேயியலே, அதனால், இவ்வயினிவ்வுருவியங்கவின, எ வ்வயினேருமிழப்பர்தந்நிறையே. ,, இதனுளிணையியைபு முதலியவே ழுவிகற்பமும் முறையானேவந்தவாறு கண்டுகொள்க. ஏனையெதுகை க்கினம்பொன் னினன்ன- எ-து- ஆ "பொன்னினன்ன பொறிசுணங்

கேந்திப், பன்னருங்கோங்கின் னலங்கவற்று, மின்னுவிரொளிவடங்
கிடந்துமன்னிய, நன்னிறமென்முலைமின்னிடைவருந்தி; என்னையுமிடுக்கண்
பன்னுவ தின்னடை அன்னமென்பெடைபோலப்பன் மலர்க், கன்னி
யம்புன்னை யின்னிழற்றுன்னிய, மயிலேசாயலவாணுதல், அயில்வேலு
ண்கணெம்மறிவுதொலைத்தனவே. "இதனுளிணையெதுகைமுதலாகியவே
ழுவிகற்பமும் முறையானேவந்தவாறுகண்டுகொள்க. இனிமுரணி[illegible]
விகற்பமுஞ் சீறடிப்போது-எ-து-ஆ. "சீறடிப்பேரகலல்குலொல்குபு, சுரு
ங்கியநுசுப்பிற்பெருகுவடந்தாங்கிக, குவிந்துசுணங்கரும்பியகொங்கைவி
ரிந்து, சிறியபெரியநிகாமலர்க்கோதைதன், வெள்வளைதோளுஞ்சேயரி
க்கருங்கணும், இருக்கையுநிலையுமேந்தெழிலியககமும், துவர்வாய்த்தீஞ்
சொலு முவந்தெனைமுனியாது, எனறுமின்னணமாகுமதி, பொன்றிகழ
நெடுவேற் போர்வல்லோயே ,, இதனுளிணைமுரண் முதலாகியவேழுவி
கற்பமும், முறையானே வந்தவாறுகண்டுகொள்க. அளபெடையின்று
ணவிகற்பமுந் தாட்டாஅமரையென்ப-எ.து. "தாஅட்டாஅமரைமலருழ
இப். பூஉக்குவளைப்போதருந்திக். காஅய்ச்செந்நெற் கறித்துப்போஒய்
மாஅத்தாஅண் மோஒட்டெருமை, தேஎம்புனலிடைச் சேஒர்பாஅல்
மீஇ ஞாஅந்துகளுஞ் சீஇர் எஎஞாஅநீஇணீஇர், ஊரன்செய்தகேண்மை
ஆய்வளைத்தோளிக்கலாறுவே இதனுளிணையளபெடைமுதலாகிய வே
ழுவிகற்பமும், முறையானே வந்தவாறுகண்டுகொள்க. தானவிகற்பமே
ன்றுசிறப்பித்தவதனால், இரண்டளபெடையும்வரப்பெறும் தாழ்குழலே
.எ-து. நகடூஉமுன்னிலை. (உ௰

முதலாவதுறுப்பியன்முற்றிற்று.

கந்தமுந்தேனுஞ்சருக்கமுங்காதற்குறிலகுறிலே
சந்தமுந்தீரசைதேமாந்தண்குன்றந்தண்சீர்திருவும்
கொந்தவிழ்கோதாய்குறடிணைவெள்ளைக்கறதெழுவாய்
அந்தமுமாவுமிருசீருமோனையுமாமுறுப்பே.

இஃது உறுப்பியற்செய்யுட்களின் முதனினைப்புக்காரிகை.



## இரண்டாவது

# செய்யுளியல்.



வெண்பாவகவல்கலிப்பர்வளவடிவஞ்சியென்னும்
ஒண்பாவடிகுறள்சிந்தென்றுரைப்பவொவிமுறையே
இண்பாமலிசெப்பல்சீர்சாலகவல்சென்றோங்குதுள்ளல்
நண்பாவலைமந்தநல்மிகுதூங்கனறுநுதலே.

**...ன்பத்துகாரிகை.** இவ்விய லென்ன பெயர்த்தோவெனின், வெண்
பா, வெள்ளொத்தாழிசை, வெண்டுறை, வெளிவிருத்தம். ஆசிரியப்பா,
ஆசிரியத்தாழிசை, ஆசிரியத்துறை, ஆசிரியவிருத்தம், கலிப்பா, கலித்தா
ழிசை, கலித்துறை, கலிவிருத்தம்,வஞ்சிப்பா, வஞ்சித்தாழிசை, வஞ்சித்
துறை, வஞ்சிவிருத்தம், மருட்பாவெனக்கிடந்த செய்யுட்களையாமா று
ணர்த்திற்றதலாற் செய்யுளியலென்னும் பெயர்த்து. இவ்வியலுள் இக்
காரிகை யென்னுதலிற்றோவெனின், வெண்பா, ஆசிரியம், கலி, வஞ்சி
யென்னும், நான்குபாவிற்கும், அடியுமோசையுமா மாறுணர்த்து-ற்று.
வெண்பாவகவல் கலிப்பாவளவடி-எ-து-வெண்பாவும், ஆசிரியப்பாவும்,
கலிப்பாவும், நாற்சீரடியான்வரப்பெறும். எ-று. வஞ்சியென்னு மொண்
பாவடிகுறள்சிந்தென்றுரைப்ப - எ-து - வஞ்சிப்பா இருசீரடியானும்,மு
ச்சீரடியானும், வரப்பெறுமென்று சொல்லுவர் புலவர்- எ-று. வஞ்சியெ
ன்னு மொண்பாவென்று சிறப்பித்தவதனல். வெண்பாவின் ஈற்றடியும்
நேரிசையாசிரியப்பாவின் ஈற்றயலடியும், கலிவெண்பாவின் ஈற்றடியும்,
மூச்சீரான்வரப்பெறுமென்றும்,இணைக்குறளாசிரியப்பாவின் இடையடிக
ள இரண்டும், பலவும், குறளடியானும், சிந்தடியானும், வரப்பெறுமெ
ன்றும், ஒருசார் அம்போதரங்க வுறுப்பும், இருசீரடியானும், மூச்சீரடி
யானும் வரப்பெறுமென்றுங்கொள்க, அராகவுறுப்புகள் நாற்சீரின்மிக்கு
வருவனவுமுளவெனக்கொள்க. அவைபோக்கித் தத்தம் இலக்கணச்சூத்
திரத்துள்ளேகாட்டுதும், என்னை "கலியொடுவெண்பா வகவல்கூறின
ாவடிதன்ன னடக்குமற்றவையே. "சிந்தடிகுறளடி யென்றிரண்டடியா
ர், வஞ்சிநடர்க்கும்வழக்கினையுடைய. என்றாராகலின். ஒலிமுறையேதி
ண்பாமலிசெப்பல் சீர்சாலகவல்சென்றேங்குதுள்ள னண்பாவனமுந்த
மிகுதூங்கல் எ-து. வெண்பா செப்பலோசையான்வரும், ஆசிரியப்பா
அகவலோசையான்வரும்,கலிப்பா துள்ளலோசையான்வரும்,வஞ்சிப்பா
தூங்கலோசையான்வரும் .எ-று. ஈறுநுதலே .எ-து. மகவேமுன்னிலை,
வெண்பாமலிசெப்பலென்று. சிறப்பித்தவதனல், செப்பலோசைமூன்றுவ
கைப்படும். ஏந்திசைச்செப்பலும், தூங்கிசைச் செப்பலும், ஒழுகிசைச்
செப்பலுமென. என்னை "வெண்சீர் வெண்டளையான்வரும்யாப்பை, யே
ந்திசைச்செப்பலென் மனர்புலவர்.,, "இயற்சீர்வெண்டளையான்வரும்யா
ப்பைத், தூங்கிசைச்செப்பலென்மனர்புலவர்.,, "வெண்சீரொன்றலுமிய
ற்சீர்விகற்பமு, மொன்றியபாட்டே யொழுகிசைச்செப்பல்." என்று
ரகலின். அவற்றிற்குச்செய்யுள் வருமாறு-வெ- "யாசானுகாடாமலுயா
ாலென்றொருவன், சார்தலையுங்கல்லாதவாறு,, இதுவெண்சீர்வெண்ட

ளையான்வந்தமையால்ஏந்திசைச்செப்பலோசை-வெ. "பாலொடு-வாலெயிறூறியநீர்,, இது இயற்சீர்வெண்டளையான் வந்தமையால், தூங்கிசைச்செப்பலோசை-வெ "கொல்லான் புலாலைமறுத்தானைக் கைகூப்பி,எல்லாவுயிருந்தொழும்,, இது இரண்டுதளையும் விரவிவந்தமையால் ஒழுகிசைச்செப்பலோசை· சீர்சாலகவலென்று சிறப்பித்தவதனால், அகவலோசை மூன்றுவகைப்படும் ஏந்திசையகவலும், தூங்கிசையகவலும், ஒழுகிசையககவலுமெனை. என்னை "நேர்நேரியற்றளையான்வருமகவலு, நிரைநிரையியற்றளையான்வருமகவலு, மாயிருதளையுமொத்தாகியவகவலு, மேந்தறூங்கலொழுகலென்றிவை, யாயந்தகிரணிறையாகுமென்ப,, என்றாராகலின்.அவற்றிற்குச்செய்யுள்வருமாறு-அ "போதுசாந்தம்- துன்னுவாரே,, இது நேரொன்றாசிரியத்தளையான் வந்தமையால் ஏந்திசையகவலோசை, ஆ "அணிநிழல்- பரிசறுப்பவரோ." இதுநிரையொன்றாசிரியத்தளை யான்வந்தமையால் தூங்கிசையகவலோசை. இ "குன்றக்குறவன்-சுணங்கே.' இது இரண்டுதளையும்விரவி வந்தமையால் ஒழுகிசையகவலோசை. சென்றேங்குதுள்ளலென்று சிறப்பித்தவதனால் துள்ளலோசைமூன்றுவகைப்படும். ஏந்திசைத்துள்ளலும். அகவற்றுள்ளலும், பிரிந்திசைத்துள்ளலுமெனை. என்னை "ஏந்திசைத்துள்ளல் கலித்தளையியையின், வெண்டளைதன்றளை யென்றிரண்டியையி, னொன்றியவகவற் றுள்ளலென்றோதுப,, தன்றளைபிறதளை யென்றிவையனைத்தும், பொருந்திவரினேபிரிந்திசைத்துள்ளல்,, என்றாராகலின. அவற்றிற்குச்செய்யுள்வருமாறு-க. "முருகவிழ்தாமரைமலர்மேன் முடியிமையோர் புடைவரவே, வருசினநாதருமறைநூல்வழிபிழையாமனமுடையார், இருவினைபோய்விழ முனியாதெதிரியகாதிலையறியா, நிருமலரா யருவினராய் நிலவுவர்சோதியினிடையே,, இதுகலித்தளையான் வந்தமையால் ஏந்திசைத்துள்ளலோசை-உ-"செல்வப்போர்-ஒளிததே,, இது வெண்சீர்வெண்டளையும், கலித்தளையும், விரவி வந்தமையால் அகவற்றுள்ளலோசை-ங "குடநிலைத்தண்புறவிற்கோவலரெடுத்தார்ப்பத், தடநிலைப்பெருந் தொழுவிற்றகையேறுமரம்பாய்ந்து, வீங்குமணிக்கயிறுரீஇத்தாங்குவனத்தேறப்போய்க், கலையினொடுமுயலிரியக்கடிமுல்லைமுறுவலிப்ப, எனவாங், கானொடுபுல்லிப்பெரும்புதன்முனையும், கானுடைத்தவர்நேர்சென்றவாறே,, இதுபலதளையும் விரவிவந்தமையால பிரிந்திசைத்துள்ளலோசை. நண்பாவமைந்த நலமிகுதூங்கலென்று சிறப்பித்தவதனால், தூங்கலோசை மூன்றுவகைப்படும், ஏந்திசைத்தூங்கலும், அகவறூங்கலும், பிரிந்திசைத்தூங்கலுமெனை. என்னை "ஒன்றியவஞ்சித் தளையேவரினு, மொன்றாவஞ்சித்தளையேவரினு, மென்றிவையிரண்டும் பிறவுமயங்கினு, மேந்தலகவல் பிரிந்திசைத்தூங்

லன், ருய்ந்தவிரனிறையாகுமென்ப என்றுராகலின். அவற்றிற்குச்செ
யுள்வருமாறு-வ "வினைத்திண்பகை விழச்செற்றவன், வனப்பங்கயமல
த்தாளிணை, நினைத்தன்பொடு தொழுதேத்தினர், நாளும், மயலார்நா
கதிமருவார், பெயராமேற் கதிபெருகுவர்வினைந்தே." இது ஒன்றிய வ
ஞ்சித்தளையான் வந்தமையால் ஏந்திசைத்தூங்கலோசை.வ "வார்ஞோர்
தாழ்வண்டாமரைத், தேனார்மலர்மேல்வந்தரு, ளானவருள் கூரறிவனை
, கானார்மலர்கொண் டேத்திவணங்குநர் பலர்புகழ்முதநி பெறுகுவர்
வினைந்தே." இது ஒன்றுதலைநிந்தலையான் வந்தமையால் அகவற்றூங்
லோசை "மந்தாநிலம்-மகிழ்ந்தே,, இதுபலதளையும் விரவிவந்தமையா
பிரிந்திசைத்தூங்கலோசை. (க)

வளம்படவென்பதுவெள்ளைக்ககவற்குதாரணஞ்செங்
களம்படக்கொன்றுரலிக்ரிதாயகண்ணார்நொடிபோல்
துளங்கிடைமாதேசுறமறிதொன்னலத்தின்புலம்பென்
றுளங்கொடுநாவலரோதினர்வஞ்சிக்குதாரணமே.

இ-கை..அவ்வடிகளானும், ஓசைகளானும்வந்த இலக்கியங்கட்குமு
னிளைப்புணர்த்து- ற்று. வளம்படவென்பது. வெள்ளைக்கு-எ-து "வள
படவேண்டாதார் யார்யாருமில்லை, அளந்தனபோக மவரவராற்றான்,
ளங்காய்திரட்டி னரில்லைக் களங்கனியைக், காரெனச்செய்தாருமில்,,
இஃதளவடியானும், செப்பலோசையானும், வந்தஇன்னிசைவெண்பா.அ
வற்குதாரணஞ் செங்களம்படக்கொன்று -எ-து- "செங்களம்படக்கொ
றவுணாதேயத்த, செங்கோலம் பின்செங்கோட்டியானை, கழற்றொடி
சேஎய்க்குன்றம், குருதிப்பூவின் குலைகாந்தட்டே,, இஃதளவடியா
னும், அகவலோசையானும்வந்த நேரிசையாசிரியப்பா. கலிக்கரிதாய
-து "அரிதாயவறனெய்தி யருளியோர்க்களித்தலும், பெரிதாயபகை
வென்று பேணாரைத்தெறுதலும், புரிவமர்காதலிற் புணர்ச்சியுந்தருமெ
ப், பிரிவெண்ணிபொருள்வயிற் சென்றநங்காதலர், வருவர்கொல்வய
ழாய் வலிப்பல்யான்கேளுநீ,, இதுதரவு, அடிதாங்குமளவின்றி யழல
னவெம்மையாற், கடியவேகனங்குழாய் காடென்றாரக்காட்டுள், துடி
டிக்கயந்தலைக்கல க்கிபசின்னீரைப், பிடியூட்டிப் பின்னுண்ணுங் களி
றனவு முரைத்தனரே. இன்பத்தினிகந்தொரீஇ யிலைதீய்ந்தவுலவையா
, துன்புறூஉந் தகையவேகா டென்றாரக்காட்டுள், அன்புகொண்மடப்
பெடை யசைஇயவருத்தத்தை, மென்சிறகராலாற்றும் புறவெனவுமு
ரைத்தனரோ, கன்மிசைவேய்வாடக்கனைகதிர் தெறுதலால், துன்னரூஉந்
தகையவேகாடென் றாரக்காட்டுள், இன்னிழலின்மையால் வருந்தியமட

டப்பிணைக்குந், தன்னிறைக்கொடுத்தளிக்குங் கலையெனவுமுரைத்தன ரே. இவைமூன்றுந்தாழிசை, எனவாங்கு. தனிச்சொல். இனைநலமுடை யகானஞ்சென்றோர், புனைநலம்வாட்டுன ரல்லர்மனைவயிற், பல்லியம்பா ங்கொத்திசைத்தன, நல்லெழிலுண்கணு மாடுமாலிடனே." இதுசுரிதக ம். இஃதளவடியானும், துள்ளலோசையானும், வந்தமையால் நேரிசை யொத்தாழிசைக் கலிப்பா. கண்ணார்கொடிபோற் றுளங்கிடைமாதே! ஈ து. மகடூஉமுன்னிலை. சுறமறிதொன்னலத்தின் புலம்பென் றுளங்கொ ளோவலரோ நினர் வஞ்சிக்குதாரணமே-எ-து" சுறமறிவன துறையெல் லாம், இறவீன்பன்னிலெல்லாம், மீன்றிரிவனகிடங்கெல்லாம், தேனரு ழ்வனபொழிலெல்லாம், எனவாங்கு, தண்பணைதழீஇயவிருக்கை, மண் கெழுநெடுமதின்மன்னனூரே." இஃதிருசீரடியானும், தூங்கலோசையா னும் வந்தமையால், குறளடிவஞ்சிப்பா. "தொன்னலத்தின்புலம்பலைப் பத் தொடித்தோண்மேல், பன்னலத்தகலந்தொலையப்பரிவெய்தி, என் னலத்தகையிதுவென்னவெழில்காட்டிச், சொன்னலத்தைப் பொருள்க ருத்தினிற் சிறந்தாங், கெனப்பெரிதும், கலங்கலொய்திவிடுப்பவும், சில ம்பிடைச்செலவுஞ் சேணிவந்தற்றே" இதுமுச்சீரடியானும், தூங்கலோ சையானும். வந்தமையாற் சிந்தடிவஞ்சிப்பா. உதாரணமே யென்பது இ றுதிவிளக்காகக்கொள்க.

ஈரடிவெண்பாக்குறள் குறட்பாவிரண்டாயிடைக்கட்
சீரியலான்றனிச்சொல்லடி மூய்ச்செப்பலோசைகுன்று
தோரிரண்டாயுமொருவிகற்பாயும வருவதுணடேல்
நேரிசையாகுநெரிசுரி பூங்குழனேரிழையே.

இ-கை. குறள்வெண்பா, நேரிசைவெண்பா, இன்னிசைவெண்பா, பஃறொடைவெண்பா, நேரிசைச்சிந்தியல்வெண்பா, இன்னிசைச்சிந்திய ல்வெண்பா-எ-ம. நேரிசையாசிரியப்பா, இணைக்குறளாசிரியப்பா, நிலைம ண்டிலவாசிரியப்பா. அடிமறிமண்டிலவாசிரியப்பா, எ-ம். நேரிசையொ த்தாழிசைக் கலிப்பா, அம்போதரங்கவொத்தாழிசைக் கலிப்பா, வண் ணகவொத்தாழிசைக் கலிப்பா, கலிவெண்பா, வெண்கலிப்பா, தரவுக்கொ ச்சகக் கலிப்பா, தரவிணைகொச்சகக் கலிப்பா, சிஃறாழிசைக் கொச்சக க்கலிப்பா, பஃறாழிசைக்கொச்சகக்கலிப்பா, மயங்கிசைக் கொச்சகக்கலி ப்பா, எ- ம். குறளடிவஞ்சிப்பா, சிந்தடிவஞ்சிப்பா, எ- ம். புறநிலைவாழ் த்துமருட்பா. கைக்கிளைமருட்பா, வாயுறைவாழ்த்து மருட்பா, செவி யறிவுறூஉமருட்பா, எ- ம். கிடந்தபாவிகற்பங்களுட் செப்பலோசையு டைத்தாய், ஈற்றடிமுச்சீராய், ஏனையடிநாற்சீராய், வெண்சீரும், இயற் சீருமவந்து, வெண்டளைதட்டு, வேற்றுத்தளைவிரவாக காக [illegible]

ரன். மலவொன்னும் வாய்பாட்டாலிறும் வெண்பாவினை அடியாலும் தொடையாலும், இசையாலும், பெயர்வேறுபாடுணர்த்து வாவெடுத்துக்கொண்டார். அவற்றுள், இக்காரிகை, குறள்வெண்பாவும், நேரிசைவெண்பாவு மாமாறுணர்த்து- ற்று.ஈரடிவெண்பாக்குறள்- எ- து- இரண்டடியான்வரும் வெண்பா குறள் வெண்பாவெனப்படும்- 'எ-று, என்னை, தொடையொன்றடியிரண்டாகிவருமேற், குறளின்பெயர்க் கொடைகொள்ளப்படுமே "என்றார்காக்கைபாடினியார்."உருவுகண்டெள்ளாமைவேண்டுமுருள் பெருந்தேர்க், கச்சாணியன்னாருடைத்து,, "உடையார்முன்னில்லார் போலேக்கற்றுங்கற்றார், கடையரே கல்லாதவர்" இவையிரண்டடியான் இரண்டுவிகற்பத்தாலும், ஒருவிகற்பத்தாலும் வந்தகுறள்வெண்பா- குறட்பாவிரண்டா யிடைக்கட்சீரியவான் றனிச்சொல்லடியாய்ச் செப்பலோசை குன்றாதோரிரண்டாயு மொருவிகற்பாயும் வருவதுண்டேனேரிசையாகு ம- எ-து- இரண்டுகுறள்வெண்பாவாய் நடுவுமுதற் றொடைக்கேற்ற தனிச சொல்லாலடிநிரம்பிச், செப்பலோசை வழுவாது முதலிரண்டடியும், ஒருவிகற்ப மாய்க், கடையிரண்டடியுமற்றொருவிகற்பமாய் வரினும், நான்கடியும், ஒருவிகற்பமாய் வரினும், இருகுறணேரிசை வெண்பாவெனப்படும்- எ - று. வ- று. "தடமண்டு தாமரையின்றாதாடலவன், இடமண்டிச்செல்வதனைக்கண்டு, பெடை யெதிர்ண்டு, பூழிக்கதவடைக்கும் புத்தூரேபொய்கழிக், தூழிடாயினுனார் "அரியவனாகீண்டு காட்டுவார்யாரே, பெரியவரை வயிரங்கொண்டு தெரியில், கரிய வனாகிலேயார காய்ந்தாலென் செய்வார், பெரியவரைவயிரங்கொண்டு. "இவை இரண்டுகுறள் வெண்பாவாய் நடுவுமுதற்றொடைக்கேற்ற தனிச்சொல்லா லடிநிரம்பிச் செப்பலோசை வழுவாது இரண்டுவிகற்பத்தாலும், ஒருவிகற்பத்தாலும் வந்த இருகுறணேரிசை வெண்பா, சீரியவான்றனிச் சொல்லடிமூன்றென்று சிறப்பித்தவதனல், முதற்குறட் பாவிலேறு தனிச்சொல்லிடை வேறுபட்டு விட்டிசைசாலின் ஒற்றுமைப்படாத உலோகங்களை ஒற்றுமைப் படப்பற்றாசி[illegible] விளக்கினுற்போல, முதற்குறட்பாவினிறுதிக் கணென்றும், இரண்டுமசைகூட்டி யுச்சரிக்கப்பட்டு இரண்டுவிகற்பத்தாலும், ஒருவிகற்பத்தாலும் வருவனவுமுள, அவைஒருசாராசிரிடை நேரிசைவெண்பா வெனக்கொள்க. வ- று. "தாமரையின்றாதாடித்தன்பெடைவலேச் சேறளைந்து,காமரையினுற்றமேதா ஊறும். தாமரைபோற், கண்ணுன்முகத்தான் கரதலத்தான் சேவடியென்,கண்ணார்வஞ்சிசெய்யுங் கருத்து,,'-கருடமுமுன்படாப்போகமுந்துய்க்காத். தருமமுந் தககாக்கெசெய்யா, ஒருவிலேயுமுட்டின்றிமூன்று முடியுமே லஃதென்ப, பட்டினபபெற்றவர்" இவை

முதற் குறட்பா விறுதிக்கண் ஈரசையானும், ஓரசையானும், ஆசிட்டு, இரண்டு விகற்பத்தான் வந்த, ஆசிடைநேரிசைவெண்பா. "ஆர்த்தவறிஞரியாண்டிலே ரொராயினும், காத்தோம்பித்தம்மை யடக்குப, மூத்தொரூஉம், தீத்தொழிலேகன்றித் திரிதந்தெரிவைபோற், போத்தறார்புல்லறிவினார்," "வஞ்சியேனென்றவனற னூருரைத்தான்யானுமவன், வஞ்சியானென்பதனால்வாய் நேர்ந்தேன்- வஞ்சியான், வஞ்சியேன் வஞ்சியேனென்றுரைத்தும் வஞ்சித்தான். வஞ்சியாய வஞ்சியார்கோ" இவைமுதற் குறட்பாவின் இறுதிக்கண் ஓரசையானும், ஈரசையானும், ஆசிட்டொருவிகற்பத்தான் வந்த ஆசிடைநேரிசைவெண்பா. நெரிசுரிபூங் குழனேரிழையே- எ- து- மகடூஉமுன்னிலை. வெண்பாவகவல் கலிப்பாவளவடிவஞ்சியென்னுங் காரிகையுள், வெண்பாசெப்பலோசையான் வருமென்றும், ஈண்டுச்செப்பலோசை குன்றுமென்றுங் கூறியது - கூறியதுகூறிற்றாகாது. என்னை" கூறியதுகூறினுங் குற்றமில்லை, வேறொருபொருளை விளக்குமாயின்" என்றாராகலின் ஒருசாராசிரியர்களைத் தத்தம் உதாரணவாய்ப்பாட்டால் ஓசையூட்டும்பொழுது தத்தமோசையிற் சிறிதுவழுவி வருவனவுளவாயினும். வெண்பாவிற்குச் சிறிதும் செப்பலோசைவழுவலாகாதென்று யாப்புறுத்தற் பொருட்டாகவும், செப்பலோசையிற் சிறிதுவழுவி வந்தநேரிசை இன்னிசைவெண்பாக்களை ஒருபுடை யொப்புமைநோக்கி வெண்டுறைப்பாற் படுத்துவழங்கினும். இழுக்காதென்பதறிவித்தற் காகவுமெனக்கொள்க-என்னை" தத்தம்பாவினத்தொப்பினுக்குறையினு. மொன்றொன்றொவ்வாவேறுமை வகையாற். பாத்தம்வண்ணமேலாவாயிற், பண்போல் விகற்பம் பாவினந்தாகும்,, "குறட்பாவிரண்டடி நால்வகைத்தொடையான். முதற்பாதனிச சொல்லினடிமூஉ யிரண்டு, விகற்பினப்பவனநேரிசைவெண்பா "என்றாரவிநயனார். "இரண்டாமடியின தீரொரூஉவெய்தி, முரண்டவெதுகையதாவினுமாகாதிரண்டுதுணியாவிடைதனிபோழ்ந்து, சீர்சடிநான்கின நேரிசவெண்பா. "ருர்காக்கைபாடினியார்.

உருவுகண்டெள்ளாவுடையார் குறண்மடவாய்கடமண்
டரிபவளங்கண்டிருகுறணெரி சைதாமனாயின்
கருமரும்மார்ந்தவும் வஞ்சியுங்காமர்தனிச்சொன்மூன்
றெரிநுண்கருங்குழனேரிழையாசிட்ட நேரிசையே.

இவ்வாறாச் சூத்திரக்காரிகையின் வழியே குறள்வெண்பாவிற்கும், நேரிசைவெண்பாவிற்கும், ஆசிடைநேரிசைவெண்பாவிற்குங்காட்டியவிலக்கியங்களைமுதனினைத்துக்கொள்க. (௬)

ஒன்றும்பலவும்விகற்பொடுநான்கடியாய்த்தனிச்சொல்
இன்றிநடப்பினஃதின்னிசைதுன்னுமடிபலவாய்ச்
சென்றுநிகழ்வபஃறொடையாஞ்சிறைவண்டினங்கள்
துன்றுங்கருமென்குழற்றுடியேரிடைத்தூமொழியே.

இ- கை. இன்னிசைவெண்பாவும், பஃறொடைவெண்பாவுமாமாறு ணர்த்து - ற்று. ஒன்றுமபலவும் விகற்பொடுநான் கடியாய்த்தனிச்சொ லின்றிநடப்பினஃதின் னிசைதுன்னும்- எ-து- ஒருவிகற்பத்தானும், பலவிகற்பத்தானும், வந்துநான்கடியாயத் தனிசசொலவில்லாமல் நடப் பினஃதினனிசைவெண்பா வெனப்படும்- எ - று. வ- று. "வைகலும்வை கல்வரக் கண்டுமஃதுணரார், வைகலும்வைகலை வைகுமென்றின் புறு வர், 'வைகலும்வைகற்றம்வாழ் நாண்மேல்வைகுதல், வைகலைவைத்து ணராதார்,, "துகடீரபெருஞ்செல் வந்தோன்றியக் காற்றொட்டுப், பக டுநடந்தகூழ்பல்லாரோடுண்க, வகடுறயார்மாட்டுநில்லாதுசெல்வம், சக டக்காற் போலவரும்" இவைநான்கடியாய்த தனிசசொல்லின்றி ஒரு விகற்பத்தான், வந்தஇன்னிசைவெண்பா, "நடற்சூட்டம்போழ் வாகல வர்ப்பைக்குட்டம், பாய்மாவுடையானு டைகிற் சூந்தோமில், தவங்கு ட்டந்தன்னுடையா னீந்துமவைக்குட்டம், கற்றான்கடந்துவிடும், "இ ன்று கொலன்று கொலென்று கொலென்னாது, பின்றையே நின்றது கூற்றமென்றெண்ணி, ஒருவுமின றீயவை யொல்லும் வகையான், மரு வுமின மாண்டாரறம்" இவை நான் கடியாயத் தனிசசொல் லின்றிப் பலவிகறபத்தான்வந்த இன்னிசைவெண்பா- ஒன்றல்லனவெல்லாம் பல வென்பதுதமிழ நடையாகலின். என்னை "ஒனறல்லவைபல தமிழ்நடை வடநூ, லிரண்டல்லவைபலவெனறிசினோரே" என்றாராகன், துன்னுமெ ன்றுமிகுத்துச சொல்லியவதனால், இரணடாமடியினிறுதி தனிசசொற் பெற்று மூன்றுவிகற்பத்தான் வருவனவும, மூனறாமடியினிறுதி தனிச் சொற்பெற்று இரண்டுவிகறபத்தான்வருவனவும, தனிசசொல்லின்றிப் பலவிகற்பாகி, அடிதோறும ஒரூஉத்தொடை பெற்றுவருவனவும், பிற வாற்றானு நேரிசைவெண்பாவிற் சிறிதுவேறுபட்டு நான்கடியான்வருவ னவும, இனனிசைவெண்பாவெனபபடும்- வ-று- "அங்கண்விசும்பினகனி லாபபாரிக்கும, திங்களுஞ்சான்றோருமொப்பாமற், றிங்கள், மறுவாற்று ஞ்சான்றோ ரஃதாற்றாதெருமந்து, தேய்வரொருமாசுறின்" "மலிதேரா ன்கச்சியுமாகடலுந்தமமுள், ஒலியும்பெருமையுமொக்கு, மலிதேரான், கச்சிபடுவ கடல்படாகச்சி, கடல்படுவ வெல்லாம்படும்" இவையிரண்டா மடியி னிறுதிதனிசசொற்பெற்று மூன்றுவிகற்பத்தான்வந்த இன்னிசை வெண்பா- "யாம்படவேண்டா- செயநர்ருமில்" இதுமூன்றுமடியினி

றிரண்டடிதனிச்சொற்பெற்று இரண்டுவிகற்பத்தான் வந்த இன்னிசைவெண்பா. "இன்றுமைவேண்டினிரவொழிக, இந்நிலத்து, மன்னுதல்வேண்டி னிசைநடுக, தன்னொடு, செல்வதுவேண்டினறஞ்செய்க, வெல்வது, வேண்டின்வெகுளிவிடல்" இவையடிதோறுந் தனிச்சொற்பெற்று மூன்றுவிகற்பத்தான்வந்த இன்னிசைவெண்பா- "மழையின்றி மாநிலத்தார்க்கில்லை, மழையும், தவமிலாரில்வழியில்லை, தவமும், அரசிலாரில்வழியில்லை அரசனும், இல்வாழ்வாரில்வழியில்" இஃதடிதோறுமொரூஉத்தொடை பெற்று நேரிசைவெண்பாவிற் சிறிதுவேறுபட்டு வந்தமையான் இன்னிசைவெண்பா. பிறவும்வந்துழிக்கண்டுகொள்க. என்னை "தனிச்சொற்றழு வலவாகிவிகற்பம், பலபலதோன்றினு மொன்றேவரினு, மிதற்பெயரின் னிசையென்றிசினோரே,, "ஒருவிகற்பாகித்தனிச்சொலின்றியு, மிருவிகற்பாகித்தனிச் சொலின்றியுந், தனிச்சொற்பெற்றுப் பலவிகற்பாகியுந், தனிச்சொலின்றிப் பலவிகற்பாகியு, மடியடிதோறுமொரூஉத்தொடையெனவு, மெனவைந்தாகுமின்னிசைதானே. என்றார்பிறருமெனக்கொள்க. அடிபலவாய்ச்சென்று நிகழ்வபஃறொடையாம். எ- து. நான்கடியின்மிக்க பலவடியான்வருவது பஃறொடைவெண்பாவெனப்படும். எ- று. நேரிசைவெண்பாவிற்கும், இன்னிசைவெண்பாவிற்கும், நான்கடியேயுரிமைசொன்னமையான் நான்கடியின்மிக்கபலவடியால் வருமென்பதாற்றலாற் போந்தபொருளெனக் கண்டுகொள்க. வ- று. வையகமெல்லாங்கழனியாவையகத்துச், செய்யகமே நாற்றிசையின்றேயங்கள், செய்யகத்து, வான்கரும்பே தொண்டைவளநாடு, வான்கரும்பின், சாறேயந்நாட்டுத்தலையூர்கள், சாறட்ட, கட்டியேகச்சிப்புறமெல்லாங், கட்டியுட், டாணேற்றமானசருக்கரைமாமணியே, ஆணேற்றான் கச்சியகம்" இதுபலவிகற்பத்தான் வந்தவெழுடிப்பஃறொடைவெண்பா, "சேற்றுக்கானிலஞ் செருவென்ற வேந்தன்வேல், கூற்றுறழ்மொய்ம்பிற், பகழிபொருகயற், றேற்றந் தொழில் வடிவுதம்முட்டுமாற்றம், வேற்றுமையின்றியேயொத்தனமாவேடர், ஆற்றுக்காலாட்டியர்கண் "இஃதைந்தடியான்வந்த ஒருவிகற்பப்பஃறொடைவெண்பா. "பன்மாடக்கூடன்மதுரைநெடுந்தெருவில், என்னோடுநின்றாரிருவரவருள்ளும், பொன்னோடைநன் றென்றாளல்லளே பொன்னோடைக், கியானைநன்றென்றாளுமந்நிலையள்யானை, யெருத்தத்திருந்த விலங்கிலைவேற்றென்னன், றிருத்தார் நன்றென்றேன்றியேன்" இஃது ஆறடியான்வந்த பலவிகற்பப்பஃறொடைவெண்பா. இனியேழடியின்மிக்க பஃறொடைவெண்பாக்களை யாப்பருங்கலவிருத்தியுட்கண்டுகொள்க. சென்றுநிகழ்வவென்று சிறப்பித்தவதனால் செப்பலோசையிற சிறிதுவழுவிவந்த பஃறொடைவெண்பாக்களை ஒருபுடையொப்புமை

நேரிசைவெண் கலிப்பாற்படுத்துவழங்கினு மிழுக்காதென்ப தறிவிந்தற் கென்க்கொள்க. சிறைவண்டினங்கண்ணுங் கருமென்குழற்றிடியேரிடைத்தமொழியே- எ-து- மகடூமுன்னிலை. என்னை "தொடையடியித்துணை யென்னும்வழக்க முடையதையின்றி யுறுப்பழிவில்லா, நடையது பஃறொடைநாமங்கொளலே. என்றார் காக்கைபாடினியார்.

வைகலும்வைகறுகடிர்கட்டக்குட்ட மின்றுமங்கண்
எயதுமலிதேர்வளமழையின்னனவின்னிசைபோல்
வையகமெல்லாம்பலவிகற்பேற்றதுசேற்றொருகால்
பையரவல்குற்பண்மாடம்பஃறொடைப்பல்விகற்பே.

இவ்வுரைச் சூத்திரக்காரிகையின்வழியே இன்னிசைவெண்பாவிற்கும், பஃறொடைவெண்பாவிற்கும், காட்டிய இலக்கியங்களை முதனினைத்துக்கொள்க. (௪)

நேரிசையின்னிசைபோலநடந்தடிமூன்றின்வந்தால்
நேரிசையின்னிசைச்சிந்தியலாகுங்கரிலவெள்ளைக்
கோரசைசசீருமொனிசேர்பிறப்புமொண்காசுமிற்ற
சீருடைசசிநதடியேமுடிவாமென்றுதேறுகவே.

இ-கை. நேரிசைச்சிந்தியல்வெண்பாவும், இன்னிசைச்சிந்தியல்வெண்பாவும.எல்லாவெண்பாவிறகு மீறுமாறுமுணர்த்து-ற்று.நேரிசையின்னிசைபோல நடந்தடிமூனறின் வந்தானேரிசையின்னிசைச் சிந்தியலாகும் எ-து- நேரிசைவெணபாவேபோல இரண்டாமடியி னிறுதி தனிசசொற்பெற்று இருவிகற்பத்தாலும,ஒருவிகற்பததாலும்,மூன்றடியான்வருவன நேரிசசசிந்தியல்வெண்பாவெனவும,இன்னிசைவெண்பாவேபோலத்தனிச்சொலின்றி ஒருவிகற்பததாலும்,பலவிகற்பத்தாலும், மூன்றடியான் வருவன இன்னிசைச சிநதியல் வெண்பாவெனவும் வழங்கப்படும்-எ-று என்னை "நேரிசைசசிந்து மின்னிசைசசிந்துமென், றீரடிமுக்காலிருவகைப்படுமே" என்றாராகலின். வ-று. "நற்கொறறவாயினறுங்குவளைத்தார் கொண்டு, சுற்றும்வண்டாரப்பப் புனடததாளே. பொறறேரான், பாலைவாயின்மகள்,, "அறிநதானேயேத்தியறிவாங்கறிந்து, சிறந்தார்க்குச் செவ்வனுரைப்ப, சிறநதார், சிறந்தமையாராய்ந்துகொண்டு,, இவை இரண்டாமடியினிறுதிதனிற்சொற்பெற்று இருவிகற்பத்தாலும்,ஒருவிகற்பத்தாலும்வந்த நேரிசைசசிந்தியல்வெண்பா. "நறுநீலநெய்தலுங் கொட்டியுந்தீண்டிட,பிறநாட்டுப்பெண்டிர் மூடிநாறும்பாரிரில், அறநாட்டுப்பெ

ண்டிரடி,, இது தனிச்சொலின்றி ஒருவிகற்பத்தான்வந்த ந்தியல்வெண்பா. "சுரையாழவம்மி மிதப்பவரையனைய, யானைக்குநீத்து முயற்குநிலையென்ப, கானக்நாடன்சுனை,, "முல்லைமுறுவலித்துக்காட்டி னமெல்லவே,சேயிதழ்க்காந்தடுப்பின்றபோயினர், திண்டேர்வரவுரைக்குங்கார்,, இவைதனிச்சொலின்றிப் பலவிகற்பத்தான்வந்த இன்னிசைச்சிந்தியல்வெண்பா.

நற்கொற்றவாயிலறிந்தாளையுநறும்பூங்குழலாய்
சொற்பெற்றநேரிசைசசிந்தியலாஞ்சுரையாழவம்மி
மிற்றற்குரியநறுநீலநெய்தலுமுல்லையுமென்
றெற்றப்படாதனவின்னிசைசசிந்திற்கிலக்கியமே.

இவ்வுரைச் சூத்திரக்காரிகையின்வழியே நேரிசைச சிந்தியல்வெண் பாவிற்கும், இன்னிசைச்சிந்தியல்வெண்பாவிற்குங் காட்டிய இலக்கியங் களை முதனினைத்துக்கொள்க. நிகரிலவெள்ளைக் கோரசைசசீருமொழி சோ பிறப்புமொண்காசுமிற்ற சீருடைச் சிந்தடியேமுடிவாமெனறு தேறுகவே-எ-து-எல்லாவெண்பாவிற்கு நாளென்னும் நேரசைச்சீரானும், மலரென்னு நிரையசைச்சீரானும. காசுபிறபபென்னும் வாய்பாட்டிற் குற்றியலுகரமீறுகிய நேரீற்றியற்சீரானும், இற்றமுசசீரடியேயீற்றடியாவதென்றுதெளிக-எ-று. வெண்பாவி னிறுதிசசீாக்குக் குற்றியலுகரமீறாக வேறுதாரண மெடுத்தோதியதூஉம், அசைசசீர்க்குதாரணம் வேறுகாட்டிப் போந்ததூஉம், வெண்பாவினை அலகிட்டுதாரணவாய்பாட்டா னோசையூட்டும்பொழுது, பிறவாய்பாட்டானோசை யூட்டலாகாதாகலினெனக்கொள்க. இனியவ்வாற்றானோசையூட்டுமாறு. "பாலொடு-தேன்,, என்பதனை அலகிட்டு,முறையானே,கூவிளம,கூவிளம,தேமா,கருவிளம,கூவிளம்.கூவிளம்,நாள்-என்றோசையூட்டுக. "நன்றறிவாரில்-அவலமிலர்,, என்பதனை அலகிட்டு, முறையானே கூவிளம் தேமா புளிமா கருவிளங்காய் தேமா புளிமா மலர் என்றோசையூட்டுக"மங்கலமென்பமனைமாட்சிமற்றத,னன்கலனன்மக்கட்பேறு,, என்பதனை அலகிட்டுமுறையானே கூவிளம் தேமா புளிமாங்காய் கூவிளம கூவிளம் தேமாங்காய் காசுஎன்றோசையூட்டுக "அகரமுதலவெழுத்தெல்லாமாதி, பகவன்முதற்றேயுலகு,,என்பதனை அலகிட்டுமுறையானே புளிமா புளிமா புளிமாங்காய் தேமா புளிமா புளிமா பிறப்பு என்றோசையூட்டுக, பிறவெண்பாக்களையும், இவ்வாறலகிட் டோசையூட்டிச்செப்பலோசை வழுவாமற்கண்டுகொள்க. நிகரில்வெள்ளைக்கென்று சிறப்பித்தவதனால்,குறள்வெண்பாவினை ஓரடிமுக்காலெ

வெண்பாவினை ஈரடிமுக்காலென்றும்,நேரிசைவெண்பா

மூவடிமுக்காலென்றும், இன்னிசை வெண்பாவினை இன்னிசை மூவடிமுக்காலென்றும், பஃறொடைவெண்பாவினைப் பலவடிமுக்காலென்றும், பெயரிட்டுவழங்குவ ரொருசாராசிரியரெனக்கொள்க. ஒளிசேர்பிறப்பு மொண்காசுமென்று சிறப்பித்தவதனாற் காசுபிறப்பென்னும்வாய்பாட்டான் முற்றியலுகரமிறுதியா நேரீற்றியற்சீரிறுதியாகிய மூச்சீரடியானுமிறுவனவுமுள ஒருசார்வெண்பாவென்ப தறிவித்தற்கெனக்கொள்க. வ-று "மஞ்சுசூழ்சோலை மலைநாடமூதறாலும், அஞ்சொன்மடவார்க்கருளு,, இதுபிறப்பென்னும் வாய்பாட்டான் முற்றியலுகர மீறுயிற்றவெண்பா. "இனமலர்க்கோதாயிலகுசீர்ச்சோப்பன், புனைமலர்த்தாரகலம்புல்லு,, இது காசென்னும்வாய்பாட்டான்முற்றியலுகரமீறுயிற்றவெண்பா. இவைசெய்யுளியலுடையார் காட்டியவெனக்கொள்க. என்னை "செப்பலிசையனவெண்பாமற்றவை, யந்தடிசிந்தடியாகலுமவ்வடி, யந்தமசைச்சீராகவும்பெறுமே,, என்பதியாப்பருங்கலம். "குற்றியலுகரமுமுற்றியலுகரமும், பெற்றவாய்பாட்டானிற்றுமென்ப., என்றாராகலின், "மாவாழ்புலிவாழ்சுரமுளவாகமணியிறுவா, யோவாதளவெடுத்தூஉங்கெழூஉவுமுதாரணமாய், நாவார்பெரும்புகழ் நத்தத்தர் யாப்பினடைந்தது போல். தேயவாமுகரம்வந்தாலியற்சீரிங்குச் செப்பியதே,, இக்காரிகை சூத்திரத்துள் ஓசையூட்டுதற்கருத்தாவது-மாவாழ்சுரம், புலிவாழ்சுரமெனும். வஞ்சியுரிச்சீரிரண்டுமுளவாகவைத்து ஒருபயனோக்கித் தூஉமணி கெழூஉமணி என்றளபெடுத்து நேர்நடுவாகியவஞ்சி யுரிச்சீர்க்குதாரண மெடுத்துக்காட்டினார் நத்தத்தனார் முதலாகிய வொருசாராசிரியர், அதுபோல இந்நூலுடையாருந் தேமா புளிமா வென்னு மிரண்டுமேரீற்றியற்சீருமுளவாக வெண்பாவி னிறுதிச்சீர்க்கு உதாரணவாய் பாட்டாமோசை யூட்டுதற்பொருட்டாகக் குற்றியலுகரமீறாகிய காசுபிறப்பென்னும் வாய்பாட்டானே நேரீற்றியற்சீர்க்கு வேறுதாரணமெடுத்தோதினாரெனக்கொள்க. (௰)

அந்தமில்பாதமளவிரண்டொத்துமுடியின்வெள்ளைச்
செந்துறையாகுந்திருவேயதன்பெயர்சீர்பலவாய்
அந்தங்குறைனவுஞ்செந்துறைப்பாட்டினிழிபுமங்கேழ்
சந்தஞ்சிதைந்தகுறளுங்குறளினத்தாழிசையே.

இ-ள். குறள்வெண்பாவிற் கினமாகிய துறையும், தாழிசையுமாமாறுணர்த்து-ற்று. அந்தமில்பாதமள விரண்டொத்து முடிபின்வெள்ளைச் செந்துறையாகும்-எ-து-இரண்டடியாய்த்தம்முளள வொத்துவருவது வெண்செந்துறையென்றும், செந்துறை வெள்ளையென்றும், பெயரிட்டு வழங்கப்படும்- எ-று. அந்தமில்பாதமென்று சிறப்பித்தவதனால். விழுமிய

பொருளும்,ஒழுகியவோசையுமுடைத்தாய்வருவதெனக்கொள்க.என்னை "ஒழுகியவோசையினொத்தடியிரண்டாய், விழுமியபொருளதுவெண்செந்துறையே. என்பதியாப்பருங்கலம்-வ-று. ஆகவியுலகத்து மக்கட்கெல்லாம், ஓதலிற்சிறந்தன் றொழுக்கமுடைமை,, "பொன்னறைவேய்ந்த செல்வனடியிணை,என்றுமேத்தித்தொழுவோமியாமே,, இவை விழுமியபொருளும், ஒழுகியவோசையுமாய் வந்தமையான் வெண்செந்துறை. திருவே-ள-து-மகடூஉமுன்னிலை.சீரபலவாயந்தங்குறைனவும்-எ-து-நாற்சீரின்மிக்க பலசீரான்வந்து அடியிரண்டாய் ஈற்றடி குறைந்துவருவன குறட்டாழிசை யெனப்படும்-எ-று. இரண்டடி யென்பததிகாரம் வருவித்துரைக்கப்பட்டது, குறட்டாழிசையெனினும், தாழிசைக் குறளெனினு மொக்கும். சீரவகுர யறையிலாமைபால் எனைத்துசீரானும், அடியானும், வரப்பெறு மெனக்கொள்க, வ-று. 'நண்ணுவார்வினை நையநாடொறு நற்றவர்க்கரசராயஞானநற், கண்ணினனடியேயடைவார்கள் கற்றவரே,, "நீலமாகடனீடுவாரிநின்றபோற்பொங்கிப் பொன்றுமாங்கவை, காலம் பலகாலஞ்சென்றுஞ் செல்வாயாகஞை சழிதலுமே,, எ-று. இவை ஈற்றடி குறைந்து இரண்டடியாய்ப் பலசீரான்வந்தமையால், குறட்டாழிசை. செந்துறைபபாட்டினிழிபும். எ-து அடியிரண்டாய் அளவொததுவிழுமியபொருளும், ஒழுகிய வோசையுமின்றி இவ்வாறே செந்துறைவெள்ளையிற்சிதைந்து வருவனவெல்லாஞ் செந்துறைச் சிதைவுத்தாழிசைக்குறளெனப்படும. எ-று. வ-று. "பிண்டியினிழற் பெருமான்பிடாத்தை, மணடலந்தோன்றுமால்வாழியன்னய,, "அறுவர்ககறுவனைப் பெறுமுங்கௌந்தி, மறுவறுபதநினிபோல் வையயினீரே,, இவை விழுமியபொருளும், ஒழுகியவோசையுமின்றி இரண்டடியுந் தம்முளொத்து வந்தமையிற செந்துறைசிதைவுத்தாழிசைக்குறள. அங்கேழ்சந்த ஞ்சிதைந்த குறளுங் குறளினததாழிசையே. எ-து. செப்பலோசையிற் சிதைந்து வேற்றுத்தளை தட்டுக குறள் வெண்பாவிற சிதைந்துவருவன வெல்லாங் குறள்வெண்பாவிறகினமாகிய குறட்டாழிசை யெனப்படும். "வண்டார பூங்கோதை வரிவளைக்கைத்திருநுதலாள், பண்டையலளல்படி,, இது சந்தஞ் சிதைந்ததாழிசைககுறள். என்னை "அந்தடிகுறைனவுஞ் செந்துறைச்சிதைவுஞ், சந்தழிகுறளுந்தாழிசைக்குறளே,,உரைத்தனவிரண்டுங், குறட்பாவினமே.,, என்பன யாப்பருங்கலம்.

மூன்றடிய ஞமுடிந்தடிதோறுமுடிவிடத்துத்
தான்றனிசசொற்பெறுந்தண்டாவிருந்தம் வெண்டாழிசையே
மூன் றடியாய்வெள்ளை போன்றிறுமூன்றிழிபேழுயாவாய்
ஆன்றடிதாஞ்சிலவந்தங்குறைந்திறும்வெண்டுறையே

இ-ளை. வெளிவிருத்தமும், வெண்டாழிசையும், வெண்டுறையுமா மாறுணர்த்து-ற்று. மூன்றடியானு முடிந்தடிதோறு முடிவிடத்துத் தனிச்சொற்பெறுந் தண்டாவிருத்தம்-எ-து மூன்றடியானுமூற்றுயவ்வ்ற்று அடிதோறும், ஒருசொலலே யிறுதிக் கட்டனிச்சொல்லாய் வருவது வெளிவிருத்த மெனப்படும் எ-று. மூன்றடியானுமென்ற வும்மையால் நான்கடியானும் வரப்பெறுமெனக்கொள்க. தண்டாவிருத்த மென்று சிறப்பித்தவதனால் நாற்சீரடி யுட்பட்டடங்காது வேறாய்வருவது ஈண்டுத் தனிச்சொல்லெனக்கொள்க. என்னை "ஒருமூன்றொரு நான் கடியடி தோறுந், தனிச்சொற்றழுவி நடப்பதுவெள்ளை விருத்தமெனப்பெயர் வேண்டப்படுமே. என்றார் சாக்கைபாடினியார். வ-று. "கொண்டன் முழங்கினவாற் கோபம் பரந்தனவாலென்செய்கோயான், வண்டுவரிபாட வாரதளவம் பூத்தனவா லென்செய்கோயான், எண்டிசையுந் தோகை யிருந்த கவினியங்கினவா லென்செய்கோயான்,, இது மூன்றடியான் என்செய்கோ யானென்னுந் தனிச்சொற்பெற்று வந்தவெளிவிருத்தம். "ஆவா வென்றே யஞ்சினராழ்ந்தாரொருசாரார், கூகூவென்றே கூவிளிகொண்டாரொருசாரார், மாமாவென்றே மாய்ந்தனர் நீந்தாரொருசாரார், ஏகீர்நாகீரொன்செய்து மென்றாரொருசாரார்,, இது நான்கடியாய ஒரு சாரா ரென்னுந் தனிச்சொற்பெற்று வந்த வெளிவிருத்தம். வெண்டாழிசையே மூன்றடியாய் வெள்ளைபோன்றிறும்-எ-து-மூன்றடியா யீற்றடி வெண்பாவேபோல முச்சீரடியானிறுவது வெண்டாழிசை யென்றும், வெள்ளொத்தாழிசை யென்றும், வழங்கப்படும்-எ-று. என்னை "அடியொருமூன்று வாதந்தடி சிந்தாய, விடினது வெள்ளொத்தாழிசையாகும். என்பதியாப்பருங்கலம். வ-று. "நண்பி தென்று தீயசொல்லார் முனபுநின்று முனிவுசெய்யார், அன்பு வேண்டுபவர்,, இது மூன்றடி யாசிரியத்தளையான் வந்தவெண்டாழிசை. மூன்றிழிபேரெழுசீர் வரம்பாயடிதாஞ் சில வந்தங்குறைந்திறும் வெண்டுறையே-எ-து மூன்றடிச் சிறுமையாய ஏழடிப்பெருமையாய் இடையிடை நான்கடியானும், ஐந்தடியானும், ஆறடியானும்வந்து பின்பிற் சிலவடி சிலசீர்குறைந்து வருவன வெண்டுறை யெனப்படும்-எ-று. ஆன்றடிதாமென்று சிறப்பித்தவதனால், முன்பிற்சில வடியோ ரோசையாயும், பின்பிற சிலவடி மற்றோரோசையாயும், வருவனவொரு சார்வேற்றொலி வெண்டுறை யெனக்கொள்க. என்னை "மூன்றடிமுதலா வேழடிகாறும்வந்தீற்றடி சிலசில சீர்தபநிற்பினும், வேற்றொலிவிரவினும் வெண்டுறையாகும் என்பதியாப்பருங்கலம். வ-று. "குழலிசையவண்டினங்கள் கோழிலைய செங்காந்தட் குலைமேற்பாய, அழலெரியின் முழங்கினவாலந்தோ வளியவென்றயல்வாழ்மந்தி, கலுழ்வனபோ

னைஞ்சயர்ந்த கல்லருவி தூஉம், நிழல்வரை நன்னாடனீப்பநோவல்லன்,, இது நான்கடியாய் ஈற்றடியிரண்டும், இரண்டுசீர் குறைந்துவந்த ஓரொலிவெண்டுறை. "தாளாளரல்லாதார் தாம்பலராயக்காலென்னாமென்னாம், யாளியைக்கண்டஞ்சியானை தன்கோடிரண்டும், பீலிபோற் சாய்த்து விழும்பிளிற்றியாங்கே,, இது மூன்றடியாய் ஈற்றடியிரண்டும் இரண்டுசீர் குறைந்துவந்த ஓரொலிவெண்டுறை "முழங்குதிரைக் கொற்கைவேந்தன் முழுதுலகுமேவல்செய முறைசெய்கோமான், வழங்குதிறல் வாண்மாறன் மாச்செழியன்றாக் கரியவைவேல்பாடிக், கலங்கினின்றொலாங் கருதலாகாவணம், இலங்குவாளிரண்டினு லிருகைவீசிப்பெயர்ந், தலங்கன்மலையவிழ்ந்தாடவாடுமிவள், பொலங்கொள் பூந்தடங்கட்கே புரிந்துநின்றொலாம், விலங்கியுள்ளந் தபவிளிந்துவேறுபவே,, இது ஏழடியாய் முதலிரண்டடியும் அறுசீராய் ஓரோசையாய்ப், பின்னைந்தடியும் நாற்சீராய் வேறோரோசையாய் வந்த வேற்றொலி வெண்டுறை. ஐந்தடியானு ஆறடியானும், வருவன யாப்பருங்கல விருத்தியுட்கண்டுகொள்க. மூன்றடியாய் வெள்ளைபோன்றிறுந்தாழிசை மூன்றிழிபேழ் ஆன்றடிதாஞ் சிலவந்தத்தடிகளனைய குறைந்து, தோன்றுந்துறை வெள்ளைதண்டாவிருத்தந்தனிச்சொல்வந்து, மூன்றடியானு முடியுமுடியுமொர்நானகினுமே., என்று வெண்பாவிற் கினமாகிய தாழிசை துறைவிருத்தங்கட்கு முறையானே இலக்கணஞ்சொல்லாது தலைதடுமாற்றமாகக் காரிகை சொல்லவேண்டியதென்னையோவெனின், ஒருசார் வெண்டுறையின் ஈற்றடியொன்றொருசீர் குறைந்துவருவன வுளவென்பதூஉம், வெள்ளொத்தாழிசையின் முதலிரண்டடியு நான்குசீரான் வருமென்பதூஉம், சிந்தியல் வெண்பா வொருபொருண்மேன் மூன்றடுக்கி வருவனவெல்லாம் வெள்ளொத்தாழிசையென்று வழங்கப்படுமென்பதூஉம், அறிவித்தற்கு வேண்டப்பட்டது. தலைதடுமாற்றந்தந்து புணர்ந்துரைத்தலென்பது தந்திரவுத்தியாகலான்-வ-று. "வெறியுறுகமழ்கண்ணி வேந்தர்கட்காயினும், உறவுறவரும்வழி யுரைப்பனவுரைப்பன்மற், செறிவுறுதகைமயினர் சிறந்தனரிவர்நமர், கறிவுறுதொழிலொன் றல்லவைசொல்லன்மின், பிறபிறவிகழ்வனபின்,, இது ஈற்றடி யொன்றொரு சீர்குறைந்துவந்த ஓரொலிவெண்டுறை. வெள்ளொத்தாழிசை முதலிரண்டடியும் நாற்சீராய வருவது நம்பிதென்னு மிலக்கியத்துட்கண்டுகொள்க, "அன்னாயறங்கொனலங்கிளர்சேட்சென்னி, ஒன்னாருடைபுறம்போல நலங்கவர்ந்து, துன்னான்றுறந்துவிடல் - ஏடியறங்கொனலங்கிளர்சேட்சென்னி, கூடாருடைபுறம் போலநலங்கவர்ந்து, நீடான்றுறந்துவிடல்—பாவாயறங்கொனலங்கிளர் சேட்சென்னி, மேவாருடைபுறம் போலநலங்கவர்ந்து', காவான்றுறந்து

ண்டல.,, இவைசிந்தியல்வெண்பா. ஒருபொருண் மேன் மூன்றடுக்கி வந் தமையான் வெள்ளொத்தாழிசை. என்னை "ஈரடிமுக்கா லிசைகொள நடந்து, மூன்றுடனடுக்கித்தோன்றி னொத்தாழிசை. என்றார் மயேச்சுரர்,,

கொண்டன் முழங்கினவாவாவிருத்தங்குழலிசைய
வண்டினம்வெண்டுறைதாளாமுழங்கொடுதாழிசையே
நண்பிதென்றார்கலிகொன்றைவெண்செந்துறைநீலநண்ணும்
பிண்டியறுவர்வண்டார்வெறிதாழிசைபெய்வளையே.

இவ்வுரைச் சூத்திரக் காரிகையின்வழியே வெண்பாவின காட்டிய இலக்கியங்களை முதனினைத்துக்கொள்க.

சடையயறபாதமுச்சீர்வரினேரிசைகாமருசீர்
இடைபலகுன்றினிணைக்குறளெல்லாவடியுமொத்து
நடைபெறுமாயினிலைமண்டிலநடுவாதியர்நத்
தடைதருபாததகவலடிமறிமண்டிலமே.

ஆரவலோசையோ டளவடித்தாகியும், இயற்சீர்பயின்றும், அயற்சீர்விரவியும், தன்றளைதழுவியும், பிறதளைமயங்கியும், நிரைநடுவாகியவஞ்சியுரிச்சீர் வருதலில்லா ஆசிரியப்பாவினை, அடியானும், தொடையானும் ஓசையானும், பொருளானும், பெயர்வேறுபாடுணர்த்துவா னெடுத்துக்கொண்டார் அவற்றுள், இக்காரிகை, நேரிசையாசிரியப்பாவும், இணைக்குறளாசிரியப்பாவும், நிலைமண்டில வாசிரியப்பாவும், அடிமறிமண்டில வாசிரியப்பாவுமாமாறுணர்த்து - ற்று. கடையயற்பாத முச்சீர்வரினேரிசை-எ-து ஈற்றயலடி முச்சீரான்வருவது நேரிசையாசிரியப்பா - எ-று. என்னை "அந்தவடியினயலடிசிந்தடி, வந்தனநேரிசையாசிரியம்மே, என்பதியாப்பருங்கலம்,, -வ-று- "நிலத்தினும் பெரிதேவானினுமுயர்ந்தன்று நீரினுமாரளவின்றேசாரற், கருங்கோற் குறிஞ்சிபூக்கொண்டு, பெருந்தேனிழைக்கு நாடனொடுநட்பே,, இஃதீற்றயலடிமுச்சீரான் வந்தமையானேரிசையாசிரியப்பா. காமருசீ ரிடைபலகுன்றினிணைக்குறள்-எ-து- ஈற்றடியும், முதலடியும், ஒழிந்து இடையடிகள் இரண்டும்பலவும், குறளடியானும், சிந்தடியானும், வருவன இணைக்குறளாசிரியப்பா எ-று. என்னை "அளவடியந்தமுமாதியுமாகிக, குறளடிசிந்தடியென்றாயிரண்டு மிடைவர நிற்பதிணைக்குறளாகும்,, என்றார் காக்கைபாடினியார். வ-று "நீரின்றண்மையுந் தீயின்வெம்மையும், சாரச்சார்ந்து, தீரத்தீருஞ், சாரனாடன்கேண்மை, சாரச்சாரச்சார்ந்து, தீரத்தீரத் தீர்பொல்லாதே,, இது முதலடியும் ஈற்றடியுநாற்சீராய் இடையடி யிருசீரானும், முச்சீரானும்வந்த இணைக்குறளாசிரியப்பா. "சிறியகட்பெறினேயெமக்கீயுமன்னே

பெரியகட்பெறினே, யாம்பாடத்தான் மகிழ்ந்துண்ணுமன்னே, சிறுசோற்றானும், நனிபலகலத்தன்மன்னே, பெருஞ்சோற்றானும், நனிபலகலத்தன்மன்னே, என்பொடுதடிபடுவழியெல்லாம், எமக்கீயுமன்னே, அம்பொடுவேலுழைவழியெல்லாம், தானிற்குமன்னே, நரந்தநாறுந்தன்கையால், புலவுநாறுமென்றலை தைவருமன்னே, அருந்தலையிரும்பாணரகன்மண்டைத் துளையுரீஇ, இரப்போர்கையுளும்போகிப், புரப்போர்புன்கண்பார்வைசோர, அஞ்சொன்னுண்டேர்ச்சிப் புலவர் நாவிற், சென்றுவீழ்ந்தன்றவன், திருந்திறத்தியங்கியவேலே, அரசாகசெந்தை யாணடுளனகொல்லோ, இனிப்பாடுநருமில்லை, பாடுநர்க்கொன்றீகுநருமில்லை, பனித்துறைப்பகன்றை நறைக்கொண்மாமலர், சூடாதுவைகி யாங்குப் பிறர்க்கொன், றீயாதுவீயு முயிர்தவப்பலவே,, இஃதிடையிடையே யீரசீரடியுமுச்சீரடியுமாய் வந்தமையால இணைக்குறளாசிரியப்பா. காமருசீமொன்று சிறப்பிந்தவதனால் ஆசிரியப்பா நான்கிற்கும் ஏயெனு மசைச்சொல்லானிறுவது சிறப்புடைத்து, பிறவெழுத்து மீற்றயவரப் பெறுமாயினுமெனக்கொள்க. என்னை "அகவலிசையன வகவன்மற்றவை, ஏஓஈஆயென்னையென்றிறுமே எனறாாதொல்காப்பியனர். எல்லாவடியு மொத்து நடைபெறுமாயி னிலைமண்டிலம். எ-து எல்லாவடியுந் தம்முளளவொத்து நாற்சீரடியாயவருவது நிலைமண்டிலவாசிரியப்பா-எ-று. வ-று "வேரல்வேலிவேர்க்கோட்பலவின, சாரனாடசெவ்வியையாகுமதி, யாரஃதறிந்திசினோரே சாரற், சிறுகோட்டுபெரும்பழந்தூங்கியாங்கிவள். உயிர்தவச்சிறிதுகாமமோபெரிதே,, இஃதெல்லாவடியு நாற்சீராயளவொத்து வந்தமையால் நிலைமண்டில ஆசிரியப்பா. மண்டிலமெனினும், நிலைமண்டிலமெனினு மொக்கும். நிலைமண்டில ஆசிரியப்பாவிற்கு என்னென்னுமசைச்சொல்லானிறுவது சிறப்புடைத்து பிறவெழுத்தொன்றானும் உயிரினானும், ஈற்றயவரவும் பெறுமெனக்கொள்க, என்னை "ஒத்தவடித்தாயுலையாமரபொடு, நிற்பதுதானேநிலைமண்டிலமே. னவென்னகிளவியை யீற்றப்பெறுதலு, மன்னபிறவுமந்தநிலைபெற, நிறகவுமபெறூஉ நிலைமண்டிலமே,, என்றாராகலின். நடுவாதியந்தத் நடைதருபாதத்தவல டிம்நிமண்டிலமே-எ-து எல்லாவடியு முதனடுவிறுதியாகவுச்சரிப்பினு மோசையும்பொருளு மிழையாது வருவதடிமறிமண்டில ஆசிரியப்பா எ-று. என்னை "மனப்படுமடிமுதலாயிறின்மண்டிலம்,, என்பதியாப்பருங்கலம். "உரைப்போகுறிப்பினுணர்வகையன்றி, யிடைபயான் முதலீறென்றிவைதம்முண், மதிககப்பட்டாதன மண்டிலயாப்பே,, என்றார் காக்கைபாடினியார். வ-று. "[illegible]ரல்பழனியசிறுகாணயாறே, சூரமகளிரா

ணங்கினரோ, வாரலெனினேயானஞ்சுவலே, சாரனாடனீவரலாறே,, இஃதெல்லாவடியு முதனடுவிறுதியாகவுச்சரிக்க,ஓசையும்பொருளும் பிழையாதுவந்த அடிமறிமண்டில ஆசிரியப்பா.

நேரிசையாகுநிலைத்திலுமென்பதிணைக்குறட்பா
நீரின்சிறியநிலைமையதாநிலைமண்டிலப்பா
வேரலென்றாகும்விரைமலர்க்கோதைவில்லேர்நுதலாய்
சூரல்பம்பென்பதடிமறியாகத்துணிந்தனரோ.

இவ்வுரைச் சூத்திரக் காரிகையின்வழியேஆசிரியப்பாநான்கிற்குங் காட்டிய இலக்கியங்களை முதனினைத்துக்கொள்க. (அ)

தருக்கியதாழிசைமூன்றடியொப்பனநான்கடியாய்
எருத்தடிநைந்துமிடைமடக்காயுமிடையிடையே
சுருக்கடியாயுந்துறையாங்குறைவிறெல்சீரகவல்
விருத்தங்கழிநெடிலான்கொத்திறுவதுமெல்லியலே.

இ-கை ஆசிரியத்தாழிசையும், ஆசிரியத்துறையும், ஆசிரியவிருத்தமுமா மாறுணர்த்து-ற்று. தருக்கியதாழிசைமூனறடியொப்பன- எ-து. மூன்றடியாய்த் தம்முள்ளொத்துவருவன ஆசிரியத்தாழிசை. எ-று. தருக்கியலென்று சிறப்பித்தவதனால், அவை ஒருபொருண்மேன் மூன்றடுக்கிவருவன சிறப்புடையன, தனியேவரப்பெறுமாயினுமெனக்கொள்க. என்னை "மூன்றடியொத்த முடிவினவாய்விடி, னான்றவகவற்றாழிசையாகும்,, என்பதியாப்பருங்கலம். வ-று. "கன்றுகுணிலாக் கனியுதிர்த்த மாயவன், இன்றுநம்மானுள் வருமேலவன்வாயிற், கொன்றையந்தீங்குழல் கேளாமோதோழீ. பாம்புகயிறாக்கடல் கடைந்தமாயவன், ஈங்குநம்மானுள்வருமேலவன்வாயில், ஆம்பலந்தீங்குழல்கேளாமோதோழீ. கொல்லையஞ்சாரற் குருந்தொசித்தமாயவன், எல்லிநம்மானுள் வருமேலவன் வாயில், முல்லையந்தீங்குழல் கேளாமோதோழீ,, இவையொருபொருண் மேன் மூன்றடுக்கிவந்த ஆசிரியத்தாழிசை, "வானுறநிமிர்ந்தனை வையக மளந்தனை, பான்மதிவிடுத்தனை பல்லுயிரோம்பினை, நீணிறவண்ண நின் னிணைகழறொழுதனம்,, இது தனியேவந்த ஆசிரியத்தாழிசை. நான்கடியா யெருத்தடிநைந்து மிடைமடக்காயு மிடையிடையே சுருக்கடியாயுந் துறையாம் - எ-து. "நான்கடியாய் ஈற்றயலடி குறைந்து வருவனவும், நான்கடியாயீற்றய லடிகுறைந்திடை மடக்காய் வருவனவும், நான்கடியா யிடையிடைகுறைந்து வருவனவும், நான்கடியாயிடையிடை குறைந்திடைமடக்காய் வருவனவும், ஆசிரியத்துறை. எ-று. நான்கடியா

யென்பதனை யெல்லாவற்றினோடுங் கூட்டி யிடைமடக்காயென்பதனை யொருகாலிருதலையுங் கூட்டி மத்திமதீபமாகப் பொருளுரைத்துக்கொள்க. சீர்வரையறுத்திலாமையால் எனைத்துச் சீரானும், அடியாய்வரப்பெறுமெனக்கொள்க. வ-று. "கரையொருகான்யாற்றங் கல்லதரொம்முளளி வருவிராயின், அரையிருள்யாமத்தடுபுலியேறஞ்சியகன்றுபோக, நரையுருமேறு நுங்கைவேலஞ்சு நும்மை, வரையரமங்கையர் வெளவுதலஞ்சுதும் வாரலையோ,, இது நான்கடியாய் ஈற்றயலடி குறைந்துவந்த ஆசிரியத்துறை. "வண்டுளர்பூந்தார் வளங்கெழுசெம்பூட் சேய்வடிவேபோலத், தண்டளிர்ப்பூம்பிண்டித் தழையேந்திமாவினவித்தணந்தோன்யாரோ, தண்டளிர்ப்பூம்பிண்டித் தழையேந்திவந்துநம், பண்டைப்பதிவினவிப் பாங்குபடமொழிந்து படர்ந்தோனன்றே,, இதுநான்கடியாய் ஈற்றயலடி குறைந் திடைமடக்காய்வந்த ஆசிரியத்துறை "கொன்றூர்ந்தமைந்த குருமுகத்தெழினிறங்குருதிக்கோட்டனவிருந்தாட்பெருங்கைக்குன்றுமென வன்றுமெனக் குமுறுகின்றன கொடுந்தொழில்வேழம், வென்றூர்ந்தமைந்த விளங்கொளி யிளம்பிறைத்தூளங்கு வாளெயிற் றழலுளைப் பருஉத்தா ளதிரும் வானெனவெதிருங்கூற்றெனச் சுழலாநின்றன சுழிக்கண்யாளி, சென்றூர்ந்தமைந்த சிறுநுதிவள்ளுகிர்ப்பொறியெருத் தெறுழ்வலிப் புலவுநாறழல்வாய்ப் புனலாமெனக் கனலாமெனப் புகையாநின்றன புலிமானேற்றை, என்றாங்கிவையிவை யியங்கலினெந்திறத்தினிவரல்வேண்டலர் தனிவரலெனத்தலை விலக்கலி னிறுவரை மிசையெறிகுறும்பிடை யிதுவென்னெனவது நோனார்கரவிர விடைகளவுளமது கற்றோரோதுங்கற்பன்றே,, இதுநான்கடியாய் முதலடியுமூன்றாமடியும பதினொன்கு சீராயல்லாத வடியிரண்டும் பதினாறுசீராயிடை யிடைகுறைந்துவந்த ஆசிரியத்துறை. "இரங்குயின்முழவா வின்னிசையாழ்தேனா, அரங்கமணிபொழிலா வாடும்போலுமிளவேனில், அரங்கமணிபொழிலா வாடுமாயின், மரங்கொன்மணந்தகன்றார் நெஞ்சமென்செய்ததிளவேனில்,, இதுநான்கடியா யிடையிடைகுறைந்திடை மடக்காய்வந்த ஆசிரியத்துறை. என்னை "கடையதனயலடி கடைதபுநடையவு, நடுவடிமடக்காய் நான்கடியாகி, யிடையிடை குறைநவு மகவற்றுறையே,, என்பதியாப்பருங்கலம். குறைவிறெல்சீ ரகவல் விருத்தங்கழிநெடி னான்கொத்திறுவது-எ-து கழிநெடிலடிநான்காய்த் தம்முளளவொத்துவருவன ஆசிரியவிருத்தம் எ-று. குறைவிறெல்சீரொன்று சிறப்பித்தலுதனால் எண்சீரின்மிக்க சீரான் வந்த அடியெல்லாஞ் சிறப்பிலவெனக்கொள்க. வ-று. "விடஞ்சூழரவினிடை நுடங்க மின்வாள்வீசிவிரையார்வேங், கடஞ்சூழ்நாடன்காளிங்

ன் கதிர்வேல்பாடுமோர்தங்கி, வடஞ்சேர்கொங்கை மலைதாந்தாம்வடிக்கண்ணீலமலர்தாந்தாம், தடந்தோ ளிரண்டும் வேய்தாந்தா மென்னுந்தன்மைத் தின்னுமையே. இஃதறுசீர்க்கழிநெடிலடியான்வந்த ஆசிரியவிருத்தம். கணிகொண்ட. எ-து. எழுசீர்க்கழிநெடிலடியான்வந்த ஆசிரியவிருத்தம்: மூவடிவினுல். எ-து. எண்சீர்க்கழிநெடிலடியான்வந்த ஆசிரியவிருத்தம். இடங்கைவெஞ்சிலை. எ-து. ஒன்பதின்சீர்க்கழிநெடிலடியான்வந்த ஆசிரியவிருத்தம். கொங்குதங்கு- எ-து. பதின்சீர்க்கழிநெடிலடியான்வந்த ஆசிரியவிருத்தம். என்னை. "கழிநெடிலடிநான் கொத்திறின்விருத்தமஃ, தழிபாமரபின தகவலாகும், என்பதியாப்பருங்கலம். மெல்லியலே. எ-து. மகடூஉமுன்னிலை,

மண்ணாறுகுஞ்சினில்வாணுறைத்தாழிசையாங்கணைபொருகான்
என்றதுமவண்டுளர்பூந்தாரிரங்குகுயின்மூழவாக்
னொன்றூர்ந்தமைந்தவகவற்றுறைகுறையாவிருத்தம்
பின்றூழகுழலிவிடங்கணிமூவடிவாதியவே,

இவ்வுரைச் சூத்திரக் காரிகையின்வழியே ஆசிரியப் பாவினங்கட்குக்காட்டிய இலக்கியங்களை முதனினைந்துக்கொள்க. (௯)

தரவொன்றுதாழிசைமூன்றுதனிச்சொற்சுரிதகமாய்
நிரலொன்றினேரிசையொத்தாழிசைக்கலிநீரத்திரைபோல்
மரபொன்றுநேரடிமுச்சீர்குறணடுவேமடுப்ப
தரவொன்றுமல்குலதம்போதரங்கவொத்தாழிசையே.

துள்ளலோசைத்தாய், நேரீற்றியற்சீரும், நிரைநடுவாகிய வஞ்சியுரிச்சீரும்வாராது, நிரைமுதலாகிய வெண்பா வுரிச்சீர்மிக்கு நேரடித்தாய்க் கலித்தளையும், அயற்றளையுந்தட்டுத் தரவுதாழிசையென்னு முதலுறுப்பும், அராகம, அம்போதரங்கம், தனிசசொல் சுரிதகமென்னுந் துணையுறுப்பு முடைத்தாய், ஒத்தாழிசைக்கலி, வெண்கலி, கொச்சகக்கலியென்னும் வேறுபாட்டாற்கிடந்த, கலிப்பாக்களை உறுப்பினுனும், ஓசையானும், பொருளானும், பெயர்வேறுபாடுணர்த்துவா னெடுத்துக்கொண்டார், அவற்றுள், இக்காரிகை, நேரிசையொத்தாழிசைக்கலிப்பாவும், அம்போதரங்கவொத்தாழிசைக் கலிப்பாவுமாமாறுணர்த்து- ற்று. தரவொன்று தாழிசைமூன்று தனிச்சொற்சுரிதகமாய் நிரலொன்றினேரிசையொத்தாழிசைக்கலி.எ-து. முன்னொருதரவுவந்து, அதன்பின்பு மூன்றுதாழிசைவந்து, அதன்பின்னொருதனிசசொல்வந்து, அதன்பின்னாசிரியத்தானுவது, வெண்பாவானுவது, ஒருசுரிதக வுறுப்புப்பெற்றுவருவது நேரி

சையொத்தாழிசைக்கலிப்பா-எ-று. தரவெனினும், எருத்தமெனினுமொ க்கும். தாழிசை யெனினும், இடைநிலைப்பாட்டெனினுமொக்கும். தனிச் சொலெனினும், விட்டிசையெனினும், கூனெனினும், தனிநிலை யெனினு மொக்கும். சுரிதகமெனினும், அடக்கியலெனினும், வாரமெனினும், போக்கெனினும் போக்கிய லெனினு மொக்கும். என்னை, "தரீது முன்னிற் றலிற் றரவேதாழிசை, யொத்தாழ்ந்திறினஃ தொத்தாழிசையே, தனி நிற்றலிற் றனிச்சொற்குனிநிறை, நீர்ச்சுழிபோலநின்று சுரிந்திறுதலிற், சோர்ச்சியில்புலவர் சுரிதகமென்ப,, என்று காரணக்குறிசொனனுரு மு ளரெனக்கொள்க. இனித்தரவுதாழிசைகட் கடிவரையறையாமாறு சுருங் கிற்று மூன்றடியென்னுங் காரிகையுட்போக்கிச் சொல்லுதும்.வ-று. "வா ணெடுங்கண்பனிகூரவண்ணம் வேறாய்த்திரிந்து, தோணெடுந்தகைதுற ந்து துன்பங்கூர் பசப்பினவாய்ப், பூணெடுங்குழலை கண்டுமபொருட் பிரிதல் வலிப்பவோ. இதுதரவு-சூருடையகடுங்கடங்கள் சொலற்கரிய வென்பவாற், பீருடையநலந்தொலையப் பிரிவாரோபெரியவரோ.—சேணு டைய கடுங்கடங்கள் செலற்கரியவென்பவால், காணுடையநலந்தொலைய நடப்பாரோ நலமிலரோ—சிலர்படைந்தவெங்கானஞ் சீரிலவேயென்ப வாற், புலம்படைந்த நலந்தொலையப்போவாரோ பொருளிலரே. இவை மூன்றுந்தாழிசை. எனவாங்கு, தனிச்சொல். அருளொன்றுமிலராய்ப் பொ ருள்வயிற்பிரிவோர், - பன்னெடுங்காலமும்வாழியர், பொன்னெடுந்தே ரொடுந் தானையிற்பொலிந்தே,, இதுசுரிதகம். தரவுமூன்றடியாய்த் தாழி சைமூன்றுமிரண்டிரண்டடியாய்த்தனிச்சொற்பெற்று மூன்றடியாசிரியச் சுரிதகத்தாலிற்ற நேரிசை யொத்தாழிசைக் கலிப்பா. வெள்ளைச்சுரிதகத் தாலிற்றனயாப்பருங்கல விருத்தியுட்கண்டுகொள்க என்னை "தரவுதாழி சை தனிசசொற்சுரிதக மெனுநான்குறுப்பின தொத்தாழிசைக்கலி,, எ ன்றாராகலின். "தரவொன்றாகித் தாழிசைமூன்றாய்த், தனிசசொலிடை கிடந்து சுரிதகந்தழுவ, வைத்தமரபின தொத்தாழிசைக்கலி,, என்றா மயேச்சுரர்கீர்த்திரைபோன். மரபொன்றுநேரடி முச்சீர்குறணடு வேமடு ப்பதது அம்போதரங்கவொத்தாழிசை. எ-து. கரைசாரககரைசார வொ ருகாலைக்கொருகாற் சுருங்கிவருகின்ற நீர்த்தரங்கம்போல நாற்சீரடியும், முச்சீரடியும், இருசீரடியுமாகிய அசையடிகளைத்தாழிசைக்குந் தனிச் சொற்கு நடுவே தொடுத்துத் தரவுதாழிசை அம்போதரங்கம் தனிச் சொல் சுரிதகமென்னும் ஐந்துறுப்புடைத்தாய்வருவது அம்போதரங்க ஒத்தாழிசைக்கலிப்பா. எ-று. அரவொன்றுமல்குல் - எ-து. மகரீஉமுன் னிலை. மரபொரனறு நேரடியென்று சிறப்பித்ததீவதனல், அசையடிதான்

ஈரடியாலிரண்டுமே, ஓரடியானான்கும், மூச்சீராலெட்டும், இருசீராற்பதி னாறாய்வருவது சிறப்புடைத்து, எட்டும் பதினாறுமென்று சொல்லப் பட்டன, நான்குமெட்டுமாகச் சுருங்கி வரப்பெறுமாயினுமெனக்கொள்க. என்னே. "ஈரடியிரண்டு மோரடிநான்கு, மூச்சீரெட்டு மிருசீரிரட்டியு, மச்சீர்குறைபினு மம்போதரங்கம்,, என்றாராகலின். அம்போதரங்கமெ னினும், அசையடியெனினும், பிரிந்திசைக்குறளெனினும், சொற்சீரடி யெனினும், எண்ணெனினுமொக்கும் என்னே. "அனையவாகியவசையடி நான்குந், தனியொடுதாழிசை யிடைவருமென்ப,, அவற்றைப்பேரெண், அளவெண், இடையெண், சிற்றெண்ணென்றுபெயரிட்டு வழங்குவாரு முளர். வ-று. "கெடலருமாமுனிவர் கிளர்ந்துடன்றொழுதேத்தக், கடல் கெழுகனைசுடரிற் கலந்தொளிரும் வாலுளைய, அழலவிர்சுழல்செங்கணரி மாவாய்மலைந்தானைத, தாரொடுமுடிபிதிரத் தமனியப்பொடிபொங்க,வா ர்புனலிழிகுருதி யகலிட முடனனைப்பக், கூருகிரான்மாறுபிடந்த கொலை மலிதடக்கையோய்-இது தரவு. முரசதிர்வியன்மதுரை முழுவதூஉந் த லைபனிப்பப், புனைதொடித்திரடிண்டோட்போர்மலைந்த மறமல்லர், அடி யொடுமுடியிறுபபுண் டயர்ந்தவர்நிலஞ்சேரப், பொடியெழவெங்களத்து ட்புடைத்தது நின்புகழாமோ. கலியொலிவியனுலகங் கலந்துடனனிநடுங் க, வலியியலவிராழி மாறெதிர்ந்தமருட்சோர்வு, மாறுதாருடம்போடு ம றம்பிதிரவெதிர்கலங்கிச, சேணுயரிருவிசும்பிற் செகுத்ததுநின்சினமா மோ, படுமணியினநிரைகள் பரந்துடனிரிந்தோடச், கடுமுரணெதிர்மலை ந்த காரொலியெழிலேறு, வேரிளெஞ்மருப்பொசிய வீழ்ந்துதிறமவேறா க, ஏறுமலிபெருந்தொழுவி னிறுத்ததுநின்னிகலாமோ. இவைமூன்றுந் தாழிசை—இலங்கொளிமரகத மெழினுமிகுவியன்கடல், வலம்புரித்தடக் கையின் மாஅனினனிறம். விரியிணர்க்கோங்கமும் வெந்தெரிபசும்பொ னும், பொருகளிறட்டோய் புனையுநின்னுடை. இவைநாற்சீரடியிரண்டம் போதரங்கம். இவைபேரெண். "கண்கவாகதிர்முடி கனலுஞ் சென்னியை, நண்சுடருறுபகை தவிர்த்தவாழியை. ஒலியியலுவண மோங்கியகொடி யினை, வலிமிகுசகட மாற்றியவடியினை. இவையோரடிநான் கம்போதரங் கம். இவை அளவெண், போரவுணர்கடந்தோய்நீஇ, புணர்மருதமபிளா ந்தோய்நீஇ, நீரகலமளந்தோய்நீஇ, நிழறிகழ்ழம்படையோய்நீஇ, இவை முச்சீரடிநான்கம்போதரங்கம. இவை யிடையெண். ஊழிநீஇ உலகுநீஇ உருவுநீஇ, அருவுநீஇ, ஆழிநீஇ, அருளுநீஇ, அறமுநீஇ, மறமுநீஇ. இ வை யிருசீரோரடி எட்டம்போதரங்கம். இவை சிற்றெண்- எனவாங்கு,

தனிச்சொல். அவ்விறலொருவனிற் பரவுதுமெங்கோன், தொடிகழற்கொ டும்பூட்கட்டெழின்மார்பிற், கயலொடுகலந்த சிலையுடைக்கொடிவரிப் புலியுறழ்தடக்கைப்போர்வேலசுதன், தொன்றுமுதிர்கட லுலகமுழுது டன், ஒன்றுபுரிதிகிரி யுருட்டுவோனெனவே,, இது சுரிதகம், இஃதெட்டு ம்பதினாறுமென்று சொல்லப்பட்ட முச்சீரடியுட், இருசீரடியும், நானகு மொட்டுமெய்வந்த அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா. "நலங்கிளர்திரு மணியு நன்பொன்னுங் குயின்றழகார், இலங்கெயிற்றழலரி மானெருத்த ஞ்சேரணையின்மேல், இருபுடையுமியக்கரச ரிணைக்கவரியெடுத்தசைப்ப, விரிதாமத் துயல்வருஉம் வெண்குடை மூன்றுடனிழற்ற, வண்டாரற்ற நாற்காதம் வகைமாணவுயர்ந்தோங்கும், தண்டளிர்ப்பூம்பிண்டிக் கீழ்க் கைபெறவீற்றிருந்தனையே,, என்னும் அம்போதரங்க வொத்தாழிசைக் கலிப்பாவினுளெட்டும் பதினாறுமென்று சொல்லப்பட்ட அம்போதரங் கங் குறையாதேவந்தவாறு யாப்பருங்கலவிருத்தியுட் கண்டுகொள்க. எ ன்னை. "நீர்த்திரைபோல நிரலேமுறைமுறை, யாக்கஞ்சுருங்கி யசையடி தாழிசை, விட்டிசைவிரியத் தொடுத்துச்சுரிதகந், தாங்கித்தொடுத்த தர வினோடெனவும், யாப்புற்றமைந்த வம்போதரங்கம்,, என்றார் காக்கை பாடினியார்.

வாணெடுங்கண்பனிநேரிசையாகுமதர்த்திருண்டு
சேணுறவோடிக்குழையிடறிச்செருச்செய்யும்விழி
நாணுந்திருவுமறிவுஞ்செறிவுமுடையநல்லாய்
ஏனுங்கெடலருமாமுனியம்போதரங்கமென்னே,

இவ்வுரைச்சூத்திரக் காரிகையின்வழியே நேரிசையொத்தாழிசைக் கலிப்பாவிற்கும், அம்போதரங்க வொத்தாழிசைக்கலிப்பாவிற்குங்காட்டி ய இலக்கியங்களை முதனினைத்துக்கொள்க. (௰)

அசையடிமுன்னராகம்வந்தெல்லாவுறுப்புமுண்டேல்
வசையறுவண்ணகவொத்தாழிசைக்கலிவான்றனைதட்
டிசைதனதாகியும்வெண்பாவியையினும்பின்பான்மொழியாய்
விசையறுசிந்தடியாசிறுமாய்விடின்வெண்கலியே.

இ-ளை. வண்ணக வொத்தாழிசைக்கலிப்பாவும், வெண்கலிப்பாவு ணாமாறுணர்த்துற்று. அசையடிமுன்னராகம்வந் தெல்லாவுறுப்புமுண் டேல் வசையறுவண்ணகவொத்தாழிசைக்கலி. எ-து. அம்போதரங்கவு றுப்பிற்குந் தாழிசைக்குநடுவே அராகவுறுப்புப்பெற்றுத்தரவு, தாழிசை, அராகம், அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகமென்னு மாறுறுப்பினை

மூன்றடித்தாய் வருமெனின்று வண்ணகவொத்தாழிசைக் கலிப்பாவெனப்படும். எ-று. அராகமெனினும், வண்ணகமெனினும், முடுகியலெனினும், அடுக்கியலெனினுமொக்கும், வசையறுவண்ணகமென்று சிறப்பித்ததனால், அராகவுறுப்புத்தானளவடி முதலாகிய எல்லாவடியானும் வரப்பெறுமெனக்கொள்க. அடிவரையறையாவது சிறுமைநான்கடி பெருமையெட்டடி இடை ஐந்தடியானும், அறடியானும், ஏழடியானும், வரப்பெறுமெனக்கொள்க. என்னை 'அளவடிமுதலா வனைத்தினானான்கடி, முதலாயிரட்டிய முடுகியனடக்கும்.' என்றாராகலின். வ-று. விளங்குமணிப் பசும்பொன்னின் விசித்தமைத்துக்கதிர்கான்று, துளங்குமணிக்கனைகழற் காற்றுறு மலர்நறும்பைந்தார்ப், பரூஉத்தடக்கைமதயானைப் பணையெருத்ததின் மிசைத்தோன்றும், குரூஉக்கொண்டமணிப்பூணோய் குறையிரந்து முன்னாட்கண், மாயாதவனப்பினையாய் மகிழ்வார்க்குமெல்லார்க்கும், தாயாகித் தலையளிக்குந் தண்டுறையூரகேள். இது தரவு. காட்சியாற்கலப்பெய்தி யெத்திறத்துங்கதிர்ப்பாகி, மாட்சியார்க்கறியாத மரபொத்தாய்ரவினாற், பிணிநலமெபரிதெய்திப் பெருந்தடந்தோள்வனப்பழிய, அணிநலந் தனியேவந் தருளுவதுமருளாமோ. அன்பினலமிழ்தனை இயறிவினுற்பிறிதின்றிப், பொன்புனைபூணகம் பசப்பெய்தப்பொழிவிடத்துப், பெருவரைத்தோளருளுதற்கிருளிடைத்தமியையாய்க், கருவரைத்தோள்கதிரபிக்குங் காதலுங்காதலோ, பாவகனைப்பேவாயிலாப் பல்காலும்வந்தொழுகு, தேங்காதகரவினையுந் தெளியாதவிருளிடைக்கட், குடவரைவேய்த்தோளிணைகள்குளிர்ப்பிப்பான்றமியையாய்த், தடமலர்த்தாரருளுகின்றகுதியு தகுதியோ. இவைமூன்றுந்தாழிசை. தாதுறுமுறிசெறி தடமலரிடையிடை தழலென விரிவனபொழில், போதுறுகுறுவினர் புதுமலர்தெரிதரு கருநெய்தல் விரிவனகழி, தீதுறுதிறமறுகெனநனிமுனிவன துணையொடுபிணைவனதுறை, மூதுறுமொலிகலி நுரைதருதிரையொடு கடிதொடர் புடையதுகடல். இவைநான்கும் அராகம். கொடுந்திறலுடையன சுறவேறுகோட்படதனால், இடுங்கழியிராவருதல் வேண்டாவென்றிசைத்திலமோ, கருநிறத்துறுதொழிற் கராம்பெரிதுடைமையால், இருணிறத்தொருகானி விராவாரலென்றிலமோ இவைநாற்சீரடியிரண் டம்போதரங்கம், காணுடிகழிந்தன்றாற் பெண்ணரசி நலத்தகையே, அஞ்சலுமொழிந்தன்றாற் றொடித்தோளி தடங்கண்ணே, அறத்தொடுசெழித்தன்றா லருளுடையா பிழைக்கே, நயப்பொடுகழிந்தன்றா னனவது நன்னுதற்கே. இவைநாற்சீரோரடி நான்கம்போதரங்கம். அத்திறத்தாலசைந்தனதோள். அலர்தற்கு

மெலிந்தனகண். பொய்த்துரையாற் புலர்ந்தனமுகம். பொன்னிறத்தாற்
போர்த்தனமுலை. அழலினலைசைந்தனகை. அணியினலொசிந்ததிரட்
குழலினனிபிர்ந்தனமுடி. குறையினற்கோடிற்றுங்கிறை. இவைமுச்சீரோ
ரடி யெட்டம்போதரங்கம். உட்கொண்டசகைத்தொருபால் உலகறி
வலத்தொருபால். கட்கொண்டறுளித்தொருபால். கழிவெய்தும்படித்தொ
ருபால். பரிவுறூஉந்தகைத்தொருபால். படிவுறூஉம்பசப்பொருபால். இ
ரவுறூஉந்துயரொருபால், இளிவந்தவெளிற்றொருபால். மெலிவுறூஉந்த
கையொருபால். விளர்ப்புவந்தடைந்தொருபால். பொலிவுசென்றகன்றொ
ருபால். பொறைவந்துகூர்ந்தொருபால். காதலிற்கதிர்பபொருபால். கட்ட
டாத்துயரொருபால், ஏதில்சென்றணைந்தொருபால். இயனணிற்செறிவொ
ருபால். இவை யிருசீரோரடிப் பதினாறம்போதரங்கம், எனவாங்கு. தனிச்
சொல். இன்னதிவ்வழக்க மித்திறமிவ ளை, மென்னவுமுன்னாட் டின்று
யாகிற், கலந்தவணிலைமை யாயினுலந்தகக், கிளையொடுகெழீஇய தளை
விழ்கோதையைக், கற்பொடுகாணியயாமே, பொற்பொடுபொலிகநும் ம
ணர்சசிதானே,, இது சுரிதகம். ஆறுறுப்புங் குறைவின்றிவந்த வண்ணக
வொத்தாழிசைக்கலிப்பா. என்னை. "அச்சொலப்பட்ட வுறுப்போடராகவ
டி, வைத்தநடையது வண்ணகமாகும்,, என்றார் காக்கைபாடினியார். வா
ன்றளை தட் டிசைதன தாகிபும் வெண்பாவியைந்தும், விசையறுசிந்தடியா
லிறு மாய்விடின்வெண்கலியே-எ-து. கலித்தளை தட்டுக்கலியோசை தழு
விபும், வெண்டளைதட்டு வெள்ளோசைதழுவியும்வந்து ஈற்றடிமுச்சீரா
னிறுமெனினது வெண்கலிப்பாவென்றார், கலிவெண்பாவென்றும வழங்
கப்படும். எ-று. இன்பான்மொழியாய். எ-து. மகடூஉமுன்னிலை. விசைய
றுசிந்தடியென்று சிறப்பித்தவதனால், வேற்றுத்தளைதட் டுருகிவரவும்பெ
றும். வ - று. வாளார்ந்தமழைத்தடங்கண் வனமுலைமேல்வம்பனுங்கக்
கோளார்ந்தபூணுகவ குழைபுரளக்கோட்டெருத்தின், மாலைதாழ்கூந்தல
ர் வரன்முறையான்வந்தேத்தச், சோலைதாழ்பிண்டிக்கீழ்ச் சூழ்ந்தவர்தஞ்
சொன்முறையான், மனையறமூந் துறவறமு மண்ணவர்க்கும் விண்ணவ
ர்க்கும், வினையறுக்கும் வகைதெரிந்து வீடொடு கட்டிவையுரைத்த, தொ
ன்மைசால் கழிகுணத்தெந் துறவரசைத்தொழுதேத்த, நன்மைசால் வீ
டெய்துமாறு,, இதுதன்றளையானும், துள்ளலோசையானும், வந்தமையா
ன் வெண்கலிப்பா - "சுடர்த்தொடீஇகேளாய் தெருவில்யாமாடு, மணற்
சிற்றிற்காலிற் சிதையாவடர்ச்சியபொற், கோதைபரிந்துவரிப் பந்துகொ
ண்டோடி, நோதக்கசெய்யுஞ் சிறுபட்டியேலோர்நாள், அன்னையும்யானு

நந்தேமாவில்லுளே, உண்ணுநீர்வேட்டே னெனவந்தாற்கன்னே, அடர்ற்சிரகத்தால் வாக்கிசசுடரிழாய், உண்ணுநீரூட்டிவாவென்று னெயினுர், தன்னேயறியாது சென்றேன்மற்றென்னே, வளைமுன்கைபற்றியத்தெருமந்திட், டன்னுயிவனெருவன் செய்ததுகாணென்றேனு, அசையலறிப்படர்தரத்தன்னேயான், உண்ணுநீர்விக்கினுனென்றேனுவன்னும், தன்னேப்புறம்பழித்து நீவமற்றென்னேக், கடைக்கண்ணுற்கொல்வான்போ னேக்கிநகைக்கூட்டஞ், செயதானகள்வன்மகன்,, இது வெட்டளைதட்டு வெள்ளோசைதழுவி யொருபொருண்மேல் வந்தமையாற்பிவெண்பா. என்னே. "ஒருபொருணுதலிய வெள்ளடியியலாற், றிரிபிறிமுடிவது கலிவெண்பாட்டே,, என்றூா, தொல்காப்பியனுர. "வெண்ளை தனைதளே யென்றிருதன்மையின், வெண்பாவியலது வெண்கலியாகு,, என்றூா காககைபாடினியார். இனிப்பிறதளே யான்வருமாறு. "ஊர்மர்நறுங்கோதை யெருத்தலைப்ப விறைஞ்சித்தன், வார்மலர்த்தடங்கண்ணுறா வலைப்பட்டுவருந்தியவென, தார்வனாயகன்மார்பன் றனிமையை யறியுங்கொல், சீரமலிகொடியிடைசிறந்து,, இது ஆசிரியத்தளையானுந், தன்றளையானும்வந்த வெண்கலிபபா. பிறவும்யாபபருங்கல விருத்தியுட்கண்டுகொளக.

நின்றுவிளங்குமணிப்பசும்பொன்னிறமாறுறுப்பும்
ஒன்றியவண்ணகவொத்தாழிசைக்கலியோசைகுன்றாத்
துன்றியவொளார்மழையுஞ்சுடாத்தொடஇயோர்மலரும்
என்றிவைவெண்கலிப்பாவிற்கிலககியமேந்திழையே.

இவ்வுரைச சூத்திரக்காரிகையின்வழியே அமபோதரங்கவொத்தாழிசைக்கலிப்பாவிற்கும், வண்ணகவொத்தாழிசைக் கலிபபாவிற்கும், வெணகலி பாவிற்குங்காட்டிய இலக்கியங்களை முதனினைத்துகொள்க. மக

தரவேதரவிணைதாழிசைதாமுஞ்சிலபலவாய்
மரபேயின்றுமயங்கியும்வநதனவாங்கமைத்தோள்
அரவேரகலல்குலமபேர்நெடுங்கண்வமபேறுகொங்கைக்
குரவேரமழகுழலாய்கொண்டவான்பெயாகொசசகமே.

இ-ன். தரவுகொச்சகக் கலிப்பாவும், தரவிணைக் கொசசகக்கலிப்பாவும், சிஃறாழிசைக் கொச்சகக்கலிப்பாவும், பஃறாழிசைக்கொச்சகக்கலிபபாவும், மயங்கிசைக் கொச்சகக்கலிப்பாவு மாமாறுணர்த்து-ற்று. தரவதரவிணைதாழிசை தாமுஞ்சிலபலவாய் மரபேயின்று மயங்கியும்வந்தன் எ-து- ஒருதரவுவந்தும், இரண்டுதரவுவந்தும், தாழிசைசிலவந்து

ம், தாழிசைபலவந்தும், தரவு, தாழிசை, அராகம், அம்போ... கம். தனிச்சொல், சுரிதகமென்னுமாறுறுப்பும், தம்முண்மயங்கியும், வெண்பாவினோடும். ஆசிரியத்தினோடுமயங்கியும், வருவனவெல்லாங் கொச்சகக்கலிப்பாவென்று பெயரிட்டுவழங்கப்படும். எ-று. சொல்லின்முடிவிற்றப் பொருண்முடித்தல். எ-து. தந்திரவுத்தியாகலின் தரவுகொச்சகமுதலாயின அப்பெயரானே வழங்கப்படுமெனக்கொள்க. ஒரு தரவு வந்தால் தரவுகொச்சகக்கலிப்பாவென்றும், தரவிரண்டாய்வந்தால் தரவிணைக்கொச்சகக்கலிப்பாவென்றும், சிலதாழிசைவந்தால் சிஃறாழிசைக்கொச்சகக்கலிப்பாவென்றும், பலதாழிசைவந்தால் பஃறாழிசைக் கொச்சகக்கலிப்பாவென்றும், தம்முண்மயங்கியும், பிறவற்றினோடுமயங்கியும், வருவனவெல்லா மயங்கிசைக்கொச்சகக்கலிப்பாவென்றும், வழங்கப்படும், தாமுமென்று மிகுத்துச்சொல்லியவதனால் தனிச்சொல்லும், சுரிதகமும், இடையிடை வரப்பெறுமெனக்கொள்க. மரபேயியன்றுமென்று சிறப்பித்தவதனால், வரலாற்றுமுறைமையோடுங்கூட்டிக் கலியுறுப்பில் மிக்கும், குறைந்தும, பிறழ்ந்தும, உறழ்ந்தும், மயங்கியும், கலிபுள்வாராவென்ற நேரீற்றியற்சீரும், ... ந்டுவாகிய வஞ்சியுரிச்சீரும், ஐஞ்சீரடியும், வந்தொத்தாழிசைக் கலிப்பாக்களோடொவ்வாது வருவனவெல்லாம் மயங்கிசைக்கொச்சகக்கலிப்பாவென்று வழங்கப்படும். எ-று. வாங்கமைத்தோளகுழலாய் - எ-து. மகடூஉமுன்னிலை. கொண்டவாவ்பெயர் கொச்சகமே- எ-து. இறுதிவிளக்கெனக்கொள்க. வ-று. "செல்வப்போா- ஒளித்ததே,, எ-து. சுரிதகமில்லாத தரவு கொச்சகக்கலிப்பா. "குடநிலை- சென்றவாறே,, இது தனிச்சொல்லுஞ் சுரிதகமும், பெற்றுவந்ததரவு கொச்சகக்கலிப்பா. "வடிவுடைநெடுமுடி வானவர்க்குமவெலற்கரிய, கடிபடுநறும் பைந்தார்க்காவலர்க்குங்காவலனும், கொடிபடுமணிமாடக் கூடலார்கோமானே இது தரவு-எனவாங்கு, தனிச்சொல், துணைவன்...தரோ னிவண் மெலியத் தொன்னலந் தொடர்ப்புண்டாங், கிணைமலர்த்தாரருளுமே லிதுவிதற்கோர்மாறென்று, துணைமலர்த்தடங்கண்ணார் துணையாகக்கருதாரே. இதுதரவு-அதனால். தனிச்சொல். செவ்வாய்ப்பேதையிவடிறந்தே வ்வாறுங்கொலிஃ தெண்ணியவாறே,, இது இடையிடைத தனிச்சொற் பெற்று ஆசிரியச்சுரிதகத்தாலிற்ற தரவிணைக்கொச்சகக்கலிப்பா. சுரிதகமில்லாதது வந்தவழிக்கண்டுகொள்க. "பருவுத்தடக்கைமதயானைப் பணையெருத்தின்மிசைத்தோன்றிக், குருஉக்கொண்ட வெண்குடைக்கீழ்க்குடைமன்னர் புடைசூழப், படைப்பரிமான் றேரினொடும் பரந்துலவுமறுகினிடைக், கொடித்தானையிடைப்பொலிந்தான் கூடலார்கோமானே. இது. தரவு. ஆங்கொருசார், உச்சியார்க்கிறைவனாயுலகமெலாங் காத்தளிக்கும்,

வெகுளிபோல் வேலாழியிறக்கலா, தெழுமுந்நீர்பரந்தொழுகு மேமஞ்
சார் துறைவகேள். இவை இரண்டுந்தரவு கொடிபுரையுநுசுப்பிற்
குழைக்கமழ்ந்ததிருமுகத்தோள், தொடிநெகிழ்ந்ததோள்கண்டுந் துறவ
லனேயென்றியால். கண்கவருமணிப் பைம்பூட்கயில்கவைய சிறுபூந்
தோள், தெண்பனிநீருகக்கண்டுந் தெரியலனே யென்றியால். நீர்பூத்த
நிரையிதழ்க்க ணின்றுசிந்தபுருவத்தோள், பீர்பூத்தநுதல்கண்டும் பிரி
யலனேயென்றியால். களைவரலாற்றிரு கனைபோற்கைநில்லா துன்னெ
கிழ்ந்து, நினையுமென்னிலைகண்டு நீங்கலனேயென்றியால். வீழ்சுடரினெய
யேபோல் விழுமநோய்பொறுக்கலாத், தாழுமென்னிலைகண்டுந் தாங்கல
னேயென்றியால். கலங்கவிழ்ந்த நாய்கன்போற் களைதுணைபிறிதின்றிப், பு
லம்புமென் னிலைகண்டும் போகலனேயென்றியால். இவையாறுந்தாழி
சை. அதனால், தனிச்சொல், அடும்பயிலிறும்பி னெடும்பணை மிசைதொ
றும், கொடும்புற மடலிடை யொடுங்கினகுருகு. செறிதருசெருவிடை யெ
றிதொழிலிளையவா, நெறிதருபுரவி யின்மறிதருந்திமில். அரசுடைநிரைப
டை விரைசெறிமுரசென, நுரைவருதிரையொடு கரைபொருகடல். அல
ங்கொளியவிர்சுட ரிலங்கொளிமலாதொறுங், கலந்தெறிகாலொடு புலம்
பினபொழில். இவைநான்குமராகம். விடாஅதுகழலுமென் வெள்வளையு
ந்தவிர்ப்பாய்மன், கெடாஅதுபெருகுமென் கேண்மையுநிறுப்பாயோ, ஒல்
லாதுகழலுமென் னொளிவளையுஞ்செறிப்பாய்மன், நில்லாதுபெருகுமெ
ன் னெஞ்சமு நிறுப்பாயோ. தாங்காதுகழலுமென் றகைவளையுந்தவிர்ப்
பாய்மன், நீங்காதுபெருகுமென் னெஞ்சமுநிறுப்பாயோ. மறவாதவன்பி
னோன் மனனிற்குமாறுரையாய், துறவாத தமருடையேன் றுயர்தீருமா
றுரையாய். காதலாரமார்பின்றிக் காமக்குமருந்துரையாய். ஏதிலார்தலை
சாய யானுய்யுமாறுரையாய். இணைபிரிந்தாரமார்பின்றி யின்பக்குமருந்து
ரையாய். துணைபிரிந்த தமருடையேன் றுயர்தீருமாறுரையாய். இவையா
றுந்தாழிசை. எனவாங்கு, தனிச்சொல. பகைபோன்றது துறை. பரிவா
யினகுறி. நகையிழந்ததுமுகம். நனிநாணிற்றுளம். தகையிழந்தனதோள்.
தலைசிறந்தது துயர். புகைபரந்ததுமெய். பொறையாயிற்றென்னுயிர். இ
வையிருசீரோரடி யெட்டம்போதரங்கம். அதனால், தனிச்சொல் இனைய
து நினையால் அனையதுபொழுதால், நினையல்வாழி தோழிதொலையாப், ப
னியொடுகழிகவுண்கண், என்னொடுகழிகவித் துன்னியநோயே, இதுசுரி
தகம். இது தரவிரண்டும், தாழிசையாறும், தனிச்சொல்லும், அராகம்
நான்கும், பெயர்த்தும ஆறுதாழிசையும, தனிச்சொல்லும், இருசீரோரடி
யெட்டம்போதரங்க வுறுப்பும்பெற்று நான்கடி ஆசிரியச்சுரிதகத்தானிற்
றுக் கலிப்போதப்பட்ட ஆறுறுப்பும், மிக்கும், குறைந்தும், பிறழ்ந்தும்,

உறழ்ந்தும. மயங்கியும், வந்தமையான் மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா, வெண்பாவினேடும், ஆசிரியத்திேைடும்வந்த மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா யாப்பருங்கலவிருத்தியுள் காமர்கடும்புனலென்னும் பழம்பாட்டிற் கண்டுகொள்க. இன்னுமரபே யியன்றுமென்று சிறப்பித்தவதனல், ஒரு போகுமுதலா வுடையனவற்றையெல்லாமிதனற் பெயர்கொடுத்துக்கொச்சகமென்று வழங்கப்படுமெனக்கொள்க. என்னை. "எருத்தியலின்றி யிடைநிலைபெற்று, மிடைநிலையின்றி யெருத்துடைத்தாயு, மெருத்தமிரட்டித் திடைநிலைபெற்று, மிடையதிரட்டித் தெருத்துடைத்தாயு, மிடையு மெருத்து மிரட்டுறவந்து, மெருத்தமிரட்டித் திடைநிலையாறு, யடக்கியல்காறு மனமர்தவுறுப்பிற், கிடக்கை முறைமையிற் கிழமையதாயுந், தரவொடுதாழிசை யமபோதரங்க, முடுகியல்போகிய வென்றிவையெல்லா, முறைதடுமாற மொழிந்தவையின்றி, யிடையிடைவெண்பா சிலபலசேர்ந்து, மற்றும் பிறபிறவொப்புறுப்பில்லன, கொச்சகமென்னுங் குறிப்பின வாகும்,, என்றூர் காக்கைபாடினியார். "தரவேதரவிணை தாழிசைசிலபல, வரன்முறைபிறழ வயற்பாமயங்கியுர், தனிசசொற்பலவா யிடையிடை நடந்து, மொத்தாழிசைககலி யுறுப்பினிற்பிறழ, வைத்தமுறையான் வண்ணகவிறுவாய், மயங்கிவந்தனவு மியங்குநெறிமுறைமையிற், கொச்சகக் கலியெனக் கூறினர்புலவர்,, "ஒதப்பட்ட வுறுப்புவகையெல்லா, மேதட்பாடமற் கலிக்கியல்பெய்தி, மிக்குங்குறைந்தும் பிறழ்துமுறழ்ந்தும், வண்ணமுமடியுந் தொடையுமபங்கியு, மடுக்கியலந்த தொடுத்தனபல்கியுங், கலிவயிற்கடிந்த சீரிடைமிடைந்தூ, நாற்சீரிறந்த சீரொடுசிவணியு, மூச்சீரிருசீ ரம்போதரங்க, மச்சீர்முடிவிடை யழிவிலதழுவியுங், கொச்சகக்கலி யெனக் கூறவும்படுமே,, கூறியவுறுப்பிற் குறைபாடின்றித், தேறியவிரண்டிற் தேவபாணியுர், தரவேயொழியினுந் தாழிசையொழியினு, மிருவகைமுத்திறத் தெண்ணேநீங்கினு, மொருபோகென்ப வுணர்ந்திசினோ ரோ,, என்றூராகலின் "தரவின்றாகித் தாழிசைபெற்றுர், தாழிசையின்றித் தரவுடைத்தாகியு, மெண்ணிடையிட்டுச சின்னங்குன்றியு, மடக்கியலின்றி யடிநிமிர்ந்தொழுகியும், யாப்பினும்பொருளினும் வேற்றுமையுடையது, கொசசகவொருபோ காகுமென்ப,, என்றூர் தொல்காப்பியனுர். இதற்கு இலக்கியம் யாபபருங்கலவிருததியுட் கண்டுகொள்க.

குடநிலைத்தண்செல்வப்போர்க்கதக்கண்ணன்றரவுகுன்றூ
வடிவுடையாகுந்தரவிணைமன்னும்பரூஉத்தடக்கை
இடமிகவாஞ்சிஃறூழிசைதண்மதியேர்டலவாய்

இவ்வுரைச் சூத்திரக்காரிகையின்வழியே கொச்சகக்கலிப்பாக்கட்குக்காட்டிய இலக்கியங்களை முதனினைத்துக்கொள்க, (ருஉ.)

அடிவரையின்றியளவொத்துமந்தடிநீண்டிசைப்பிற்
கடிதலில்லாக்கலித்தாழிசையாகுங்கலித்துறையே
நெடிலடிநான்காய்நிகழ்வதுநேரடியீரிரண்டாய்
விடினதுவாகும்விருத்தந்திருத்தகுமெல்லியலே.

இ-கை. கலித்தாழிசையும், கலித்துறையும், கலிவிருத்தமுமா மாறு ணர்த்து-ற்று. அடிவரையின்றி யளவொததுமந்தடிநீண்டிசைபபிற் கடிதலில்லாக் கலித்தாழிசையாகும். எ-து. இரண்டடியும், பலவடியும்வந்து ஈற்றடிமிக்கு, அல்லாதவடி தம்முளொக்தும், ஒவ்வாதும்வருவது கலித்தாழிசை. எ-று. கடிதலில்லாக் கலித்தாழிசையென்று சிறப்பித்தவதனால், ஒருபொருண்மேன் மூன்றடுக்கிவருவது சிறப்புடைத்து. தனியே வரப்பெறுமாயினுமெனக்கொள்க. வ-று. "கொய்தினைகாததுங் குளவியடுக்கத்தெம், பொய்தற்சிறுகுடி வாரனீயை யாலம்வேண்டின். ஆய்தினைகாந்து மருவியடுக்கத்தெம் மாசில்சிறுகுடி வாரனீயைய நலம்வேண்டின். மென்றினைகாத்து மிகுபூங்கமழ்சோலைக், குன்றச்சிறுகுடில் வாரனீயைய நலம்வேண்டின்,, இவையிரண்டடியாய் ஈற்றடிமிக்கு ஒருபொருண்மேல் மூன்றடுக்கி வந்தமையால் கலிததாழிசை. "வாள்வரிவேங்கை வழங்குஞ் சிறுநெறியெங், கேள்வரும்போதி னெழால்வாழிவெண்டிங்காள் கேள்வரும்போதி னெழாலாய்க்குறுமியரோ, நீள்வரிநாகத் தெயிறேவாழிவெண்டிங்காள்,, இஃது ஈற்றடிமிக்கு ஏனையடிமூன்று மொத்துவந்தகலித்தாழிசை. அளவொத்து மென்றவும்மையால் ஈற்றடிமிக்கு ஏனையடியொவ்வாது வரப்பெறுமெனவுங்கொள்க. "பூண்டபறையறையப் பூதமருள, நீண்டசடையானாடுமே, நீண்டசடையானாடுமெனப, மாண்டசாயன் மலைமகள்காணவேகாணவே,, இஃதீற்றடிமிக்கு இரண்டாமடிகுறைந்து முதலடியும், மூன்றாமடியும், ஒத்துவந்தகலித்தாழிசை. சீர்வரையறுத்திலாமையால் எனைத்துச்சீரானுமடியாய் வரப்பெறுமெனக்கொள்க. என்னை. "அடியெனைத்தாகியு மொத்துவந்தளவிற், கடையடிமிகுவது கலித்தாழிசையே,, என்பதியாப்பருங்கலம். "அந்தடிமிக்குச் சிலபலவாயடி, தந்தமுளொப்பன தாழிசையாகும்,, என்றாராகலின். கலித்துறையே நெடிலடிநான்காய்நிகழ்வது. எ-து. ஐஞ்சீரடிநான்காய்வருவது கலித்துறை. எ-று. வ-று. "மானுந்தோழியு மாயமுமாடுந்துறைநண்ணித், தானுந்தேரும்பாகனும் வந்தென்னலனுண்டான், தேனும்பாலும் போல்வனசொல்லிப் பிரிவானேல், கானும்புள்ளுங் கைதையுமெல்லாங்கரியன்றே,, "வென்றுன்

ஙீனையின் நீக்கினின்றூர்,, இவைநெடிலடிநான்காய் வந்தகலித்துறை. என்னை "நெடிலடிநான்காய் நிகழ்வதுகலித்துறை,, என்பதியாப்பருங்கலம். "ஐஞ்சீரடியி னடித்தொகைநான்மையோ, டெஞ்சாதியன்றன வெல்லாங் கலித்துறை,, என்றூராகலின். நேரடியீரிரண்டாய் விடினதுவாகும்விருத்தம் எ-அ. நாற்சீரடி நான்காய்வருவது கலிவிருத்தம். எ-று. திருத்தகு மெல்லியலே - எ-து-மகடூஉமுன்னிலை. வ-று. "வேய்தலைநீடிய வெள்ளி விலங்கலில், ஆய்தலிலொண்சுட ராழியினன்றமர், வாய்தலினின்றனர் வந்தனர்மன்னர்முன்; நீதலைசென்றுரை நீள்கடைகாப்போய்.,,—"தேம்பழுத்தினிய-தவளமாடமே,, என்னை "அளவடிநான்கின கலிவிருத்தம்மே,, என்பதியாப்பருங்கலம்.

கொய்தினையாய்தினைமென்றினைவாள்வரிபூண்டபறை
எய்தியதாழிசையானும்வென்றூனுங்கலித்துறையே
மைமதிகழோதிவரிநெடுங்கண்ணவனமுலையாய்
மெய்தருவேய்தலைதேம்பழுத்தென்பவிருத்தங்களே.

இவ்வுரைச் சூத்திரக்காரிகையின்வழியே கலிப்பாவினங்கட்குக் காட்டிய இலக்கியங்களை முதனினைத்துக்கொள்க. (௩௩)

குறளடிநான்கினமூன்றொருதாழிசைகோதில்வஞ்சித்
துறையொருவாதுதனிவருமாய்விடிற்சிந்தடிநான்
கறைதருகாலையுமேவிருத்தந்தனிச்சொல்வந்து
மறைதலில்வாரத்தினுலிறும்வஞ்சிவஞ்சிக்கொடியே.

இ-கை. வஞ்சித்தாழிசையும், வஞ்சித்துறையும், வஞ்சிவிருத்தமும், வஞ்சிப்பாவிற் கிறுமாறுமுணர்த்து-ற்று. குறளடிநான்கின மூன்றொரு தாழிசைகோதில் - எ-து-இருசீரடிநான்காய் மூன்றுசெய்யுள் ஒருபொருண்மே லடுக்கிவருவன வஞ்சித்தாழிசையாம். எ - று. கோதிலென்று மிகுத்துச்சொல்லியவதனுல், அவையொருபொருண்மேல் மூன்றடுக்கியல்லது வாராவெனக்கொள்க. வ-று. "மட்பிடியை மதவேழம், தடக்கையான் வெயின்மறைக்கும், இடைச்சுரமிறந்தார்க்கே, நடக்குமென்மனனே காண். பேடையையிரும்போத்துத், தோகையான் வெயின்மறைக்கும் காடகமிறந்தார்க்கே ஓடுமென்மனனேகாண். இரும்பிடியையிகல்வேழம் பெருங்கையான் வெயின்மறைக்கும், அருஞ்சுரமிறந்தார்க்கே, விரும்புமென்மனனேகாண்,, இவை இருசீரடிநான்காய் ஒருபொருண்மேன் மூன்றடுக்கிவந்தமையால் வஞ்சித்தாழிசை. வஞ்சித்துறை யொருவாது தனி வருமாய்விடின் - எ-து - இருசீரடிநான்காய் ஒருபொருண்மேலொன்றாய்

வருவது வஞ்சித்துறை, எ-று. வ-று. "மைசிறந்தனமணிவரை, கைசிறந்தனகாந்தளும், பொய்சிறந்தனர்காதலர், மெய்சிறந்திலர்விளங்கிழாய்,, இது குறளடி நான்காய் ஒருபொருண்மேற்றனியே வந்தமையான் வஞ்சித்துறை. என்னை "குறளடிநான்மையிற் கோன்வழுன்றாய், வருவனவஞ்சித் தாழிசைதனிவரிற், றுறையெனமொழிப துணிந்திசினோரே. என்றார். இன் சிந்தடிநான்கறை நருங்கலிவிருத்தம்-எ-து. முச்சீரடி நான்காய்வருவது வஞ்சிவிருத்தம்-எ-று. வ-று. "சோலையார்ந்தசுரத்திடைக், காலையார் கழலார்ப்பவும், மாலைமார்பன் வருமாயின், நீலவுண்கணிவள்வாழுமே,, இது சிந்தடிநான்காய் வந்தமையான் வஞ்சிவிருத்தம். என்னை "சிந்தடி நான்காய் வருவனவஞ்சி, யெஞ்சாவிருத்த மென்மனார்புலவர்,, என்பது யாப்பருங்கலம். தனிச்சொல்வந்து மறைதலில் வாரததினுளிறும்வஞ்சி- எ-து-குறளடிவஞ்சிப்பாவும், சிந்தடிவஞ்சிப்பாவும், தனிச்சொற்பெற்று ஆசிரியச்சுரிதகத்தா லிறும்-எ-று. மறைதலில்வாரமென்று சிறப்பித்தவதனால், வஞ்சிப்பா ஆசிரியசுரிதகத்தா லிறுவதல்லது வெள்ளைச்சுரிதகத்தா லிறப்பெறாதெனக்கொள்க. வ-று. (பூந்தாமரைஎன்னும்) குறளடிவஞ்சிப்பாவானுமென்னுந் தனிச்சொற்பெற்று ஆசிரியச்சுரிதகத்தா லிற்றவாறும். "கொடிவாலனகுருநிறத்தன குறுந்தாளன, வடிவாளெயிற்றழலுளையன வள்ளுகிரன, பணையெருத்தி னிணையரிமானணையேறித், துணையில்லாத் துறவுநெறிக் கிறைவனாகி, எயினடு வணினிதிருந்தெல்லோர்க்கும், பயில்படுவினை பத்திமையிற்செப்பியோன், புணையெனத், திருவுறு திருந்தடி திசைதொழ, விரிவுறுநாற்கதி வீடுநனியெளிதே,, இசசிந்தடி வஞ்சிப்பா. புணையென்னுந் தனிசசொற்பெற்று ஆசிரியச்சுரிதகத்தா லிற்றவாறுங்கண்டுகொள்க. என்னை "தூங்கலிசையன வஞ்சிமற்றவை, யாய்ந்ததனிச்சொலோ டகவலினிறுமே என்பதியாப்பருங்கலம்,, அமுதே என்பதும், வஞ்சிக்கொடியேஎன்பதும், மகடூஉமுன்னிலை.

மடப்பிடிபேடையிரும்பிடிவஞ்சியின்முழிசையாம்
வடுப்புரைகண்ணினல்லாய்மைசிறந்தன வான்றுணையாம்
தடப்பெருஞ்சோலைவிருத்தமதாகுந்தயங்குவஞ்சிக்
கொடித்தொடிபூந்தாமரைகொடிவர்லனுதாரணமே,

இவ்வுரைச் சூத்திரக்காரிகையின்வழியே வஞ்சிப்பாவினங்கட்குக் காட்டிய இலக்கியங்களை முதனினைத்துக்கொள்க. (௰௪)

பண்பார்புறநிலைபாங்குடைக்கைக்கிளைவாயுறைவாழ்த்
தொண்பாசசெவியறிவென்றிப்பொருண்மிசைபூனமில்லா

வெண்பாமுதல்வந்தகவல்பின்னாகவிளையுமென்றால்
வண்பான்மொழிமடவாய்மருட்பாவென்னும்வையகமே.

இ-ள. மருட்பாவாமாறுணர்த்து-ற்று, இசன்பொழிப்பு, புறநிலைவாழ்த்தும், கைக்கிளையும், வாயுறைவாழ்த்தும், செவியறிவுறூஉமென்னும், நான்குபொருண்மேலும், வெண்பாமுதலாக ஆசிரியமீறாகவருமெனின் அதனைமருட்பாவென்று வழங்குவர் புலவர்- எ-று. வண்பான்மொழிமடவாய-எ-து. மகடூஉமுன்னிலை. என்னை "வெள்ளைமுதலா வாசிரியமிறுதி, கொள்ளத்தொடுப்பது மருட்பாவாகும்.,, என்றாராகலின். வ-று. "தென்றலிடை போழ்ந்து தேனார்நறுமல்லை, முன்றின்முகைவிரியு முத்தநீர்த் தண்சோணாட, குன்றமர்ந்த கொல்லேறூர்ந்திற புறங்காப்ப, என்றும் நீராக வயிற்றேவர், சீர்சால்செல்வமொடு பொலிமதிசிறந்தே,, இது வழிபடுதெய்வநிற் புறங்காப்பப் பழிதீரசெல்வமோ டொருகாலைக் கொருகாற் சிறந்து பொலிமினென்றமையாற் புறநிலைவாழ்த்து மருட்பா-என்னை "வழிபடுதெய்வநிற் புறங்காப்பப், பழிதீர்செல்வமொடு வழிவழிசிறந்து,பொலிமினென்னும் புறநிலைவாழ்த்தே, கலிநிலைவகையும் வஞ்சியுமபெறாஅ,, என்றார் தொல்காப்பியனார்.—"திருநுதல்வேர் வரும்புந்தேங்கோதைவாடும், இருநிலஞ்சேவடியுந்தோயும், அரிபரந்த, சேயிதழுண்கணுமிமைக்கும், ஆதுமறறிவ ளகலிடத்தணங்கே,, இது துணிதலை நுதலிய வொருதலைக்காம மாதலிற்கைக்கிளைமருட்பா. என்னை "காட்சிமுதலாக் கலவியி னெநகலை, வேட்கையிற்புலம்புதல் கைக்கிளையதுதான், கேட்போரில்லாக் கிளவிகள்பெறுமே,, என்றாராகலின். "பலமுறையுமோம்பப் படுவனகேண்மின், சொலன்முறைக்கட்டோன்றிச் சூடாமணித்தேனார்ந்து, நிலமுறையினுண்ட நிகரில்லார்மாட்டுஞ், சிலமுறையல்லது செல்வங்களில்லா, இலங்குமெறிபடையு மாற்றலுமன்பும, கலந்ததங்கல்வியுந் தோற்றமுமேனைப், பொலன்செயபுனைகலனோ டிவ்வாறனைலும், விலங்கிவருங்கூற்றை விலக்கலுமாகா, அனைத்தாதனி யிருங்காண்டீர், நினைத்தக்க, கூறியவெம்மொழி பிழையாது, தேறினோரொழுகிற் சென்றுபயன்றருமே,, இது மெய்பபொருள் சொன்னமையால் வாயுறைவாழ்த்துமருட்பா. என்னை "வாயுறைவாழ்த்தே வயங்கநாடின், வேம்புங்கடுவும் போலவெஞ்சொற, றருங்குதலின்றி வழிநனிபயக்குமென, றோம்படைக்கிளவியின் வாயுறுத்தன்றே,, என்றார் தொல்காப்பியனார். "பல்யானைமன்னர்முருங்கவமருழந்து, சொல்யானைத்தேரொடுங் கோட்டந்துநல்ல, தலையாலங்கானம் பொலியத்தொலையாப், படுகளம்பாடுபுக் காற்றிப்பகைஞர், அடுகளம்

வேட்டோன் மருகவடுதிறல், ஆவிசிமிர்தோட்பெரு வழுதியெஞ்ஞான்று
ம், ஈரமுடையையா யென்வாய்ச சொற்கேட்டி, உடையவுழவனை நெஞ்
சனுங்கக்கொண்டு, வருகாலுழவர்க்கு வேளாண்மைசெய்யல், மழவரிழை
க்கும்வளைக் காணிதியீட்டம், காட்டுமமைச்சனை யாற்றத்தெளியல், அ
மைத்தவரும் பொருளாறன்றிவௌவல், இனத்தைப்பெரும் பொருளா
சையாற்சென்று, மன்றமாறுக வகழாதியென்றும், மறப்புறமாக மதுகையா
ரோம்பும், அறப்புறமாசைப் பட்டேற்கவறத்தால், அவையார்கொடுபாத்
திருத்திநலையாக, நட்டார்குழிசி சிதையாதியொட்டார், செவிபுதைசகு
ந்தீய கடுஞ்சொற்கவியுடைத்தாய்க், கற்றார்ககினுகிக் கல்லார்ககடிக்
தொழுகிச், செற்றார்சசெறுத்துநிற் சேர்ந்தாரையாக்குதி, அற்றமறிந்த வ
றிவினய், மற்றும், இவையிவைவீயா தொழுகுதியேயாப், பொருகடபோ
டை நிலமகள், ஒருகுடைநீழற் றுஞ்சுவண்மனனே,, இது வியப்பின்றிய
உயர்ந்தோர்கண் வியந்தொழுகுதல் கடனெனவரசாக் குணாத்தமையாற்
செவியறிவுறூஉமருட்பா. என்னை "செவியுறைதானே, பொங்குதலின்றி
ப் புரையோர்காப்ப, வவிதல்கடனெனச செவியுறுத்தற்றே. என்றார்
தொல்காப்பியனார்.—என்றிப்பொருண்மிசையென்று மிகுத்துசசொல்லி
யவதனல், இந்நான்கு பொருண்மேலுமன்றி மருட்பா வரப்பெறுமெனக
கொளக. என்னை "புறநிலைவாயுறை செவியறிவுறூஉவெனத், திறநிலைமூ
ன்றுந் திண்ணிதிற்றெரியின், வெண்பாவியலினு மாசிரியவியலினும், ப
ண்புறமுடியும் பாவினவென்ப,, என்றார் தொல்காப்பியனார். பண்டார்புற
நிலை யென்றும், ஒண்பாச்செவியறிவென்றுஞ் சிறப்பித்தவதனல்—புறநி
லைவாழ்த்தும், வாயுறைவாழ்த்தும், செவியறிவுறூஉம் இவ்வாறன்றி வெ
ண்பாவேயாயும், ஆசிரியமேயாயும் வரப்பெறும். கலியும், வஞ்சியுமாய்,
வரப்பெறாவெனக்கொள்க.—என்னை "கலிநிலைவகையும் வஞ்சியும்பெறா,
வாயுறைவாழ்த்தே யவையடக்கியலே, செவியறிவுறூஉமென் றவையுமா
னே,, என்றாராகலின். பாங்குடைக கைக்கிளையென்று சிறப்பித்தவதனு
ல், கைக்கிளையெல்லாப்பாவானும் வரப்பெறும், மருட்பாவேயாய் வருக
வெனவும் யாப்புறவில்லையென்றும், கைககிளை வெண்பாமுதலாக வாசி
ரியமீறாகவரும்வழி ஆசிரியவடி யிரண்டேயாய் அவற்றுள் ஈற்றயலடி
முச்சீராய்வருமென்றும், வெண்பாவடியும், ஆசிரியவடியும், ஒத்துவருவ
ன சமநிலைமருட்பாவென்றும், ஒவ்வாதன வியனிலைமருட் பாவென்றார்,
வழங்கப்படும். ஊனமில்லா வெண்பாவென்று சிறப்பித்தவதனல் வேற்
றுவண்ணம் விரவாதுவெள்ளை வண்ணமெல்லா வண்ணத்துள்ளுஞ் சிற
ப்புடைத்தாய், மங்கலமரபிற்றாய், அவ்வாறே வேற்றுத்தளையும், அடிபு

,சீரும், விரவாமையால், எல்லாப்பாவினுள்ளும் வெண்பாசிறப்புடைத்தென்று முன்வைக்கப்பட்டதென்பது அறிவித்தற்கு வேண்டப்பட்டது "வேதவாய்மேன்மகனும் வேந்தன்மடமகளும், நீதியாற்சேர்ந்து நிகழ்ந்த நேர்க்குலம்போல், ஆதிசால்பாவு மரசர்வியன்பாவும், ஓதியவாறேத மருட்பாவாபோக்கிற்றே,, பண்ணுந்திறமும்போற் பாவுமினமுமாய், வண்ணவிரற்ப வகைமையாற், பண்ணின், திறம்விளரிக்கில்லதுபோற் செப்பலகவல், இசைமருட்கு மில்லையினம்.,, இவற்றை விரித்துரைத்துக் கொள்க.

தென்றலிடையுந்திருநுதல்வேர்வரும்பன்றறைவெள்
ளென்றியபாவும்பல்யானையுமென்பவொணபோதணைந்த
பொனறிகமோதிபுறநிலைகைக்கிளைவாயுறைவாழ்த்
தென்றிவற்றிற்கும்செவியறிவிற்குமிலக்கியமே.

இவ்வுரைச் சூத்திரக்காரிகையின்வழியே மருட்பாநான்கிற்குங்காட்டிய இலக்கியங்களை முதனினைத்துக்கொள்க. (௰௫)

வெண்பாவளம்படவீரடிபொன்றுடனேரிசையும்
கண்பானல்போன்மயிலந்தமின்மூன்றுங்கடைதருக்கி
நண்பார்தரவொன்றனைசுரவேயடியோமிருறள்
பண்பார்புறநிலைசெய்யுளியலென்பபாவலரே.

இரண்டாவது - செய்யுளியல்
முற்றிற்று.

---

மூன்றாவது

# ஒழிபியல்

---

சீருந்தளையுஞ்சிதையிற்சிறியஇஉஅளபோ
டாருமறிவரலகுபெருமையசாரணைவேல்
ஓருங்குறிலியலொற்றளபாய்விடின்றோரலகாம்
வாரும்வடமுந்திகமுழுகிழ்முலைவாணுதலே.

( என்பது காரிகை. )

இவ்வியலென்ன பெயர்த்தோவெனின், உறுப்பியலுள்ளும், செய்யுளியலுள்ளும், சொல்லாதொழிந்தவைகளை புணர்த்தினமையால், ஒழி

பியலென்னும்பெயர்த்து. இவ்வியலுள் - இக்காரிகை யென்னுதலிற்றோ வெனின். ஒருசாரெழுத்துகட் கெய்தியதோ ரிலக்கணமுணர்த்து - ற்று. சீருந்தளையுஞ் சிதையிற்சிறியஇஉ அளபோடாரு மறிவரலகுபெறுமை. எ-து. சீருந்தளையுங் கெட்வந்தவிடத்துக் குற்றியலிகரமும், குற்றியலுகரமும, உயிரளபெடையும், அலகுகாரியம்பெறு எ-று. ஒற்றளபாய்விடினே ரலகாமென்றுரைத்தமையால, ஈண்டுயிரளபெடை கொள்ளப்பட்டது. ஆருமறிவரென்று மிகுத்துச்சொல்லியவதனால். குற்றியலிகரமும், குற்றியலுகரமும், ஒற்றியல்பினவாயவிடத்தும், உயிரளபெடைகள் நெட்டெழுத்தியல்பினவாயவிடத்தும், அலகிடுமிடத்தெனக்கொள்க. எனவே எதிரது மறுக்கதலென்னும் இலக்கணத்தாற் சீருந்தளையுஞ் சிதைந்திற்புழிச்சிறியஇஉ அளபோ டாருமறிவரலகுபெறு மென்பதாயிற்று. இன்னும், ஆருமறிவரென்று மிகுத்துச்சொல்லியவதனால, அவை யலகுகாரியம்பெறுமபோது குற்றியலிகரமும், குற்றியலுகரமும, குற்றெழுத்தினபயத்தவாம். உயிரளபெடை யலகுகாரியம்பெறுமாறு தங்காரிகையுட் போககிச்சொல்லுதும. வ-று சிறுநன்றியின்றிவர்க்கி யாஞ்செய்தக்காலுனைப், பெறுநன்றியினும் பெரிதென், றுறுநன்றி, தானவாயச் செய்வதூஉந் தானமன்றென்பவே, வானவாமுள்ளத்தவர்,, இதனுள், இன்றிவர்க்கியாமென்புழி, குற்றியலிகரம்வந்து வெண்பாவினுள வஞ்சியுரிச்சீராயிற்று. வெண்பாவினுள் வஞ்சியுரிச்சீர் விரவுமெனலும, ஒத்தில்லாமை பால், வெண்பா வழிய நிற்குமாதலால், ஈண்டுக்குறறியலிகரததை இவ்விலக்கணத்தால் அலகுபெறுதென்று களையச்சீர்சிதையாதாம். "குழலினிதியாழினி தென்பதம்மக்கள், மழலைச்சொற்கேளாதவா.—அருளல்லதியாதெனிற் கொல்லாமைகோறல், பொருளல்ல தவ்வூன்றினல்,, இவற்றுள், குழலினிதியாழினிதெனபுழி, ஆசிரியத்தளையும், அருளல்லதியாதெனில, என்புழிக கலித்தளையுந்தட்டு வெண்டளைத்தன்மை குன்றிபபோஞ்சீர் கனிபுகற்புல்லாத மற்றளையென்னும், இலக்கணத்தோடும, வெண்டளையுட்பிறதளை வாராவலலன, வெல்லாத்தளையு மயங்கியுமவழங்கும். என்னு மிலக்கணத்தோடும், மாறுகொள்ளுமாதலால், ஈண்டுக்குற்றியலிகரத்தை இவ்விலககணத்தால் அலகுபெறுதென்றுகளையச் சீருந்தளையுஞ் சிதையாவாம். இனிக்குற்றிய லுகரத்திற்குச்சொல்லுமாறு. "சென்றுகொடுநீடு குருதிபாயவும, சென்றுகொடுநீடு செழுமலைபொருவன, வென்றுகொடுநீடு விறல்வேழம, என்றுழூடுநீடு பிடியுளபோலும். அதனால, இன்றிடையிரவில னெறிவரின், வண்டுன்கோதை யுயிர்வாழலளே,, இவ்விருசீரடி வஞ்சிப்பாவினுட் குற்றுகரம்வந்து ஐந்தசைச்சீரும், ஆறசைச்சீருமாயின இவ்வாறு வருகவென்னும் ஒத்தில்லாமையிற் குற்றுகரத்தை இவ்விலக்

கணத்தால் அலகுபெறுதென்றுகளையச் சீருந்தளையுஞ் சிதையாவாம். இனி உயிரளபெடைக்குச் சொல்லுமாறு. "பல்லுக்குத்தோற்ற பனிமுல்லை பைங்கிளிகள், சொல்லுக்குத் தோற்றின்னந் தோன்றினவால், நெல்லுக்கு, நூறேஒநூ றென்பாளுடங்கிடைக்கு மெனமுலைக்குப், பாரேருமாலன் றளந்தமண்,, இதனுள் நூறேஒநூறென்புழிப் பண்டமாற்றின்கண் ஒளபெடை யநுகரணம்வந்து வெண்பாவினுள் நாலசைச்சீராயிற்று. அவ்வாறு வருகவென்னும் ஓத்தில்லாமையால் இவ்வாறலகிட்டு உதாரணவாய்பாட்டால், ஓசையூட்டும்பொழுது ஓசையுண்ணாது செப்பலோசை பிழைத்து நிற்குமாதலால், ஈண்டு உயிரளபெடையை இவ்விலக்கணத்தால் அலகுபெறுமென்று நெட்டெழுத்தே போலக்கொண்டு அலகிடச் சீரும்தளையுஞ் சிதைபாவாம். வெ "இடைநுடங்கவீங் கோதைசென்றுழவ்வாடகண், புடைபெயரப் போழ்வாய்திறந்து, கடைகடையில், உப்போஒவெனவுரைத்து மீள்வாளொளிமுறுவற், றொப்போநீ வேலியுலகு,, இதனுள் உப்போஒவென் புழிப்பண்டமாற்றின்கண் அளபெடை யநுகரணம்வந்து கலித்தளைதட்டு வெண்பாவழிய நிற்குமாதலின் ஈண்டுயிரளபெடைய, இவ்விலக்கணத்தால் அலகுபெறுதென்று நெட்டெழுத்தே போலக்கொண்டு அலகிடத்தளை சிதையாதாம். இனிக் குற்றியலிகர குற்றியலுகரங்கள், குற்றெழுத்தேபோலநின் றலகுபெறுமாறு. வெ "வந்துநீசேரினுயிர் வாழும்வாராக்கால், முந்தியாய்பெய்த வளைகழலும், முந்தியாங், கோளாளனேகண்டநங் கோல்குறிபாயின்னுமோர் நாளானேநாய்புணருமாறு,, இதனுள்-வந்துநீயென்புழிக் குற்றியலுகரமும், முந்தியாவென்புழிக் குற்றியலிகரமும், வந்து சீருந்தளையுந் திருந்திநிற்புழிக் குற்றெழுத்தின்பயத்தவாய் அலகுபெறறவாறு கண்டுகொள்க. என்னை "தளைசீர்வண்ணந் தாங்கெடவரினே, குறுகியவிகரமுங் குற்றியலுகரமு, மளபெடையாவிபு மலகியல்பிலவே,, என்பதியாப்பருங்கலல். ஐகாரனைவேலோருங்குறிலியல்-எ-து-ஒன்றரைமாத்திரை யென்றோதப்பட்ட ஐகாரக்குறுக்கம் குற்றெழுத்தேபோலக்கொண்டு அலகிடப்பெறும்- எ-று. ஒருமென்பதிடைச்சொல்-என்னை "குறுமையெழுத்தினியல்பேயை காரமொடுமையி னிங்கியக்கால்,, என்றாராகலின். வ-று. வெ "அன்னையையானோவதவமாமணிப்பூழாய், புன்னையையானோவன்புலந்து.—நடைக்குதிரையேறி நறுந்தார்வழுதி, அடைப்பையாய் கோறுவெனலும், அடைப்பையான், சுளாற்சிறுகோல் கொடுத்தான் றனபெறினும், கொள்ளாதியாங்காண்டலே.—கெண்டையைவென்ற கிளரொளியுண்கணாள், பண்டையளல்லள்படி,, என்னும் இவற்றுள்-ஐகாரக்குறுக்கம், குற்றெழுத்தேபோலக் குறிலோடும், நெடிலோடுங்கூடிநின்று நிரையசையாயினவாறும், த

ணியெனின்று நேரசையாயினவாறுங் கண்டுகொள்க. ஒற்றளபாய்விடினே ரலகாம் - எ-து-ஒற்றுக்கள் அளபெழுந்தவிடத்து நேரசையாம் - எ-று. என்னை "ஆய்தமுமொற்று மளபெழுமிம்புழி, வேறல்லெழுத்தும விதியின வாகும்,, என்றார் காக்கைபாடினியார். அளபெழாதவிடத்து, ஒற்றுக்கள் அலகுபெறாதென்பதாம் என்னை "தனிநிலையொற்றிவை தாமலகியலா, வளபெடையல்லாக் காலையான. ஈரொற்றாயினு மூவொற்றாயினு, மோரொற்றியல வென்மனார்புலவர். என்றாராகலின். கார்க்கடல்-கார்ச்சேதம்-கதிர்ச்செந்நெல்-கடாய்க்கன்று-என, ஈரொற்றுடனிலையாய்நிற்பினுங் குற்றெழுத்தின் பயத்தவாயலகு பெறுதென்பதூஉம், ஒற்றளபெழினும், மற்றோரெழுத்தினோடுங்கூடி நிரையசையாகாதென்பதூஉம், பெறப்பட்டது. வ-று. "நண்ண்டனனைக் கண்டுங்கேட்டும்—வெ கண்ண்கருவிளை கார்முல்லைகூரெயிறு, பொன்னர்பொறிசுணங்கு போழவாயிலவம்பூ, மின்னேழைமருங்குல் மேதகுசாயலாள், என்ன்பிற மதனாமாறு—எஃஃகிலங்கிய கையராயின் னுயிர், வெஃஃகுவார்க் கில்லைவீடு,, இவற்றுள்-ஒற்றும், ஆய்தமும்; அளபெழுந்து அலகுபெற்றவாறுகண்டுகொள்க. வாருர்வடமுந்தெழு முகிழ்முலைவா ணுதலே எ-து-மகடூஉமுன்னிலை.

விட்டிசைத்தல்லான் முதற்கட்ட னிக்குறினேரசையென்
றொட்டப்படாதத னுதாரண மோசைகுன்று
நெட்டளபாய்விடினேர்நேர் நிரையொடு நேரசையாம்
இட்டத்திறுக்குறில்சேரிலிலக்கியமோர் நிரைதவே.

இ-கை. ஒருசார் அசைகட்கெய்தியதோ ரிலக்கணமுணர்த்து-ற்று- விட்டிசைத்தல்லான் முதற்கட்டனிக்குறி னேரசையென்றொட்டப்படாது-எ-து-மேற்பொதுவகையாற் றனிக்குறினேரசை யென்றாராயினும், விட்டிசைத்து நின்றவழியல்லது மொழிமுதற்கணின்ற தனிக்குற்றெழுத்து நேரசையாமென றுடம்படப்பெறாது-எ-று. எனவே விட்டிசையாதவழி மொழிமுதற்கட்டனிக் குறில்குறிலோடு நெடிலோடுங்கூடி நிரையசையாமென்பதாயிற்று. அதற்குண்ணுதாரணம்-எ து-வெ "உண்ணுணெனிதிரு ளேகுபுகழ்செய்யான், தானருங்கேளிர் துயர்களையான், கொன்னே, வழங்கான்பொருள் காத்திருப்பானேல் அஆ, இழந்தானென்றெண்ணப்படும்,, இதனுள்-அஆ-என்புழி யருளின்கட்குறிப்பாய் மொழிமுதற்கணின்ற குற்றெழுத்து விட்டிசைத்து நேரசையாயினவாறும், அல்லாதவழி குறிலோடு நெடிலோடுங்கூடி நிரையசையாயினவாறுங் கண்டுகொள்க. வெ "வெறிகமழ்தண்புற வின்வீங்கிபுரளு, மறிமுலைபுண்

இ-ள். சீருந்தளையுஞ் செய்யுளகத்து நிற்பதோர் முறைமையுணர்த் து-ற்று. மாஞ்சீர்கலியுட்புகா-எ-து- தேமாபுளிமாவென்னும், நேரீற்றியற் சீரிரண்டும், கலிப்பாவினுட்புகப்பெறு- எ-று. கலிப்பாவின் விளங்கனி வந்தாஞ்சீரடையா-எ-து. கருவிளங்கனி, கூவிளங்கனி, என்னும் நிரை நடுவாகிய வஞ்சியுரிச்சீரிரண்டும், கலிப்பாவினுட்புகப்பெறு- எ-று. அக வலநத்தும். எ-து. ஆசிரியப்பாவினுள்ளும், கருவிளங்கனி, கூவிளங்கனி யென்னு மிரண்டுசீரும் புகப்பெறு-எ-று. அல்லாதவெல்லாந் தாஞ்சீரம யங்கும்- எ-து- இவை யொழிந்தசீர்களெல்லாம் பாவினுள்ளும், பாவி னத் துள்ளும்வந்து மயங்கப்பெறும்-எ-று. தளையுமதே-எ-து-எல்லாத்த ளையும், எல்லாப்பாவினுள்ளும், எல்லாப் பாவினத்துள்ளும்வந்து மயங் கப்பெறும்-எ-று. வெள்ளைத்தன்மை குன்றிப்போஞ்சீர்கனிபுகில்- எ-து- எல்லாச்சீரும் எல்லாப் பாவினுள்ளும், பாவினத்துள்ளும், வந்து மயங் கப்பெறு மென்றாராயினும், வஞ்சியுரிச்சீர் நான்கும் வெண்பாவிற் புகப் பெறு புகிற்செப்பலோசையழிந்து வேறுபட்டு ஓசையையுண்ணாது கெ டும்-எ-று. புல்லாதயற்றளை - எ-து- எல்லாத்தளையும், எல்லாப்பாவினு ள்ளும், பாவினத்துள்ளும், வந்துமயங்கப்பெறுமென்றாராயினும், வெண் பாவில இயற்சீர்வெண்டளையும், வெண்சீர்வெண்டளையுமல்லது வேற்று த்தளைவிரவாது - எ - று. பூங்கொடியே - எ - து. மகடூஉமுன்னிலை. வ-று. “குடநிலைத்தண்புறவில் - சென்றவாறே,, என்னுந்தரவு கொச்ச கக்கலிப்பாவில் நேரீற்றியற்சீரும், நிரைநடுவாகிய வஞ்சியுரிச்சீரும் வா ராது நிரையீற்றாசிரிய வுரிச்சீரும், வெண்பாவுரிச்சீரும், நேர்நடுவாகிய வஞ்சியுரிசசீரும் வந்து, வெண்டளையும், ஆசிரியந்தளையும், கலித்தளை யும், வஞ்சித்தளையு மயங்கிவந்தவாறுகண்டுகொள்க. ஆ- “நெடுவரைச்சா ரற் குறுங்கோட்டுப்பலவின், விண்டுவார்தீஞ்சுளை வீங்குகவுட்கடுவன் உ ண்டுசிலம்பேறி யோங்கியவிருங்கழைப், படிசும்பயிறறுமென்ப, மடியாக் கொலைவி லென்னையர்மலையே,, இவ்வாசிரியத்துள் தன்சீரும், வெண்சீ ரும், நேர்நடுவாகிய வஞ்சியுரிசசீரும்வந்து வெண்டளையும் தன்றளையும், கலித்தளையும், வஞ்சித்தளையும், மயங்கிவந்தவாறுகண்டுகொள்க. “மண் டிணிந்தநிலனும, நிலனேந்திய விசும்பும், விசும்புதை வரும்வளியும் வ ளிதலைஇயதீயும், தீமுரணியநீரும்.—புன்காற்புணர்மருதின் போதரும்பி ய புனற்றுமனை—தேன்முட்டீங்கரும்பின், பூந்தாட்புனற்றுமனை—வார் காற்செங்கழுநீர்.—இக்குறளடி வஞ்சிப்பாக்களுள், வெண்சீரும், தன்சீ ரும், நேரீற்றியற்சீரும், வந்துவெண்டளையும். தன்றளையும், கலித்தளையு ம். ஆசிரியத்தளையு மயங்கிவந்தவாறு கண்டுகொள்க. (முழங்குதிரைக் கொற்கைவேந்தன்) என்னும் வெண்டுறைபுள வஞ்சியுரிச்சீரும், இயற்சீ

ரும், வெண்சீரும் வஞ்சித்தளையும், ஆசிரியத்தளையும், வெண்டளையும், கலித்தளையும், மயங்கிவந்தவாறு கண்டுகொள்க. "வளர்கொடியனையமணை ம் விரிவனமல்லிகையொடுமௌவல், நளிர்கொடியனாறு விளையணைகும ல்லனவகுளமும், குளிர்கொடியனகுழை மாதவிகுவிமுகையனகோங்கம், நுளிர்கொடியனவுயர் தளிரினொடொழுகிணரனவோடை,, இக்கலியிருத் தத்துள், நிரைநடுவாகிய வஞ்சியுரிச்சீரும், நேரீற்றியற்சீரும், வஞ்சித்த ளையும், ஆசிரியத்தளையும், மயங்கிவந்தவாறு கண்டுகொள்க. நேரீற்றியற் சீர் ஒத்தாழிசைக்கலியுள் வாராதவாறும், நிரைநடுவாகிய வஞ்சியுரிச்சீர் கலிப்பாவுள்ளும், ஆசிரியத்துள்ளும், வாராதவாறும், வெண்பாவினுள் ளும், வஞ்சியுரிச்சீர் வாராதவாறும், வேற்றுத்தளை விரவாமையும், மேற் காட்டிய செய்யுளகத்தும், பிறவற்றுள்ளுங்கண்டுகொள்க. நேரீற்றியற்சீ ர் வெண்கலியுள்ளும், கொச்சகத்துள்ளும் வருதலும், நிரைநடுவாகிய வ ஞ்சியுரிச்சீர் கொச்சகத் துள்ளுஞ்சிறுகிவருதலும், செய்யுளோத்துள்ளே சொல்லப்பட்டன. வெ - "குலாவணங்குவில்லெயினர் கோனகண்டன் கோழி, நிலாவணங்கு வெண்மணன்மேனின்று, புலாலுணங்கல், கொள் ளும்புட்காக்கின்ற கோவின்னமையோ நீ பிறர், உள்ளம்புக்காப்பதுணை,, இவ்வெண்பாவினுள் வஞ்சியுரிச்சீர்வந்தன வாலோவெனின், திருவள்ளு வப்பயன் நாலடிநானூறு முதலாகிய கீழ்க்கணக்குள்ளும், முததொள்ளா யிரமுதலாகிய சான்றோர்செய்யுளுள்ளும், வஞ்சியுரிச்சீர் வந்திலாமையா னும், வெண்பாவினுள் வஞ்சியுரிச்சீர் வருகவென்னு மோததில்லாமை யானும், வேற்றுத்தளை வெண்பாவினுள் வந்திலாமையானும், இத்தொ டக்கத்தன குற்றமல்லது குணமாகாவென்பது காக்கைபாடினியார் முத லாகிய தொல்லாசிரியர் துணிவு, அதுவே இந்நூலுடை யார்க்குமுடன் பாடு. என்னை. "இயற்சீர்நேரீற்றுத் தன்றளையடைதல், கலி[illegible]கவியல்பில வே காணுங்காலை, வஞ்சியுள்ளும் வரத்தகாவாயினு, மமரோவிடத் தா துமென்ப. என்றார் பல்காயனார். நிரைநடுவி[illegible]லா வஞ்சியுரிச்சீர், கலியி னுடகவலிற் கடிவரையிலவே. என்[illegible]றாராகலின். (௫)

இயற்றளைவெள்ளடி வஞ்சியின்பாதமகவலுள்ளான்
மயக்கப்படாவல்லவஞ்சிமருங்கினெஞ்சாவகவல்
கயற்கணல்லாய்கலிப்பாதமுநண்ணுங்கலியினுள்ளான்
முயக்கப்படுமுதற்காலிருபாவுமுறைமையினே.

இ-கை. அடிமயக்க மாமாறுணர்த்து-ற்று. இயற்றளைவெள்ளடி வஞ் சியின்பாத மகவலுள் மயக்கப்படாவல்ல-எ-து. இயற்சீர் வெண்டளையா ன்வந்த வெண்பாவடியும், வஞ்சியடியும், ஆசிரியப்பாவினுள்வந்து மயங்

ப்பெறும்-எ-று. என்னை "இயற்சீர்வெள்ளடியாசிரியமருங்கி, னிலைக்கு நிமரபி னிற்கவும்பெறுமே,, என்றார் தொல்காப்பியனார். "வஞ்சிவிரவ லாசிரியமுரித்தே, வெண்பாவிரவினுங் கடிவரையின்றே,, என்றார் நல் காயனார். வ-று. ஆ "சுறும்பியலையுட் குறும்பல்சுனைய, உலைக்கலன்ன பாறையேறிக், கொடுவிலலெயினர் பகழிமாய்க்கும், கவலைத்தென்பவ வர்தேர்சென்றவாறே, அது மற்றவலங்கொள்ளாது, நொதுமற்கலுழு மிவ்வழுங்கலூரோ,, இதனுள்- எறும்பியலையுட் குறும்பல்சுனைய-எ-து. இ யற்றளைவெள்ளடி-இதனை எறும்பியலையுட் குறும்பல்சுனைய குறுங்தொடி யூஞ்செல்சுரம் எனவுச்சரித்து வெள்ளடியாமாறு கண்டுகொள்க. ஆ "இருங்கடலுடுத்த பெருங்கண்மாநிலத், துடைநிலைநடுவண திடைபிறாக் கின்றித், தாமே யாண்ட வேமங்காவலர், இடுதிரைமணலினும் பலரேசுடு பிணக், காடுபதியாகப் போகித்தத்தம், நாடுபிறர்கொளச் சென்றுமாய்ந் தோரோ அதனால், நீயுங்கேண்மதியத்தைவீயா, துடம்பொடுநின்ற வுயி ருமில்லை, மடங்கலுண்மை மாயமோவன்றே, கள்ளிவேய்ந்த முள்ளியம புறங்காட்டு, வெள்ளில்போகிய வியலுளாங்கண், உப்பிலாவவிப் புழுக்க ல்கைக்கொண்டு பிறர்க்குநோக்கா, திழிபிறப்பினோ னீயப்பெற்று, நி , கலனுக விலங்குபலிமிசையும், இனனுவைகலவாராமுனனே, செய்நி முன்னியவினையே, முந்நீர்வரைப்பக முழுதுடன்றுறந்தே,, இதனுள் உ ப்பிலாவவிப் புழுகக்ல் கைக்கொண்டு பிறர்க்கு நோக்கா-எ-ம்- இழிபிறப் பினோ னீயப்பெற்று-எ-ம்-வஞ்சியடி விரவிவந்த வாறுகண்டுகொள்க. ம யக்கப்படுமென்னுது மயக்கப்படா வல்லவென்றிருகால் விலக்கிசசொல் லியவதனால் வெண்சீர்விரவிய இயற்றளை வெள்ளடியும், கலியடியும், ஆசி ரியத்துள்ளருகி வரப்பெறு மெனக்கொள்க, வ-று. ஆ "அங்கண்மதிய மரவின்வாய்ப்பட்டெனப், பூசல்வாயாப் புலம்புமனைக்கலங்கி, ஏதின்மா க்களு நோவர்தோழி, யென்றுநோவாரில்லை, தண்கடற்சேர்ப்பனுண்ட வென்னலக்கே,, இதனுள்-அங்கண்மதிய மரவின்வாய்ப்பட்டென-எ-து- வெண்சீர்விரவிய வியற்றளைவெள்ளடி, இதனை அங்கண்மதிய மரவின் வாய்ப்பட்டெனப், பொங்கியபூசல்பெரிது. எனவுச்சரித்து வெள்ளடியா மாறுகண்டுகொள்க. ஆ "குருகுவெண்டாளி கொடுபயந்தன்டென, மா வழங்குபெருங்காட்டு மழகளிறுகாணுது, மருள்பிடி திரிதருஞ்சாரல், அ ருளாளுகுத லாயிழைகொடிதே,, இதனுள் இரண்டாமடி கலியடி, இதனை மாவழங்கு பெருங்காட்டு மழகளிறுகாணுது, தீவழக்குசுழல் விழிக்கட் சீயஞ்சென்றுழலுமே. எனவுச்சரித்துக் கலியடியாமாறுகண்டுகொள்க வஞ்சிமருங்கி னெஞ்சாவகவல் கலிப்பாதமுங்கண்ணும்- எ-து. வஞ்சிப்பா வினுள் ஆசிரியவடியும், கலியடியும், விரவிவரப்பெறும். எ-று- எஞ்சாவ

கவலென்று சிறப்பித்தவதனால், வஞ்சியுள் ஆசிரியவடி பயின்றுவரும், கலியடியும், வெள்ளடியும், அருகியன்றி வாராவெனக்கொள்க. கயற்கணல்லாய்-எ-து-மகவேஉமுன்னிலை. பட்டினப்பாலையென்னும் வஞ்சி நெடும்பாட்டினுள் ஆசிரியவடி பயின்றுவந்தன, கலியடியும் வெள்ளடியும் அருகினவெனக்கொள்க. நேரிழைமகளிருணங் கண்கவரும், என்றித்தொடக்கத்தன ஆசிரியவடி,(வயலாமைபுழுக்குண்டு வறளடம்பின்மலர்மிலைந்து) எ-து-வஞ்சியடி இதனை வயலாமைபுழுக்குண்டு வறளடம்பின் மலர்மிலைந்து கயனுட்டக்கடைசியர்தங் காதலரோடாண்மணர்தனரோ எனவுச்சரித்துக் கலியடியாமாறுகண்டுகொள்க. (கோழியெறிந்த கொடுங்காற்கனங்குழாய்) எ-து-வெள்ளடி, இதனைகோழியெறிந்த கொடுங்காற்கனங்குழை யாழிசூழ்வையக்கணி. எனவுசசரித்து வெள்ளடியாமாறுகண்டுகொள்க. கலியினுள் மயக்கப்படுமுதற்காவிருபாவும். எ-து- கலிப்பாவினுள், வெண்பாவடியும், ஆசிரியவடியும் புக்குமயக்கப்பெறும்-எ-று. முறைமையினே-எ-து-முறைமையோடுங் கூட்டி வழங்கப்படும்-எ-று. "ஆசிரியப்பாவி னயற்பாவடிமயக்கும் ஆசிரியம் வெண்பாகலிக்கண்ணும், ஆசிரியம், வெண்பாக்கலிவிரவும் வஞ்சிக்கண் வெண்பாவின், ஒண்பாவடி விரவாவுற்று,,இதனை விரித்துரைத்துக்கொள்க. காமர்கடும்புனலென்னு மயங்கிசைக் கொச்சகக்கலிப்பாவினுள் வெண்பாவும் ஆசிரியப்பாவும் மயங்கினவாறுகண்டுகொள்க. ஆல் இரண்டும் அசை. (௪)

அருகிக்கலியோடகவன் மருங்கினைஞ்சீரடியும்
வருதற்குரித்தென்பர்வான்றமிழ்நாவலர்மற்றொருசார்
கருதிற்றடையேகடையிணைபின்கடைகூழையுமென்
றிரணத்தொடைக்குமொழிவரிடைப்புணர்வென்பதுவே.

இ-கை. ஒருசாரடிக்கும், தொடைக்குமெய்தியதோ ரிலக்கணமுணர்த்து-ற்று - அருகிக்கலியோடகவன் மருங்கினைஞ்சீரடியும் வருதற்குரித்தென்பர்வான்றமிழ்நாவலர்-எ-து-ஒரு சார்கலிப்பாவினுள்ளும், ஆசிரியப்பாவினுள்ளும், ஐஞ்சீரடியு மருகிவரப் பெறுமென்றுசொல்லுவர் புலவர் - எ-று. வ-று. க "அணிகிளர் சிறுபொறியவிர் துத்திமாநாகத்தெருந்தேறித், துணியிரும்பனிமுந்நீர் தொட்டுழந்துமலைந்தனையே,, இக்கலிப்பாவில் முதலடி ஐஞ்சீரடி வந்தவாறு கண்டுகொள்க. ஆ "உமணர்ச்சேர்ந்து கழிந்தமருங்கி னகன்றலை, ஊர்பாழ்த்தன்ன வோமையம்பெருங்காட், டின்றுவென்றீராயின், இனியவோபெரும தமியேற்குமனையே,, இவ்வாசிரியத்துள் முதலடி ஐஞ்சீர் வந்தவாறு கண்டுகொள்க. சிறியகட்பெறினேயென்னு மிணைக்குறள் ஆசிரியப்பாவினுள்ளும் ஐஞ்சீரடிவந்





தநெனக்கொள்க. இவ்வாறே "வெண்டளைவிரவியு மாசிரியவிரவியு,
மைஞ்சீரடியு முளவெனமொழிப,, என்றார் தொல்காப்பியனார். வெண்
பாவினுள் ஐஞ்சீரடி வரப்பெறுமெனக்கொள்க. "ஐஞ்சீரடுத்தலு மறு
டிலமாகலும், வெண்பாயாப்பிற் குரியவல்ல,, என்று நந்தத்தனார் அடி
நூலிலெடுத்தோதினார், மற்றொருசார் கருதிற்கடையே கடையிணைபின்
கடைகூழையுமென் றிரணத்தொடைக்கு மொழிவரிடைப்புணரென்பது
வே-எ-து-ஒருசாராசிரியர் முரண்டொடையைக் கடைமுரணும், கடையி
ணை முரணும், பின்முரணும், கடைக்கூழைமுரணும், இடைப்புணர்மு
ரணுமென்றுவேண்டுவர்-எ-று. இரணத்தொடை யெனினும், பகைத்தொ
டை யெனினும், முரண்டொடையெனினும், ஒக்கும் எனனை "மொழியி
னும் பொருளினு முரணத்தொடுப்பி, னிரணத்தொடையென் றெய்தும்
பெயரே. மறுதலையுரைப்பினும் பகைத்தொடையாகும் என்றாராகலின்.
அவற்றுள் கடைமுரணாவது அடிதோறு மிறுதிச் சீரக்கண்மறுதலைப்பட
த்தொடுப்பது, கடையிணைமுரணாவது-கடையிருசீரக்கண்ணும் மறுதலை
ப்படத்தொடுப்பது, பின்முரணாவது-இரண்டாஞ்சீரக்கண்ணும், நான்கா
ஞ்சீரக்கண்ணும், மறுதலைப்படத்தொடுப்பது, கடைக்கூழை முரணாவ
து-முதற்சீரக்கணின்றியொழிந்த மூன்றுசீர்க்கண்ணும் மறுதலைப்படத்
தொடுப்பது, இடைப்புணர் முரணாவது நடுவிருசீர்க்கண்ணும் மறுதலை
ப்படத்தொடுப்பது. வ-று. ஆ "கயன்மலைப்பன்ன கண்ணிணைகரிதே, க
டமுலைதிவளுந் தனிவடம்வெளிதே, நூலினுண் ணிடைசிறிதே, ஆடமை
த்தோளிக்கல்குலோ பெரிதே,, இஃது அடிதோறுமிறுதிச்சீர்க்கண் மறு
தலைப்படத் தொடுத்தமையாற்கடைமுரண். ஆ "மீனறேர்ந்தருந்திய க
ருங்கால்வெண்குருகு, தேனார்ஞாழல் விரிசினைக்குழூஉம், தண்ணந்துறை
வன் றவிர்ப்பவுந்தவிரான், தேரோகாணலங் காண்டும், பேரோவண்ணமு
ஞ்சிறுநுதற்பெரிதே" இது அடிதோறுங் கடையிருசீர்கண்ணும் மறுத
லைப்படத்தொடுத்தமையால் கடையிணைமுரண். ஆ "சாரலோங்கியதட
ந்நாட்டாழை, கொய்மலர்குவிந்து தண்ணிழல்விரிந்து, தமியேமிருந்த
னயாகநின்றுறுதன், நலனுடைப்பணிமொழி நன்குபலபயிற்றி, வீங்கு
தொடிப்பணைத்தோ ணெகிழத், துறந்தோனல்லனம் மேனியோகிதே"
இது அடிதோறுங் கடைச்சீரும், இரண்டாஞ்சீரும், மறுதலைப்படத்தொ
டுத்தமையாற்பின்முரண். ஆ "காவியங்கருங்கட் செவ்வாய்ப்பைந்தொ
டி, பூவிரிசுரிமென்கூந்தலும், வேய்புரைதோளு மணங்குமா லெமக்கே,,
இதுமுதற்சீரொழிந்த மூன்றுசீரும் மறுதலைப்படத் தொடுத்தமையால்
கடைக்கூழைமுரண். ஆ "போதவிழ்குறிஞ்சி நெடுந்தண்மால்வரைக,
கொதைதயிற்றாழ்ந்த வோங்கல்வெள்ளருவி, கார்தளஞ் செங்குலைப்பகந்

கூட்தாளி, வேரல்விரிமலர் முகையொடுவிரைஇப், பெருமலைச்சிறா நிழித நூலகைவர்ந், தின்னுவாயினினியோர்மாட்டே,, இஃதிடையிருசீரும் மறுதலைபடத் தொடுத்தமையர் லிடைப்புணர்மூரண்.—இவ்வாறுசொன்னுக் கையுணர்முதலாகிய வாசிரியமோனைகொள்க. இனி இரண்டதொடைக்கு மென்றவுமையால் ஒழிந்தமோனை, இடைப்பு, எதுகை, அளபெடையென்னுந் தொடை நான்கிற்றுமிவ்வாறே யொட்டிக்கொள்க. அவை கூடிவழங்குமாறு. கடைமோனை, கடையிணைமோனை, பின்மோனை, கடைக்கூழைமோனை," இடைப்புணர்மோனை-எ-ம்-கடையியைபு, கடையிணையியைபு, பினனியைபு, கடைச்கூழையியைபு, இடைப்புணரியைபு எ-ம்-கடையெதுகை, கடையிணையெதுகை, பின்னெதுகை, கடைக்கூழையெதுகை, இடைப்புணரெதுகை-எ-ம்-கடையளபெடை, கடையிணையளபெடை, பின்னளபெடை, கடைக்கூழையளபெடை, இடைப்புணரளபெடை-எ-ம்-கண்டுகொள்க. இவற்றிற் கிலக்கியம்யாப் பருங்கல விருத்தியுட்கண்டுகொள்க. (ரு)

வருக்கநெடிலினம்வந்தாலெதுகையுமோனையுமென்
றுருக்கபெயரானுரைக்கப்படுமுயிராசிடையிட்
டிருக்குமொருசாரிரண்டடிமூன்றுமெழுத்துமொன்றி
நிரக்குமெதுகையென்றுறுஞ்சிறப்பிலநேரிழையே.

இ-கை. ஒருசாரெதுகைக்கும் மோனைக்குமெய்தியதோரிலக்கண முணர்த்து-ற்று வருக்கநெடிலினம் வந்தாலெதுகையு மோனையுமென் றுருக்கப் பெயரா னுரைக்கப்படும் எ-து-வருக்கவெழுத்தும், நெடிலெழுத்தும், இனவெழுத்தும், எதுகையும், மோனையுமாயவந்தால் அவற்றைவருக்கவெதுகை, நெடிலெதுகை, இனவெதுகை, எ-ம் வருக்கமோனை, நெடின்மோனை, இனமோனை, எ-ம். பெயரிட்டுவழங்கப்படும்-எ-று. (வி-று) வெ. "நீடிணர்க்கொம்பர்க் குயிலாலத்தூதிப், பாடுமவண்டஞ்சியகலும்பருவத்துத், தொடார்தொடி நெகிழ்த்தாருள்ளார் படரொல்லாப், பாடமைசேக்கையுட்கண்,, இது-டகரமெய் வருக்கவெதுகை. "அறத்தாறிதுவென—னிடை,, இது றகரமெய்வருக்கவெதுகை. "ஆவாவென்றே ஒருசாரார்,, என்பதிரண்டா மெழுத்தொன்றுதாயினும் இரண்டாமெழுத்தின்மேலேறிய நெடிலாப் புமைநோக்கி நெடிலெதுகையென்று வழங்கப்படும். இனி இனவெதுகை மூன்றுவகைப்படும், வல்லினவெதுகையு மெல்லினவெதுகையும், இடையினவெதுகையுமென, வ - று. வெம்தக்கார்தகவிலா ரென்பதவரவ', ரெசசத்தாற் காணப்படும்,, இதுவல்லினவெதுகை. வெ. "அன்பினு மார்வமுடைமைய துவீனு நண்பென்னு

காடாச்சிறப்பு, இது-மெல்லினவெதுகை. வெ. "எல்லாவிளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப் பொய்யாவிளக்கேவிளக்கு,, இது இடையினவெதுகை. வருக்கமோனைமுதலாகிய மூன்றும்வருமாறு, ஆ "பகலேபல்பூங்கானற்கிள்ளையோப்பியும், பாசிலைக்குளவியொடு கூதாளம்விரைஇப், பின்னுப்பிணியவிழ்ந்த நன்னெடுங்கூந்தல், பீரங்கப்பெய்து தேம்படத்திருகிப், பூனையீரோதி செய்குறிகைசைஇப், பூந்தார்மார்ப புனத்துட்டோன்றிப், பெருவரையடுகத் தொருவேலேந்திப், பேயுமறியாமா வழங்குபெருங்காட்டுப், பைங்கணுழுவைப் பகுபகைவெரீஇப், பொங்குசினந்தணியாப் பூநுதலொருத்தல், போகாதுவழங்கு மாரிருணடுநாள், பௌவத்தன்னபாயிருணீந்தி, இப்பொழுதுவருகுவையாயின், நற்றூர்மார்பநீண்டலேங்கதுப்பே,, இதுபகரமெய்வருக்கமோனை "ஆர்கலியுலகத்து - ஒழுக்கமுடைமை.,, இது முதலெழுத்தொன்றாதாயினும், முதலெழுத்தின் மேலேறிய நெடிலொப்புமைநோக்கி நெடின்மோனையென்று வழங்கப்படும். இனி இனமோனை மூன்று வகைப்படும். வல்லினமோனையும், மெல்லினமோனையும், இடையினமோனையுமென. வ-று. ஆ "கயலேருண்கண்கலுழாளும், சுடர்புரைதிருநுதல்பசலைபாயத், திருந்திழையமைத்தோளரும்படருழப்பப், போகல்வாழியையபூத்த, கொழுங்கொடி யணிமலர்தயங்கப், பெருந்தண்வாடைவருஉம்பொழுதே,, இஃதெல்லாவடியுமுதற்கண்ணே வல்லெழுத்துவந்தமையான் வல்லினமோனை. மெல்லினமோனையும், இடையினமோனையும் வந்தவழிக்கண்டுகொள்க. என்னை "வருக்கநெடிலினம் வனையாராண்டே, நெடியபிறவுமினத்திறலாகும்,, என்றார் பிறருமெனக்கொள்க. ஒருகதப்பெயரானென்று சிறப்பித்ததனால் ஒருசாராசிரியர் தலையாகெதுகை, இடையாகெதுகை, கடையாகெதுகை, என்றும், தலையாகுமோனை, இடையாகுமோனை, கடையாகுமோனை, என்றும், வேண்டுவரெனக்கொள்க. என்னை. "சீர்முழுதொன்றிற் றலையாகெதுகை, யோரெழுத்தொன்றி னிடைகடைபிறவே.,, என்றாராகலின் இச்சூத்திரத்தான் மோனைக்கும் இவ்வாறே விரித்துரைத்துக்கொள்க. வ-று. 'சிலைவிலங்கு-போழ்து,, எ-து-தலையாகெதுகை. "அகரமுதல-புலகு,,எ-து-இடையாகெதுகை. "தக்கார்-காணப்படும்,, எ-து-கடையாகெதுகை. வெ. 'பற்றுகபற்றற்றான் பற்றினையப்பற்றைப், பற்றுகபற்றுவிடற்கு,, எ-து. தலையாகுமோனை "மாவும்புள்ளும்,, எ-து-இடையாகுமோனை. "பகலே பல்பூங்கானல்,, எ-து-தலையாகுமோனை "மாவும்புள்ளும்,, எ-து- இடையாகுமோனை. "பகலேபல்பூங்கானல்,, எ-து - கடையாகுமோனை உயிரளபெடையிட்டிருக்கு மொருசாரிரண்டடி மூன்றுமெழுத்துமொன்றி, யிரக்குமெதுகையென்றுலுஞ்சிறப்பில-எ-து-உயிரொதுகை, ஆசெதுகை, இ

டையிட்டெதுகை, இரண்டடிபெதுகை மூன்றாமெழுத்தொன் றெதுகையென்றொருசாரோதுகையு முளவாயினும் பெரியதோர் சிறப்பில்லெனக்கொள்க. சேரிழையே-எ-து-மகரஉமுன்னிலை. வ-று. ஆ. "துனியொடு மயங்கிய தூங்கிருணடுநாள், அணிகிளர்தாரோ யருஞ்சுரநீந்தி, வடியமையெஃகம் வலன்வயினேந்தித், தனியேவருதி நீயெனின், மையிருங் கூந்த லுய்தலோவரிதே,, இஃதிரண்டாமெழுத் தொன்றாதாயினும், இரண்டாமெழுத்தின்மேலேறிய வுயிரொன்றிவந்தமையால் உயிரொதுகை. இனி ஆசெதுகை. ய ர லழ வொற்றுநான்கும் ஆசாய்வருமெனக்கொள்க எனனை "யரலழவென்னு மீரிரண்டொற்றும், வரன்முறைபிறழாது வந்திடையுயிர்ப்பினஃ, தாசிடை யெதுகையென்றறைதல்வேண்டும் "என்றாராகலின்—.வ-று. விரு "காய்மாண்டதெங்கின் பழம்வீழக்கமுகினெற்றிப், பூமாண்டதீந்தேன் றொடைகீறிவருக்கைபோழ்ந்து, தேமாங்கனிசிதறி வாழைப்பழங்கள் சிந்தும், ஏமாங்கதமென் றிசையாற்றிசைபோயதுண்டே,, இதுயகரவொற்றிடை வந்தஆசெதுகை "மாக்கொடியானையுமௌவற்பந்தரும், கார்க்கொடி முல்லையுங் கலந்துமல்லிகைப், பூக்கொடிப்பொதும்ப ருங்கானநாழலும், தூக்கடிகமழ்ந்துதான் றுறக்கமொத்ததே,, இதுரகர வொற்றிடைவந்த ஆசெதுகை. வெ "ஆவே றுருவினவாயினுமாபயந்த, பால்வேறுருவினவல்லவாம், பால்போல், ஒருதன்மைத்தாகு மற நெறியாபோல, உருவுபலகொளலீங்கு,, இதுலகர வொற்றிடைவந்தஆசெதுகை. வெ "அந்தரத்துள்ளே யகங்கைபுறங்கையா, மந்தரமேபோலும்வாழ்க்கை அந்தரத்து, வாழ்கின்றேமென்று மகிழன்மின்வாழ்நாளும், போகின்றபூளையேபோன்று,, இதுழகரவொற்றிடைவந்தஆசெதுகை. "ஆர்கலியுலகத்து,, இது ஆகிடையிட்டுவந்த வல்லினவெதுகை, பிறவும்வந்தவழிககண்டுகொள்க. இடையிட்டெதுகை வருமாறு "தோடாரொல்லிணர் நெகிழநாளு, நெய்தலுண்கண்பைதலுழக்க, வாடாவவ்வரிபுதைஇப் பசலையும். வைகறோறும்பையப்பெருகி நீடாரிவரென நீண்மனங்கொண்டார் கேளார்கொல்லோ காதலர்தோழி - வாடாப்பௌவ வறன்முகந்தெழிலி பருவம்பொய்யாது வலனேர்புவளைஇ ஓடாமலையன்வேலிற்கடிதுமின்னுமிக்கார் மழைக்குரலே இஃதுஅடிதோறும் இடையிட்டுவந்தமையால் இடையிட்டெதுகை. இதுகொல்காப்பியனார்காட்டியப்பாட்டு என்னை. ஏஅவண்ண மிடையிட்டுவந்தவெதுகைத்தாகும். என்றாராகலின். இரண்டடியெதுகைவருமாறு துவைக்குந்துளிமுந்நீர்க்கொற்கைமகளிர் அவைப்பதம்பல்லிற் கழகொவ்வாமுத்தம் மணங்கமழ்தா ரச்சுதன் மண்காக்கும்வேலின், அணங்குமமுதமு மன்னலார்பாடல் இதுமுன் இரண்டடியு மோரொதுகையாய்ப் பின் இரண்டடியெ

யதொடையும் தொடைவிகற்பமும் போலாமை வேறுபடத் தொடுத்த மையான் மருட்செந்தொடை. பிறவுமன்ன. இனிவழியெதுகை வருமாறு. க-றை மண்டலம் பண்டுண்ட நின்றோர் வரகுணன் ரெண்டியின் வாய்க்-கண்டலர் தண்டுறைக் கண்டதொன்றுண்டு கனமகர-ருண்டலங் கெண்டையிரண்டொடு தொண்டையுங் கொண்டோர்திங்கள் மண்டல மெண்டலம்புக்கொண்டமுழ வருகின்றதே கொங்குதங்குமுதலாயினவுங்கொள்க. அநுப்பிராசமென்னும் வடமொழியை வழியெதுகையென்பது தமிழ்வழக்கு. இனிவழிமுரண்வருமாறு. விரு செய்யவாய்ப்பசும்பொ னேலைச்சீரடிப்பரவையல்குல் ஐயநுண்மருங்குநோவவடிகளொண்டகுவவுக்கொங்கை வெய்யவாய்த்தண்ணெனீலம் விரிந்தென விலங்கிநீண்ட மையவாமழைக்கட்கூந்தன் மகளிவைவருகவென்றான் க-றை ஒருமால்வரைநின்றிருசுடரோட்டி முந்நீர்க்கிடந்த பெருமானிலனுஞ் சிறுவிலைத்தாவுண்டுபேதையர்கண் பொருமாதவித்தொங் கலெங்கோன் புரவலன்பூம் பொதியிற் கருமாவிழிவெண்பந் செவ்வாய்ப் பசும்பொற் கனங்குழைக் கே" மோனையெதுகையிற்றிரிந்து பாவுமினமும்வாராமை மேற்காட்டிய வற்றுள்ளும், பிறவற்றுள்ளுங் கண்டுகொள்க.

சுருங்கிற்றுமூன்றடியேனைத்தரவிருமூன்றடியே
தரங்கக்கும்வண்ணகக்குந்தரவாவதுதாழிசைப்பா
சுருங்கிற்றிரண்டடியோக்கமிரட்டிசுரும்பிமிரும்
நரங்கக்குழலாய சுருங்குந்தரவினிற்றாழிசையே.

இ-கை. தரவுதாழிசைகட்கு அடிவரையறையாமாறுணர்த்து-ற்று. சுருங்கிற்று மூன்றடியேனைத்தரவு-எ-து. அம்போதரங்கவொத்தாழிசைக்கலிப்பாவும், வண்ணகவொத்தாழிசைக்கலிப்பாவும், ஒழிந்தல்லாதகலிப்பாவிற்குத் தரவுமூன்றடியே சிறுமை. பெருமைபாடுவோனது பொருண்முடிவுகுறிப்பே வரையறையில்லை. எ-று. இருமூன்றடியே தரங்கக்கும் வண்ணகக்குந் தரவாவது. எ-து. அம்போதரங்கவொத்தாழிசைக்கலிப்பாவிற்கும், வண்ணகவொத்தாழிசைக்கலிப்பாவிற்கும், பெருக்கசுருக்கமில்லை, ஆறடியேதரவாவது. எ-று. சுருங்கிற்றுமூன்றடியேனைத்தரவென்றாராயினும், வெள்ளைக்கிரண்டடியென்னுங் காரிகையுள், கலிப்பாவிற்கு நான்கடிசிறுமைசொன்னமையால் தரவுகொச்சகக்கலிப்பாவிற்கு நான்கடியே சிறுமைவருவதெனக்கொள்க. தாழிசைப்பாசுருங்கிற்றிரண்டடியோக்கமிரட்டி-எ-து. பொதுவகையாற்றாழிசைசொல்லிப் போந்தாராயினும், தாழிசைகட்கிரண்டடி சிறுமை, நான்கடிபெருமை, இடைமூன்றடியானும்வருவது. எ-று. சுரும்பிமிருந்தரங்கக்குழலாய்—எ-து. மக டூமுன்னிலை சுருங்குந்தரவினிற்றாழிசையே-எ-து. தரவடியிற்றாழிசை

யடி சுருங்கிவருவது-எ-று. இவற்றிற்கிலக்கியமேற் காட்டியவற்றுள்ளும் பிறவற்றுள்ளுங்கண்டுகொள்க.

பொருளோடடிமுதனிற்பதுகூனதுவேபொருந்தி
இருள்சேர்விலாவஞ்சியீற்றினுநிற்குமினியொழிந்த
மருடீரவிகாரம்வகையுளிவாழ்த்துவகைவணப்புப்
பொருள்கோள்குறிப்பிசையொப்புங்குறிக்கொள்பொலங்கொடியே.

இ-கை. மேற்சொல்லப்பட்ட பாக்கட்கெல்லா மெய்திய தோரிலக்கணமுணர்த்து-ற்று. பொருளோடடிமுதனிற்பதுகூன். எ-து. அடிமுதற்கட்பாவினது பொருளைத்தழுவித்தனியேநிற்பது கூனெனப்படும். எ-று. அதுவே பொருந்தியிருள்சேர்விலா வஞ்சியீற்றினுநிற்கும். எ-து. அந்கூன் வஞ்சிப்பாவினதடியின் இறுதிக்கண்ணும் நிற்கப்பெறும். எ-று. ஈற்றினுமென்றவும்மையால், வஞ்சிப்பாவினடி நடுவினுங் கூன்வரப்பெறுமெனக்கொள்க. இருள்சேர்விலாவஞ்சியென்று சிறப்பித்தவதனால், வஞ்சியடியின் நடுவும்இறுதியும், அசைகூனாய்வருவது சிறப்புடைத்து, சீர்கூனாய்வரினும், உகரவிறுதிபெற்றிய நேரீற்றியற் சீரயல்லது வாராவெனக்கொள்க. அசைச்சீரொல்லாப்பாவினுள்ளும் அருகியல்லது கூனாய்வாரா தெனக்கொள்க. எனவே வெண்பா, ஆசிரியம், கலியென்னும்மூன்றினிடையு மிறுதியுங்கூன்வரப்பெறாதெனக்கொள்க. என்னை. "அடிமுதற் பொருளைத் தானினிதுகொண்டு, முடியநிற்பது கூனெனமொழிப,, வஞ்சியினிறுதியுமாகுமதுவே, யசைகூனாகு மென்மனார்புலவர்,, என்னை, பல்காயனார். கூனேந்தனிச்சொல்லென்று வழங்குவாருமுளர். எனர்ழ "அடிமுதற்பொருள் பெறவருவது தனிச்சொலஃ, திறுதியும் வஞ்சியுனியலுமென்ப,, என்றாராகலின். கொச்சகக்கலியுள் ஓரடிமுழுதுங் கூனாய்வரப்பெறும், அவை சிறப்பிலவெனக்கொள்க. வ-று. வெ. "உதுக்காண், சுரந்தானாவண்கைச் சுவானமாப்பூதன். பரந்தானாப் பல்புகழ்பாடி. இரந்தார்மாட், டின்மையகல்வதுபோலவிருணீங்க, மின்னுமிமிழ்தேர் மழை,, இவ்வெண்பாவினுள் அடிமுதற்கண் உதுக்காணெனக் கூன்வந்தவாறுகண்டுகொள்க. ஆ "அவரோ. கேடில்விழுப்பொருடரு மார்பாசிலை, வாட்டாவள்ளியங் காடிறந்தோரே, யானே, தோடாரெல்வளை நெகிழவேங்கிப், பாடமைசேக்கையுட் படர்கூர்ந்திசினே, அன்னளளிய ளென்றதுமாமழை, இன்னும்பெய்யமுழங்கி, மின்னுந்தோழியென் னின்னுயிர்குறித்தே. என இவ்வாசிரியப்பாவின் அடிமுதற்கண் - அவரோ-எ-ம்- யானே-எ-ம். கூன்வந்தவாறுகண்டுகொள்க. க. "உலகினுள், பெருந்தகையார் பெருந்தகைமை பிறழாவேபிறழினும், இருந்தகைய விறுவரைமேலெரிபோலச் சுடர்விடுமே, சிறுந்தகையார் சிறுதகைமை சிறப்பெனிறு

ம் பிறவின்றி, உறுதகைமைபுலகினுங் கோசெராப்பாகித்தோன்றுவே" இக்கலிப்பாவினுள், அடிமுதற்கண் உலகினுளெனக் கூன்வந்தவாறு கண்டுகொள்க. வ. "உலகே, முற்கொடுத்தார் பிற்கொளவும், பிற்கொடுத்தார் முற்கொளவும், முறைநிவழியொழுகுமென்ப, அதனால், நற்றிற நாடு தன்மை, பற்றறயாவையும் பரிவறத்துறந்தே.—இவ்வஞ்சிப்பாவினுள் அடிமுதற்கண் உலகேயெனச் சீர் கூனாய்வந்தவாறும், "மாவழங்கலின் மயக்குற்றனவழி,, என இவ்வஞ்சியடியி னிறுதிக்கண் வழியென, அசை கூனாய் வந்தவாறும், "கலங்கழாலிததுறை சலக்குற்றன,, என இவ்வஞ்சியடியி டைவிற்றுறையென, அசைகூனாய்வந்தவாறுங் கண்டுகொள்க. "தேரோடத் துகள்கெழுமினதெருவு,, இவ்வஞ்சியடியின திறுதிக்கட்டெருவு என வுகரவிறுதியாகிய இயற்சீர் கூனாயினவாறுகண்டுகொள் ச. காமர் கடும்புனலென்னுங், கொடிக்கலியுட் சிறுகுடியீரோ சிறுகுடியீரோ. எனவேவாரடியால், கூன்வந்தவாறுகாண்க- பிறவுமன்ன. இனியொழிந்த மருஉவிகாரம் வகையுளிவாழ்த்து வசைவனப்புப் பொருள் கோள் குறிப்பிசையொப்புங் குறிக்கொள் - எ-து - மேலெழுத்தசைசீர்பந்த மடிதொடை பாவினங்கூறுவனென் றதிகாரம்பாரித்த காரிகையுள் ஓதப்படாத யாப்புறுப்பாய் மயக்கந்தீர வகுக்கப்பட்ட விகாரமும், வகையுளியும், வாழ்த்தும், வசையும், வனப்பும், பொருளும், பொருள்கோளும், குறிப்பிசையும், செய்யுளொப்புமையு மாமாறு உபதேச முறைமையாலுணர்க.- எ-று. பொலங்கொடியே- எ-து - மகடூஉமுன்னிலை. அவற்றுள்-விகாரம் அறுவகைப்படும், வலித்தலும், மெலித்தலும், விரித்தலும், தொகுத்தலும், நீட்டலும், குறுக்கலுமென. என்னை. "அந்நாற்சொல்லுந் தொடுக்குங்காலை, வலிக்கும்வழிவலித்தலு மெலிக்கும்வழிமெலித்தலும், விரிக்கும்வழிவிரித்தலுந், தொகுக்கும்வழி தொகுத்தலும், நீட்டும்வழி நீட்டலுங், குறுக்கும்வழி குறுக்கலும், நாட்டல்வலிய வென்மனார்புலவர்,, என்றார் தொல்காப்பியனார். வ-று. "குறுந்தாட்பூதங்சுமந்த, வறக்கதிராழியெம் மண்ணலைத்தொழுமே.,, இதனுள் குறுந்தாளெனற்பாலதனைக் குறுந்தாளென வலிக்கும்வழி வலித்தவாறும், "தண்டையினக்கிளி ரடிவோள்பண்டைய ளல்லண்மாநீனுக்கினளே., இதனுள், தட்டையெனற் பாலதனைத் தண்டையெனமெலிக்கும்வழி மெலித்தவாறும். வெ. "வெண்மணலெக்கர் விரிதிரைதந்தநீர், கண்ணுடி மண்டிலத்து தாமி, ஒத்திழியும், தண்ணந்துறைவர் தகவிலரே தற்சேர்ந்தார், வண்ணங்களை பபிழியாதார்,, இதனுள் தணடுறைவ னெனற்பாலதனைத், தண்ணந்துறைவரென விரிக்கும்வழி விரித்தவாறும். வெ. "பூத்தாட்புறவிற் பூமைதில்கைாார், காத்தலிற் ராவல ரேனை யார், பார்த்துருர்,வே

யாறுசோழவளநாடென்ப,, என்றாராகலின். திரிசொல்லாவன - அடுக்கல்,
பிறங்கல், ஓங்கல் விலங்கல், விண்டு, குவடெனவிவை, மலை யென்னும்
ஒருபொருள் குறித்தவேறுசொல். உந்தியென்பது - ஆற்றிடைக் குறை
யும், கொப்பூழ், மரம், தேருருளும், யாழ்நரம்பின் தோற்றுறுப்பும், எனுமிவை
வேறுபொருள்குறித்த ஒருசொல் என்னை "ஒருபொருள்குறித்த வேறு
சொல்லாகியும், வேறுபொருள்குறித்த வொருசொல்லாகியு, மிருபாற்
றென்பதிரிசொற்கிளவி,, என்றாராகலின். திசைச்சொல்லாவன, மயிலை
மஞ்ஞையென்றும், கிளியைத் தத்தையென்றும் தாயைத்தள்ளையென்று
ம், நாயை ஞமலியென்றும்- வழங்குமவையாம். என்னை "செந்தமிழ்சே
ர்ந்த பன்னிருநிலத்தினும், தங்குறிப்பினவே திசைச்சொற்கிளவி,, என்று
ராகலின். செந்தமிழ்நிலத்தைச்சேர்ந்த பன்னிருகொடுந்தமிழ் நிலமாவ
ன, வெ "தென்பாண்டி குட்டங் குடங்கற்கா வேண்பூழி, பன்றியருவா
வதன் வடக்கு, நன்றாய, சீதமலாடு புனனாடு செந்தமிழ்சேர், ஏதமில்பன்னி
ருநாட்டெண். இதைவிரித்துணர்ந்துகொள்க. வடசொல்லாவன, கு
ங்குமம், மூலம், சங்கு, சந்தனம், என்பனவாம் என்னை "வடசொற்கி
ளவி வடவெழுத்தொரீஇ, எழுத்தொடு புணர்ந்தசொல்லாகும்மே — சி
தைந்தனவரினு மியைந்தனவரையார்,, என்றார்தொல்காப்பியனார். வகை
யுளி-எ-து-முன்னும்பின்னும், அசைமுதலாகிய உறுப்புகள் நிற்புழி யறி
ந்து குற்றப்படாமல் வண்ணமறுத்தலெனக் கொள்க. என்னை-வெ "அ
ருமேனோர்க்கு நீராரசைசீரடிக்கட், பொருளோர்க்காதோசையைநோக்கி, மரு
ணீக்கிக், கூட்டவுங் கூறபா தலரவுங் கொள்வடியறல், வாய்ந்தவகையுளி
யின்மாண்பு,, என்றாராகலின். இ-று, வெ- "கடியாபூங்கோதை கடா
யினான்றீண்டேர், சிறியார்தஞ்சிற்றில் சிதைத்து,, இதனை-கடிவார்- எ-ம்
பூங்கோதை-எ-ம்-கடாயினான்-எ-ம்-அலகிடின். ஆசிரியத்தளையும், கலித்
தளையுந்தட்டு, வெள்ளைத்தன்மை குன்றுமாதலால் - கடியார்பூவென்று
ட்சீர்மாங்காயாகவும், கோதையென்றுசதமாவாகவும், கடாயினானென்று,
கருவிளமாகவும் அலகிட்டுக்கொள்க. வெ "மலர்மிசையேகினான் மா
ணடிசேர்ந்தார், நிலமிசைநீடுவாழ்வார்,, இதனைநிலமிசை-எ-ம்-நீடு-எ-ம்-
வாழ்வார்-எ-ம்-அலகிடின் ஆசிரியத்தளைதட்டு, வெண்பாவினிறுதிக்க
ண் அசைச்சீராகற்பாலது இயற்சீராய்,நிரில் வெள்ளைக்கோரசைச் சீரு
மொழிசேர்பிறப்புமொண்காசுமிற்ற சீருடைச்சிந்தடியே முடிவா மென்
னும், இலக்கணத்தோடு மாறுபடுமாதலின் நிலமிசை எனக்கருவிளமாக
வும், நீடுவாழ் எனக்கூவிளமாகவும்- வார்-என நாளென்னும். நேரசை
ச்சீராகவும் அலகிட்டுக்கொள்க. வெ "பாம்நோக்குமாடுநோக்கும் பண்டு
தாங் கொண்டவர்க்கும் ஊடுநோக்கும் கூடுநோக்குமொத்தலால்- நீடுநீர்

கல்வய லூர நறுஞ்சாந்தணியகலம் புல்லலினூடலினிது,, இதனுள்-கெர நகரங்கள் பிரிந்திசைத்தனவாயினும்- இரண்டிணையுங்கூட்டி நிரையசையாக அலகிடச்சிருந்தலேயுஞ் சினையாவாம். அல்லாவிடின்- நாலசைச்சீராய் வண்ணமழிந்து ஓசையுண்ணறுகெடும்- பிறவுமன்ன, வாழ்த்துஇருவகைப்படும் மெய்வாழ்த்தும்- இருபுறவாழ்த்துமென - வ - று. வெ" "கார்நறுநீலங் கடிக்கயத்துவைகலும்- நீர்நிலைநின்றபயன்கொலோ- கூர்நுனைவேய்- வண்டிருக்கருக்கதார் வரமான்வழுதியார்- கொண்டிருக்கப்பெற்றகுணம்,, இதுமெய்வாழ்த்து வெ. "பண்டுமொருகாற்றன்னைநின்தொடியைக்கோட்பட்டு - வெங்கடம் வில்லேற்றிக்கொண் டிழந்தான்,, தென்களந்தைப் பூமாண்டிருமகளுக் கின்னும்புலம்புமால் வாமான்றேர் வையையார்கோ. ,, இஃதிருபுறவாழ்த்து. வசையும் இருவகைப்படும்- மெய்வசையும் இருபுறவசையுமென. வ-று. வெ- "தந்தையிலேச்சும்' டன்றுப் தொழிலிதான்பார்ப்பான் எந்தைகதிெங்ஙனம்பட்டது கொல்- முந்தை அவியுணவினர்தெரியினுவதாங்கொல்லோ- கவிகண்ணனூர்தம் பிறப்பு" இது மெய்வசை. வெ. படையொடு போகாது நின்றெறிந்தானென்றும் கொடையொடு நல்லார்கட்டாழ்த்தான் படையொடு- பாடிவழங்குந்தெருவெல்லாந்தான் சென்று கோடிவழங்குமகன்,, இஃதிருபுறவசை. இனிவனப்பு எட்டுவகைப்படும் அம்மை அழகு தொன்மை தோல் விருந்து இயைபு புலன் இழைபு என. என்னை அம்மையழகு தொன்மை தோல்விருந் தியைபுபுலனிழைபெனவனப்பெட்டே. என்றாராகலின். அவற்றுள் - அம்மையாவது, சிலவாய் மெல்லியவாய சொற்களால் ஒள்ளியவாய பொருண்மேற் சிலவடியாற் சொல்லியது என்னை. "சின்மென்மொழியாற் சீர்புனைந்தியாப்பி, னம்மைதானே -- டிகிமிர்வின்றே.,, என்றாராகலின். வ-று. வெ. "அறிவினுறுகுவதுண்டோ பிறிதினேய் தன்னேய்போற் போற்றாக்கடை,, அழகென்பது, செய்யுட்சொல்லாகிய திரிசொற்களானேசை யினிபவாகப் புணர்க்கப்பட்டது. என்னை. "செய்யுண்மொழியாற் சீர்புனைந்தியாப்பி னவ்வகைதானே யழகெனப்படுமே,, என்றாராகலின். வ-று. ஆ. "துணியிரும்பௌவங்குறையவாங்கி, அணிகிளரடுக்கன் முற்றியவெழிலி, காலொடுமயங்கிய கனைஇருணடுநாள், யாங்குவந்தனையோ வோங்கல்வெற்ப, நெடுவரைமருங்கிற் பாம்பெனவிழிதரும், கடுவரற் கலுழிநீந்தி, வல்லியம்வழங்குங் கல்லதர்நெறியே,, தொன்மை-எ-து- பழையதாகி நிகழ்ந்தபெற்றிபுனைக்கப்படுவது. என்னை. "தொன்மைதானே, யுரையொடுபுணர்ந்த பழமைமேற்றே,, என்றாராகலின். வ-று. "செறிதொடியுவகைகேளாய் செஞ்சுடர்த்தெறுகதிர்ச்செல்வன்,, என்பதூஉம், பாரதம், காங்

தம் போல்வனவுங்கொள்க. தோல்-எ-து-இழுமென்னு மெல்லியவாகி ய சொற்களால் விழுமியவாய்க் கிடப்பனவும், எல்லாச்சொற்களானும், பலவடியாய்க் கிடப்பனவுமென விருதிறத்தவாம். என்னை. "இழுமெ னுமொழியால் விழுமியது நுவலினும், பரந்தமொழியா லடிநிமிர்ந்தொழு கினும், தோலெனமொழிப தொன்னெறிப்புலவர்,, என்றாராகலின்.வ-று. "பாயிருள்பரப்பகங்குறையப்பாம்பின், ஆயிரமணிவிளக் கழலுஞ்சேக் கைத், துணிதருவெள்ளந் துயில்புடைபெயர்க்கும், ஒளியோன்காஞ்சி யெனிதெனக்கூறின், இம்மையிலலை, மறுமையில்லை, நீமையில்லை, செய் வோரில்லை, செயப்படுபொருளில்லை, அறிவோரியாரஃ திறுவழியிறுகென,, இது மாக்கண்டேயனாகாஞ்சி-இஃதிழுமெனு மொழியால் விழுமியது நுவன்றது, "நிரும்மைதலைஇய-செனறவாறே,, இதுபரந்தமொழியாலடி நிமிர்ந்தொழுகியது.—விருந்து-எ-து-புதியவற்றின்மேற்று அஃதிப்பொ ழுதுள்ளாரையாப்பாடுவது. என்னை. "விருந்துதானே, புதியதுபுனைதந் யாப்பின்மேற்றே,, என்றாராகலின் அவை வந்தவழிக் கண்டுகொள்க. இயைபு-எ-து-ஞ ண ந ம ன ய ர ல வ ழ ள வென்னும் பதினொரு பு ள்ளியு மீறாகவந்தபாட்டு. என்னை. ஞகாரமுதலா ளகரவீற்றுப், புள்ளி யிறுதியியைபெனமொழிப.,, என்றாராகலின். அவையும் வந்தவழிக்க ண்டுகொள்க.—புலன்-எ-து-இயறசொல்லாற் பொருடோன்றச் சொல்ல ப்படுவது. என்னை. "தெரிந்தமொழியாற் செவ்விதிற்கிளந்து - தேர்தல் வேண்டாது குறித்ததுதோன்றிற் - புலனெனமொழிப புலனுணர்ந்தோ ரே.,, என்றாராகலின். வ-று. "பார்க்கடன்முகந்த பருவக்கொண்மூ- வார்சசெறிமுரசின் முழங்கியொன்னார் - மலைமுற்றின்றே வயங்குதுளி சிதறிச் - சென்றவடிருமுகங் காணக்கடுந்தேர் - இன்றுசெலக்கடவுமதி பாகவெறுக்காண் - மாவொடுபுணர்ந்தமாஅல்போல - இரும்பிடி யுழைய தாகப் - பெருங்காடுமடுத்த காமா நனிறே,,—இழைபு-எ-து-வலலொறறி யாதுநீண்டாது செய்யுளியலுடையார் எழுதநெணணி அடிவகுக்கப்ப ட்ட குறளடிமுதலாடப் பதினேழுநிலத் தைந்தடியு முறையானே யுடை த்தாய் ஓங்கிய சொற்களால் வருவது. என்னை. "ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத்தடக்காது - குறளடி முதலா வைந்தடிகாறு - மோங்கியமொ ழியா னுங்கணமொழியி - னிழைபினிலக்கணமியைந்ததாகும்.,, என்றுரா கன். செய்யுளியலுடையார் நாற்சீரடிதன்னையே - நான்கெழுத்துமுத லூ வாறெழுத்தின்காறும் - உயர்ந்தமூன்றடியுங் குறளடியென்றும் - ஏ ழெழுத்துமுதலா ஒன்பதெழுத்தின்காறும் - உயர்ந்த மூன்றடியுஞ் - சிந் தடியென்றும் - பத்தெழுத்துமுதலாப் பதினொன்கெழுததின்காறும் - உ யர்ந்த ஐந்தடியும் - அளவடியென்றும் - பதினைந்தெழுத்து முதலாப் ப

றும் பூட்டுவிற்பொருள்கோளும் புனல்யாற்றுப் பொருள்கோளும் அளை மறிபாப்புப்பொருள்கோளும் தாப்பிசைப்பொருள்கோளும் கொண்டு கூட்டுப் பொருள்கோளுமென இவற்றுள் நிரனிறை யிரண்டுவகைப்படும் பெயர்நிரனிறையும் வினைநிரனிறையுமென. அவற்றுள் பெயர்நிரனிறை வருமாறு. வெ (கொடிகுவளை கொட்டைநுசுப்புண்கண்மேனி, மதிபவள மூத்தமுகம்வாயமுறுவல் பிடிபிணை மஞ்ஞைநடைநோக்குச்சாயல் வடிவினளேவஞ்சிமகள்) இனிவினைநிரனிறைவருமாறு. (காதுசேர் தாழ் குழையாம்கன்னித்துறைசேர்ப்ப போதுசேர்தார்மார்பபோர்ச் செழிய நீதியால் மண்ணமிர்தமங்கையர்தோண்மாற்றாரையேற்றார்க்கு நுண்ணி யவாயபொருள்) எ-ம-வெ. (அடல்வேன்மாநோக்கின் முகங்கண்டே, உட்லும்மிரிந்தோடுபு மலரும்பார்க்கும கடலுணகனையிருளு மாம்பலும் பாம்பும் தடமதியமாமென்றுதாம்) இனிமுறைநிரனிறை எதிர்நிரனிறை மயக்கநிரனிறை பலகையெண்ணிரனிறை குறையெண்ணிரனிறை என் றுவேண்டுவாருமுளர். அவற்றுள், அடிநிரனிறைவருமாறு-விரு· (கூற்றுவனைவின்மதனையரசகாகோவைக் கூனிலவைக்குஞ்சரத்தை யிஞ்சி மூன்றை ஏற்றுலகின்புறவுருவ மாளத் தோள்களிறவெறிபப விமையப் பெணவெருவவேவக காற்றேழிலாயனத்தால்னவிரலாற்கற்றைக் கதிர் முடியாறகர நலத்தாறகணையாற்பின்னும் ஊற்றழியவுதைத்துரிததுநெரி தந்சசுடி யுர்தெரித்தானவனெமமை யுடையகோவே) சுண்ணமொழி மாற்று-வெ. (சுரையாழ வம்மிதப்பவன்யானையைய யானைக்குநீத்து முயற் குநிலையெனப கானகநாடன்சுனை) இதனுள-சுரையென்பதனோடு மிகப்ப தென்பது பொருள்கொள்ளவும். அம்மியெனபதனோடு ஆழவென்பது பொருளகொள்ளவும யானையென்பதனோடு நிலையென்பது பொருள்கொ ள்ளவும முயலெனபதனோடு நீத்தென்பது பொருள்கொள்ளவும் வந்த மையாற்சுண்ணமொழிமாற்று. இனி அடிமறிமொழிமாறறு. (சூரல்ப மபிப நீவரலாறே) எனனும் ஆசிரியம்வேண்டிடத்தோரடியான் முதலாகச் சொன்னாலும ஓசையும் பொருளும் பிழையாது வந்தமையாலடிமறிமொ மாற்று —இனி அடிமொழிமாற்று-வெ. (ஆலததுமேலகுவளை குளத்துள வாலினெடியகுரங்கு)—என்பதனுள ஆலத்துமேலகுரங்குகுளத்துள கு வளையென்று இரண்டடியிலமொழிமாற்றிப் பொருள் கொண்டமையால் அடிமொழிமாற்று. இனிப்பூட்டு விற்பொருளகோள்-வெ. (திறந்திடுமி ன்றீயவைபிற்காண்டுமாதர் இறந்துபடிற்பெரிதாமேதம் உறந்தையாகோ ன-தண்ணாரமாாபிற்றமிழர்பெருமானைக் கண்ணாரக்காணக்கதவு) இதனு ள திறந்திடுமின் என்பதனோடு கமவு-எ-து- நோக்குடைததாய்ப்பொரு ளகொண்டமையாற் பூட்டுவிற்பொருள்கோள் — இனிப்புனல் யாற்றுப்

பொருள்கோள்வெ- (அலைப்பான்பிறி துயிரையாக்கலுங்குற்றம் விலைப்பாலிற்கொண்டூன்மிசைதலுங்குற்றம் சொலற்பாலவல்லாதசொல்லலுங்குற்றம் கொலைப்பாலுங்குற்றமேயாம்) இஃதடிதோறும் பொருளற்றுவந்தமையாற்புனல்யாற்றுப்பொருள்கோள். இனியளைமறிபாப்புப்பொருள்கோள்-விரு. (தாழ்ந்தவுணர்வினராந்தாளுடைந்து தண்டூன்றித் தளார்தாமும் சூழ்ந்தவினையாக்கைசுடவிளிந்துநாற்கதியிற்சுழல்வார்தாமும் வீழ்ந்தபிணிநலியமுன் செய்தவினையென்றே முனிவார்தாமும் வாழ்ந்தபொழுதினேவானெய்துநெறிமுன்னி முயலாதாரே.) இதனுள்வாழ்ந்தபொழுதினே வானெய்துநெறிமுன்னிமுயலாதாரென்னு மிறுதிச்செல் இடையு முதலுஞ்சென்று பொருள்கொண்டமையால் அளைமறி பாப்புப்பொருள்கோள். — இனித்தாப்பிசைப்பொருள்கோள்- வெ. (உண்ணாமையுள்ள துயிர்நிலை யூனுண்ண அண்ணாத்தலசெய்யாதளறு) இதனுள் ஊனை யுண்ணாமை யுள்ளதுயிர்நிலை எ-ம- ஊனையுண்ண வண்ணாத்தல் செய்யாதளறு-எ-ம்- நடுநின்ற ஊனென்னுஞ்சொல்முதலும் இறுதியுஞ்சென்று பொருள் கொண்டமையால் தாப்பிசை-ப்பொருள்கோள்— இனிக்கொண்டுகூட்டுப் பொருள்கோள்.—வெ. (தெங்கங்காயபோலத்திரண்டுருண்டபைங்கூந்தல் வெண்கோழிமுட்டையுடைத்தன்னமா பேணி அஞ்சனத்தன்னபசலைதணிவாமே வங்கத்துச்சென்றார்வரின்) இதனுள்-அஞ்சனத்தன்னபைங்கூந்தலெனவும் தெங்கங்காய்போலத்திரண்டுருண்ட வெண்கோழி முட்டையுடைத்தன்னபசலையெனவும் சொற்களைக்கொண்டு கூட்டிப்பொருள்கொண்டமையால் கொண்டுகூட்டுப் பொருள்கோள்.—வெ. (ஆரியமன்னர்பறையினெழுந்தியம்பும் பாரிபறம்பின்மேற்றண்ணுமை காரி, விறன்முள் ளூர்வேங்கைவீ நாறுமென்றோளாள நறுமுள்ளெயிற்றாளலர்) இதனுள்-தண்ணுமைநாணுமோள்-எ-ம-நிறம்வேங்கைவீ-எ-ம்-அலர் ஆரியமன்னர்பறையினெழுந்தியம்பும்-எ-ம- சொற்களைக்கூட்டிப் பொருள்கொண்டமையால் இதுவுங்கொண்டுகூட்டுப்பொருள்கோள். பிறவுமன்ன. இனிக்குறிப்பிசை-எ-து- எழுத்தல்லோசையான்வந்தமுற்கும், ஈளையும், இலதையும், அநுகரணமுமுதலாகவுடைன செய்யுளகத்துவந்தால் அவற்றைச்செய்யுண்டை யழியாமல் அசையும் சீரும், அடியும் தொடையும், பிழையாமல் அலகிட்டு வழங்கப்படுமெனக்கொள்க. வ-று-வெ- ( றலங்கொன்றைமலர்மிலைந்துஃகுவஃ கென்றுதிரியுமிடைமகனே சென்று, மறியாட்டையுண்ணுமல் வெண்ணைகடாவுல்லே, அறியாயோவண்ணக்குமாறு) ஓழிந்தனவும் இடைக்காடனார்பாடிய ஊசிமுறியுட்கண்டுகொள்க-என்னை. (எழுத்தல்லிசையையசைபெற்றிசைத்தனை நிறைக்கவும்படுமெனநேர்ந்திசினோரே) என்றாராகலின். இ

ருபபு-எ-று-மேற்சீரும் தளையும் அடியும் வரையறுக்கப்பட்டவாவும் பாவி ன்மூன்றொன்ன பெற்றியிற்றி ந்து மக்கருங்குறைந்தும் வந்தா லவற்றை யொருபுடையொப்புமைநோக்கி ழிந்தசெய்யுட்களினபாற்படுத்து வழ ங்கப்படும்-எ-று. வ-று. (கோழியுங்கூவினகுக்கில்குரல்காட்டும் தாழியு ணீலதது மலர்ந்தன நோதுமினே ஆழிசூழ் வையத்தெம்நண்ண லடியேத் திக் கூழைநனையக்குடைந்துங் குளிர்புனல் ஊழியுமன்னவா மென்றே லோரெம்பாவாய்) மேல்நாற்சீர்நான்கடியாய் வருவதுகலிவிருத்தமென்று வரையறுததுச்சொன்னார். இஃதைந்தடியான் வந்ததாயினும் ஒருபுடை யொப்புமைநோக்கிக் கலிவிருத்ததின் பாற்படுத்து வழங்கப்படுமெனக் கொள்க. இதனைத்தரவு கொச்சகமெனினுமிழுக்காது. (சுற்றுநீர் சூழ் கிடங்கிற் பொற்றாமரைப்பூம்படப்பைத, தெண்ணீர்நல்வயலூரன் கேண் மை யல்லிருங் கூந்தற்கலராதே) மேல்வஞ்சிப்பாவிற்கு மூன்றடிச்சி றுமை யென்றெடுத்தோதினர். இஃதிரண்டடிச் சிறுமையான் வந்தா யினும் ஒருபுடையொப்புமைநோக்கி வஞ்சிப்பாவின் பாற்படுத்தே வழ ஙகப்படுமெனக்கொள்க. பிறவும்புராணகவிஞராற்பாடப்பட்ட இலக்கி யங்களையும் இவ்விலக்கணத்தா னொருபுடையொப்புமைநோக்கி ஒன்றன் பாற்படுத்து வழங்கப்படுமெனக்கொள்க ஒப்புமென்ற வும்மையால்வண் ணமும் புணர்ந்துரையும், அடியின்றிநடப்பனவும் ஓரடியா னடப்பனவும் பாட்டுமே உரையும் நூலும் மந்திரமும் அங்கதமும் பிசியும் முதுசொல் லும். வாழ்ததுமாமாறும எணாந்துகொள்க.—அவற்றுள் வணண்ம் நூ றுதிறதததனவாம. அவைசொல்லுமாறு தூங்கிசைவண்ணம் ஏந்திசை வணணம அடுகிசைவண்ணம பிரிந்திசைவண்ணம் மயஙகிசைவண்ண மென்னுமிவ்வைந்தினையு முதல்வைத்து அகவல்வண்ணம் ஒழுகிசைவ ணணம் வல்லிசைவண்ணம் மெல்லிசைவணணமென்னு மிந்நான்கினையு ம் இடைவைத்து ... நெடில்வணணம வல்லிசைவண்ண ம மேல்லிசைவணணம இடையிசைவணணம் என்னுமிவ்வைந்தினையுங் கடைவைத்துககூட்டியுதழ நூறுவண்ணமும் பிறக்கும். என்னை-க-றை (தூஙகேந்தடுக்கல் பிரிதன்மயங்கிசை வைத்துப் பின்னும் பாங்கேயகவ லொழுகல் வலிமெலிப்பாற்படுத்திட் டாங்கேகுறினெடில்வல்லின மெல் லினமோடிடையைத தாங்காதுறழ கரத்தாம்வண்ண நூறுந்தலைப்படுமே) என்றாராகலின். அவற்றின்விரியாவன- குறிலகவற்றூங்கிசைவண்ணம் நெடிலகவற்றூங்கிசைவண்ணம வலியகவற்றூங்கிசைவணணம் மெலிய கவற்றூங்கிசைவண்ணம் இடையகவற்றூங்கிசைவண்ணம். எ-ம் குறி லொழுகற்றூங்கிசைவணணம் நெடிலொழுகற்றூங்கிசைவண்ணம் வலி யொழுகற்றூங்கிசைவண்ணம் மெலியொழுகற் றூங்கிசைவண்ணம் இ

டையொழுகற்றூங்கிசைவண்ணம் - எ-ம் குறில்வல்லிசைத்தூங்கிசைவண்ணம் நெடில்வல்லிசைத்தூங்கிசைவண்ணம் வலிவல்லிசைத்தூங்கிசைவண்ணம் மெலிவல்லிசைத்தூங்கிசைவண்ணம் இடைவல்லிசைத்தூங்கிசைவண்ணம்-எ-ம்-குறின்மெல்லிசைத்தூங்கிசைவண்ணம் நெடின்மெல்லிசைத்தூங்கிசைவண்ணம் வலிமெல்லிசைத்தூங்கிசைவண்ணம் மெலிமெல்லிசைத்தூங்கிசைவண்ணம் இடைமெல்லிசைத் தூங்கிசைவண்ணம், எ-ம். தூங்கிசைவண்ணம் (உ-ம்) குறிலகவலேந்திசைவண்ணம் நெடிலகவலேந்திசைவண்ணம் வலியகவலேந்திசைவண்ணம் மெலியகவலேந்திசைவண்ணம் இடையகவலேந்திசைவண்ணம் எ-ம் குறிலொழுகலேந்திசைவண்ணம் நெடிலொழுகலேந்திசைவண்ணம் வலியொழுகலேந்திசைவண்ணம் மெலியொழுகலேந்திசைவண்ணம் இடையொழுகலேந்திசைவண்ணம் எ-ம், குறில்வல்லிசை யேந்திசைவண்ணம் நெடில்வல்லிசையேந்திசைவண்ணம் வலிவல்லிசையேந்திசை வண்ணம் மெலிவல்லிசை யேந்திசைவண்ணம் இடைவல்லிசை யேந்திசைவண்ணம் எ-ம் குறின் மெல்லிசை யேந்திசைவண்ணம் நெடின்மெல்லிசையேந்திசைவண்ணம் வலிமெல்லிசை யேந்திசைவண்ணம் மெலிமெல்லிசை யேந்திசைவண்ணம் இடைமெல்லிசை யேந்திசைவண்ணம் எ-ம் ஏந்திசைவண்ணம் (உ-ம்) குறிலகவலடுக்கிசைவண்ணம் நெடிலகவலடுக்கிசைவண்ணம் வலியகவலடுக்கிசைவண்ணம் மெலியகவலடுக்கிசைவண்ணம் இடையகவலடுக்கிசைவண்ணம் எ-ம் குறிலொழுகலடுக்கிசைவண்ணம் நெடிலொழுகலடுக்கிசைவண்ணம் வலியொழுகலடுக்கிசைவண்ணம் மெலியொழுகலடுக்கிசைவண்ணம் இடையொழுகலடுக்கிசைவண்ணம் எ-ம் குறில்வல்லிசை யடுக்கிசைவண்ணம் நெடில்வல்லிசையடுக்கிசைவண்ணம் வலிவல்லிசை யடுக்கிசைவண்ணம் மெலிவல்லிசை யடுக்கிசைவண்ணம் இடைவல்லிசையடுக்கிசைவண்ணம் எ-ம் குறின்மெல்லிசை யடுக்கிசைவண்ணம் நெடின்மெல்லிசை யடுக்கிசைவண்ணம் வலிமெல்லிசை யடுக்கிசைவண்ணம் மெலிமெல்லிசையடுக்கிசைவண்ணம் இடைமெல்லிசை யடுக்கிசைவண்ணம் எ-ம் அடுக்கிசைவண்ணம் (உ-ம்) குறிலகவற் பிரிந்திசைவண்ணம் நெடிலகவற்பிரிந்திசைவண்ணம் வலியகவற்பிரிந்திசைவண்ணம், மெலியகவற்பிரிந்திசைவண்ணம் இடையகவற்பிரிந்திசைவண்ணம்-எ-ம் குறிலொழுகற் பிரிந்திசைவண்ணம் நெடிலொழுகற்பிரிந்திசை வண்ணம் வலியொழுகற் பிரிந்திசைவண்ணம் மெலியொழுகற் பிரிந்திசைவண்ணம் இடையொழுகற்பிரிந்திசைவண்ணம் எ-ம் குறில்வல்லிசைப் பிரிந்திசைவண்ணம் நெடில்வல்லிசைப்பிரிந்திசைவண்ணம் வலிவல்லிசைப் பிரிந்திசைவண்ணம் மெலிவல்லிசைப் பிரிந்திசைவண்ணம் இடை வல்லிசைப்பி

ரிந்திசைவண்ணம், எ-ம்-குறின்மெல்லிசைப் பிரிந்திசைவண்ணம் நெடின்மெல்லிசைப் பிரிந்திசைவண்ணம் வலிமெல்லிசைப் பிரிந்திசை வண்ணம் மெலிமெல்லிசைப்பிரிந்திசைவண்ணம், இடைமெல்லிசைப் பிரிந்திசைவண்ணம், எ-ம். பிரிந்திசைவண்ணம் (உம்) குறிலகவன்மயங்கிசை வண்ணம், நெடிலகவன்மயங்கிசை வண்ணம், வலியகவன் மயங்கிசை வண்ணம், மெலியகவன்மயங்கிசைவண்ணம், இடையகவன்மயங்கிசைவண்ணம் எ-ம் குறிலொழுகன்மயங்கிசைவண்ணம நெடிலொழுகன்மயங்கிசை வண்ணம் வலியொழுகன்மயங்கிசைவண்ணம், மெலியொழுகன்மயங்கிசை வண்ணம் இடையொழுகன்மயங்கிசைவண்ணம் எ-ம் குறில்வல்லிசை மயங்கிசைவண்ணம் நெடில்வல்லிசை மயங்கிசைவண்ணம், வலிவல்லிசை மயங்கிசை வண்ணம் மெலிமெல்லிசைமயங்கிசை வண்ணம், இடைவல்லிசை மயங்கிசைவண்ணம், எ-ம் குறின்மெல்லிசைமயங்கிசை வண்ணம் நெடின்மெல்லிசை மயங்கிசைவண்ணம், வலிமெல்லிசை மயங்கிசைவண்ணம், மெலிமெல்லிசை மயங்கிசைவண்ணம், இடைமெல்லிசை மயங்கிசை வண்ணம் எ-ம் மயங்கிசைவண்ணம், (உம்) ஆக வண்ணம் நூறு, இவ்வாறுவிரித்துரைத்தாரவிநயனார். இனி, ஆசிரியர்தொல்காப்பியனார்வண்ணம் இருபதென்பர். என்னை (வண்ணந்தாமே நாலைந்தென்ப) அவைதாம், (பாஅ அவண்ணந் தாஅ வண்ணம் வல்லிசைவண்ண மெல்லிசை வண்ணம் மிடைபுய வண்ணமளபெடை வண்ண, நெடுஞ்சீர்வண்ணங் குறுஞ்சீர் வண்ணஞ் சித்திரவண்ண நலிபுவண்ணம் அகப்பாட்டுவண்ணம் புறப்பாட்டு வண்ணம் ஒழுகுவண்ண மொரூஉவண்ண, மெண்ணுவண்ண மகைப்புவண்ணந், தூங்கல்வண்ண மேந்தல்வண்ண, முருட்டுவண்ண முடுகுவண்ணமென் றுங்கவையென் பவறிந்திசி னோரே) என்றாராகலின். அவற்றுள், “ பாஅவண்ணஞ், சொற்சீர்த்தாகி, நூற்பாற்பயிலு நோக்கிற் றென்ப) வ-று. “ அவற்றுள். குற்றெழுத்தென்ப ) எ-ம் “ தாஅ வண்ணமிடையிட்டுவந்த வெதுகைத்தாகும்) வ-று. “ உள்ளார்— காடிறந்தோரே) எ-ம். வல்லிசைவண்ணம் வல்லெழுத்துமிகுமே) வ-று. “ முட்டாட்டாமரைத்-துஞ்சி) எ-ம். மெல்லிசைவண்ண மெல்லெழுத்துமிகுமே வ-று. “ பொன்னினன்னபுன்னை நுண்டாது) எ-ம். இயைபு வண்ணமிடையெழுத்துமிகுமே. வ-று. “ வால்வெள்ளருவிகாமரிசையியம்பவும் நகாள்வல்லுழுவைவிடரினியம்பவும், வாழ்கிருளியம் வகாமிசையுழலவும், வேலொளிவிளக்கினவர்வரின், றோடுதோளிவாழ்கிற்பெயரோ) எ-ம் அளபெடைவண்ணமளபெடைபயிலும். வ-று. “ கண்டனை யெனக்கண்டுகேதகும்) உ-ம், “ நெடுஞ்சீர வண்ணம் நெட்டெழுத்துப் பயிலும்) வ-று. “ மாவாராதே, மாவாராதே) எ-ம. குறுஞ்சீரவண்ணங்குற்றெழு

ருக்கிற்று. (அவாப்போல்கன்றதனல் குன்மேற்சான்றோர் உசர்ப்பேர்ல வுணவேடமருங்குல் உசாவினைப் பேதைகருணைப்பான் பிழைபபிற் பெருகி னுவே கோதைக்கொம்பன்னாள் குயம்) இது சிறியதனைப் பெருக்கிற்று). (பொன்டலிகச்சிபூமலிகூடல் மாரியீகை மணிமாடம்என்னுந தொடக்கத் தனவுமது. இனி அடியின்றிநடப்பன பாட்டுரையும் நூலும் மந்திரமு ம் சங்கோபிசிதமும் முதுசொல்லும் அங்கதமும் வாழ்த்து மென்னுமி வை ஓ டியானும் பலவடியானும் வரப்பெறும். என்னை (செயிர்தீர் செ ய்யுடெரியுங்காலை யடியினீட்டத் தழுருபெற்றியலும். ஓரடியானுமொரோ விடத்தியலும் அவைதாம பாட்டுநூலேமந்திரமபிசியே முது சொல்லங் கமம் வாழ்த்தொடுபிறவு மாகுநவென்ப வறிந்திசினோரே என்றார்) ராகலின இனி நூலாவது மூவகைத்தாய மூவரினடை பெற்றுநால்வகைப் பயதந் தீரப் எழுவகையாசிரியமதவிகற்பத்ததாய்ப் பந்துவகைகுற்றந்தீர்ந்து பத் துவகைக்குணத்ததாய்ப் பதின்மூன்றுவகையானுணபெற்று முப்பத்தி ரண்டு தந்திரவுத்தியோடும் புணாந்த மெனக்கொள்க. அவற்றுள் மூவ கையாவன தந்திரம் சூத்திரம் விருத்தியெனவிவை முதனூல் வழிநூல் சார்புநூலெனினுமமையும் மூவரினடைபெறுதவென்பது அவைமூன்று நடாத்துமாசிரியர்மூவரொடைக் கோள்க நால்வகைப்பயனுவன அறம், பொ ருள், இன்பம், வீடெனவிவை. எழுவகையாசிரியர் மத விகற்பமாவன, உடன்படல மறுத்தல் பிறாதம்மதமேறகொண்டுகளைதல தா அனுடடித் தனுநிறுத்தல் இருவாமாறுபோமொருதலைதுணிதல் பிறர்நூற குற்றங் காட்டல் பிறிதொடுபடா அன்றஅபமங்கொளல் என்னுமிவை. பத்துவ கைக்குற்றமாவன குன்றக்கூறல மிகைபடக்கூறல கூறியதுகூறல மாறு கொளக்கூறல வழூஉச்சொற்புணாத்தல் மயங்கவைத்தல் வெற்றெனத் தொடுத்தல் மற்றொன்றுவிரித்தல சென்றுமேய்த்திறுத்தல நின்று பயனி னமை எனவிவை. பத்துவகைகுணமாவன சுருங்கச் சொலலல விளா ங்கவைத்தல நவின்றோர்க்கினிமை நன்மொழிபுணாத்தல ஓசையுடைமை ஆழமுடைத்தாதல முறையின்வைப்பு உலகமலையாமை விழுமியதுபயத் தல விளங்குநாரணத்ததாகுதல எனவிவை. பதின்மூன்றுவகை யுணா யாவன சூத்திரந்தோற்றல சொலவகுத்தல சொற்பொருளுணர்த்தல வி னுதல விடுத்தல விசேடங்காட்டல உதாரணங்காட்டல ஆசிரியவசனங் காட்டல அதிகாரவரவுகாட்டல தொகுத்துமுடித்லல விரித்துக்காட்டல துணிவுகூறல பயனொடுபுணர்த்தல எனவிவை. முப்பத்திரண்டுதந்தி ரவுத்தியாவன நுதலிப்புகுதல ஓத்துமுறைவைப்பு தொகுத்துச்சுட்டல் வகுத்துக்காட்டல முடித்துக்காட்டல முடிவிடங்கூறல தானெடுத்து மொழிதல பிறன்கோட்கூறல சொற்பொருள் விரித்தல தொடர் சொற்பு

ணர்த்தல் இரட்டுறமொழிதல் ஏதுவின்முடித்தல் ஒப்பின்முடித்தல் மாட்டெறிந்தொழுகல் இறந்ததுவிலக்கல் எதிரதுபோற்றல் முன்மொழிந்துகோடல் பின்னதுநிறுத்தல் விகற்பத்தின்முடித்தல் முடிந்ததுமுடித்தல் உரைத்துமென்றல் உரைத்தாமென்றல் ஒருதலைதுணிதல் எடுத்துக்காட்டல் எடுத்தமொழியினெய்தவைத்தல் இன்னதல்லதிதுவென்மொழிதல் எஞ்சியசொல்லினெய்தக்கூறல் பிறநூன்முடிந்ததுதானுடன்படுதல் தனக்குறிவழக்கிமிகவெடுத்துரைத்தல் சொல்லின்முடிவினப்பொருண்முடித்தல் ஒன்றினமுடித்தறன்னினமுடித்தல் உய்த்துணரவைப்புளனவிவை இவ்வாறுசொன்னா பாடலுமொன்னுமாசிரியனைக்கொள்க தந்திரவுத்தி முப்பத்திரண்டினும் பலவென்பாருமுளர். (அ)

எழுத்துப்பதின்மூன்றிரண்டசைசீர் முப்பதேழ்தளையைந்
திழுக்கிலடிதொடைநாற்பதின்மூன்றைந்துபாவினமூன்
றொழுக்கியவண்ணங்களூறொன்பதொண்பொருள்கோளிருமூ
வழுக்கிலவிகாரமவனப்பெட்டியாப்புள்வகுத்தனவே

இ—கை. இந்நூலுள்வகுத்தபொருளெல்லாந் தொகுத்துணர்த்துற்று. எழுத்துப்பதின்மூன்றாவன குற்றெழுத்து நெட்டெழுத்து உயிரெழுத்து குற்றியலிகரம் குற்றியலுகரம் ஐகாரக்குறுக்கம் ஆய்தம் மெய்யெழுத்து வல்லினம் மெல்லினம் இடையினம் உயிர்மெய் அளபெடை எனவிவை. இரண்டசையாவன நேரசை நிரையசை எனவிவை சீர்முப்பதாவன ஈரசைச்சீர்நான்கும் மூவசைச்சீரெட்டும் நாலசைச்சீர் பதினாறும் ஓரசைச்சீரிரண்டுமென்னிவை. ஏழ்தளையாவன நேரொன்றாசிரியத்தளை நிரையொன்றாசிரியத்தளை இயற்சீர்வெண்டளை வெண்சீர் வெண்டளை ஒன்றிய வஞ்சித்தளை ஒன்றா வஞ்சித்தளை கலித்தளை யென்னிவை ஐந்தடியாவன குறளடி சிந்தடி அளவடி நெடிலடி கழி நெடிலடி யெனவிவை. தொடைநாற்பத்துமூன்றாவன அடிமோனை அடியெதுகை அடிமுரண் அடியியைபு அடியளபெடை அந்தாதித்தொடை இரட்டைத்தொடை செந்தொடையெனக்கிடந்த தொடையும் இணைமோனை முதலாகிய முப்பத்தைந்து தொடைவிகற்பமு மெனவிவை. ஐந்துபாவாவன வெண்பா ஆசிரியப்பா கலிப்பா வஞ்சிப்பா மருட்பா வெனவிவை. இனமூன்றாவன தாழிசை துறை விருத்தமெனவிவை. ஒழுக்கியவண்ணமநூறாவன குறிலகவற்றூங்கிசைவண்ணமுதலாக மேற்காட்டிப்போந்தன. ஒன்பதொண்பொருள்கோளாவன நிரனிறை சுண்ணமொழி மாற்று முதலியன. இருமூவழுக்கில் விகாரமாவன வலிக்குமூவழிமெலித்தன முதலியன. வனப்பெட்டாவன அம்மைமுதலியன. யாப்புள்வகுத்தன வேனா-து யாப்பருங்கலமென்னும் யாப்பிற் சொல்லப்பட்டன வ-று ஏகாரமீ

ற்றமை ஐந்திழுக்கிலடியென்று சிறப்பித்தவதனுல், திணைவழுவும், பா ல்வழுவும், மரபுவழுவும், வினுவழுவும் விடைவழுவும், காலவழுவும், இடவ்ழுவுமென்று சொல்லப்பட்ட ஏழுவழுவும் படாமற்புணர்க்கப்படு மெனக்கொள்க. வழுக்கில்விகாரமென்று சிறப்பித்தவதனுல், எழுத்துக் குற்றம், சொற்குற்றம். பொருட்குற்றம், யாப்புக்குற்றம், அலங்காரக்குற் றம், ஆனந்தக்குற்றமென்னும் ஆறுகுற்றமும்படாமற் புணர்க்கப்படுஞ் செய்யுட்களெனக்கொள்க. அவற்றுள்-எழுத்துக்குற்ற முதலிய ஐந்தும், அவ்வவ்விலக்கணநூல்களா லறிந்துகொள்க. ஆனந்தக்குற்றமாவன. எழுத்துமுதலியதிரிதல். என்னை "எழுத்துநிலைதிரிந்த வெழுத்தானந்த மும்,, சொன்னிலைதிரிந்தசொல்லானந்தமும், பொருணிலைதிரிந்தபொரு ளானந்தமும், யாப்புநிலைதிரிந்த யாப்பானந்தமும், நடைபெறுபுலவர்கா ட்டினரவையே,, என்றுராகலின். அவற்றுள்-எழுத்தானந்தம்வருமாறு- வெ. "ஆழியிழைப்பப்பகல்போமிரவெல்லாம, தோழிதுணையாநதுயர்தீ ரும், வாழி, நறுமாலைதாராய் திரையவோவென்னும், செறுமாலைசென் றடைந்தபோது,, இதனுள்-திரையவோவென்று இயற்பெயரைச் சார்ந் தளபெழுந்தமையால் எழுத்தானந்தம். என்னை "இயற்பெயர்சார்ந்தி யெ ழுத்தளபெழினே, யியற்பாடில்லா வெழுத்தானந்தம்,, என்றுராகலின். சொல்லானந்தம்வருமாறு வெ. "என்னிற்பொலிந்த திவண்முகமென் றெண்ணித், தன்னிற்குறைபடுப்பப்படுப்பான்றண்மதியம், மின்னி, விரிந்தி லங்கு வெண்குடைச் செங்கோல்விசயன், எரிந்திலங்கு வேலினெழும்,, இதனுள்-தலைமகன்மேல் எரிந்ததென்னுஞ் சொற்புணர்ந்தமையால் சொ ல்லானந்தம. என்னை "இயற்பெயர்மருங்கின் மங்கலமழியத், தொழிற் சொற்புணர்ப்பினதுசொல்லானந்தம்,, என்றுராகலின். பிறவுமவந்தவழி கண்டுகொள்க. வெ. "இந்திரனேபோலு மிளஞ்சாத்தனாத்தற்கு, ம ந்தரமேபோன்றிலங்கு மல்லாகம், மந்தரத்தில், தாழருவிபோனறுளது தார்மாலையம்மாலை, ஏழுலகுநாறுமிணர்,, இதனுள்-சாத்தனென்னுங் கீழ் மகனை-அரசனை உவமித்தாற்போல உவமித்தமையால் இறப்ப உயர்ந்த வானந்தவுவமை. வெ - "வள்ளெயிற்றுப்பேழ்வாய் ஞமலிக்குமான்குழா ம், எள்ளியிரிந்தாற்போலெவ்வழியும், வளளற்கு, மாலாக்கடலன்ன ம ண்பரந்தவாட்டானை, மேலாருமேலார்விரைந்து,,—இதனுட் புலியினே டு வமிக்கப்படுகின்ற தலைமகனுகியவீரனேடு நாயை உவமித்தமையால் இறப்பவிழிநதவானந்தவுவமை. என்னை "இறப்பவிழிந்தது மிறப்பவுய ர்ந்தது, மறத்தகைவழீஇய வானந்தவுவமை,, என்றுராகலின். அலங்கா ரக்குற்றமாவது-வெ. "வெண்டிங்கள்போல்நிலங்கு வெண்சங்குசங்கோ

டி யனையுலைக்குதாழைவளர்தோடு, விண்டெடுக்கும், கள்ளரவிஞர்றுங்கி ருங்கழிசூழ் கானகத்தெம், உள்ளாவிவாட்டிமுரு.,, இதனுள, வெண்ணை முன்போலுஞ்சங்கு, சங்குபோலுந்தாழைப்பூவென்று உவமைக்குவமை சொன்னமையால் அடுத்துவாலுவமையென்னும் அலங்காரக்குற்றம் எ ன்னே. "உவமைக்குவமை யில்லெனமொழிப,, என்றுராகலின். இனி எல்லாக்குற்றமுந் தீர்ந்தசெய்யுள்வருமாறு. ஆ "தாமரைபுரையுங் காமர் சேவடி, பவளத்தன்ன மேனித்திகழொளி, குன்றியேய்க்கு முடுக்கைக் குன்றின், நெஞ்சுபகவெறிந்த செஞ்சுடர்நெடுவேற், சேவலங்கொடியோ ன் காப்ப, வேமவைகலெய்தின்றாலுலகே.,,

மூன்றாவது-ஒழிபியல்- முற்றிற்று.

சீரொடுவிட்டிசைமாஞ்சீரியற்றளைசேர்ந்தருகி
வாரடர்கொங்கைவருக்கஞ்சுருங்கிற்றுவான்பொருளும்
சீரியதூங்கேந்தடுக்குசசிறந்தவெழுத்தமன்றே
யாருமொழிபியற்பாட்டின்முதனினைப்பாகுமன்றே.

யாப்பருங்கலக்காரிகை மூலமும், உரையும்முற்றிற்று.

இந்நூலிற்சொல்லாத கட்டளைக்கலிப்பாவுக்கிலக்கணம்.

கு, "நாச்சீர்முன்வரு நாற்சீரடியே, நேரமுத னிரைமுத னிரனிரை யானே, பதினேழொழுத்தும பன்னிரொழுத்து, மியைந்தரையடியாய ந்தம்மிரட்டித், தொத்துநான்கிறுவது கட்டளைககலிபபா,, வ-று. "சொ ல்வினிரிவ ராசைப்பட்டாரொன்று - சொன்னசொற்பொருள் வேறுசொ ன்டையையோ, புல்லுவாரெவலித்தினு மென்றுள்ளம் - பூரிததேயிரு ந்தேன் மட்டமங்கைமீர், செல்லுலாமபொழிற்கூவககருறை- திருவிறகோ லரினுமருளாமையால், அல்லதேதுதிக்ம்பர ரொன்பொரு- ளறையினவண கணராவொன்மட்டுமே,,—இதுநேரசைமுதலாவந்தசெய்யுள். "மதிக ர கேர்முக மாதருயிலிந்து, வாதுசிந்து பகைசெய்வேமனம், கொதிக ரு ருலையாகும்விழுமெழுவ - மேகாட்டி கொள்ளு மதனப்பயலேயே, துதிச கு ம் பாங்கியர்ப்பார்த்துச் செவ்வாய்துடி - துடிகருங்கைவளை சேரும்பின் னியிருர், ததிக்கும்பார்க்குங்கண் டாய்திருச்செந்தில்வாழ் - சந்தனுகல ந்தசுவாமியே,, இது நிரையசைமுதலா வந்த்செய்யுள்.

யாம்பாடத் தான்மகிழ்ந் துண்ணு மன்னே
சிறு சோற்றானு
நனிபல கலத்தன் மன்னே
பெருஞ்சோற் றானும்
நனிபல கலத்தன் மன்னே
என்பொடு தடிபடு வழியெல்லாம்
எமக்கீயு மன்னே
அம்பொடு வேலுழை வழியெல்லாந்
தானிற்கு மன்னே
நரந்த நாறுந் தன்கையாற்
புலவு நாறு மென்றலை தைவருமன்னே
அருங்கலை யிரும்பா ணரகன்மண்டைத் துளைய
இரப்போர் கையுளும் போகிப்
புரப்போர் புன்கண பார்வை சோர
அஞ்சொ னுண் டேர்ச்சிப் புலவர் நாவிற்
சென்றுவீழ்ந் தன்றவன்
திருநிறத் தியங்கிய வேலே
அரசர்க் கெந்தை யாண்டுளன் கொல்லோ
இனிப்பா டுநரு மில்லை
பாடுநர்க் கொன்றீ குநரு மில்லை
பனித்துறைப் பகன்றை நறைக்கொண் மாமலர்
சூடாது வைகி யாங்குப் பிறர்க்கொன்
றீயாது வீயு முயிர்தவப் பலவே.

இஃது இடையிடையே யிருசீரடியு முச்சீரடியுமாய் வந்தமையால் இணைக்குறளாசிரியப்பா. காமருசீரொன்று சிறப்பித்தவதனால் ஆசிரியப்பா நான்கிற்கும் ஏயென்னுமசைச்சொல்லானிறுவது சிறப்புடைத்து, பிறவெழுத்து மீறாய்வரப்பெறுமாயினுமெனக் கொள்க.

சூத்திரம்.

அகவ லிசையன வகவன் மற்றவை
ஏஓஈஆ வென்னெயென் றிறுமே.

என்றார் தொல்காப்பியனார். எல்லாவடியு மொத்து நடைபெறு மாயினிலைமண்டிலம் எ-து எல்லாவடியுந் தம்முள்ளளவொத்து நாற்சீரடியாய்வருவது நிலைமண்டில வாசிரியப்பா எ - து.

நிலைமண்டிலவாசிரியப்பா.

வேரல் வேலி வேர்க்கோட் பலவின்
சார னாட செவ்வியை யாகுமதி
யாரஃ தறிந்திசி னோரே சாரற்
சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கி யாங்கிவள்
உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே.

இஃதெல்லாவடியும் நாற்சீராயளவொத்து வந்தமையால் நிலைமண்டில ஆசிரியப்பா. மண்டிலமெனினும், நிலைமண்டிலமெனினு மொக்கும். நிலைமண்டில ஆசிரியப்பாவிற்கு என்னென்னு மசைச்சொல்லானிறுவது சிறப்புடைத்து மற்றொருசாரொற்றினானும் உயிரினானும், ஈறாய்வரவும் பெறுமெனக்கொள்க.

சூத்திரம்,

ஒத்த வடித்தா யுலையா மரபொடு
நிற்பது தானே நிலைமண் டிலமே
என்னென் கிளவியை யீறாப் பெறுதறு
மன்ன பிறவு மந்த நிலைபெற
நிற்கவும் பெறூஉ நிலைமண் டிலமே.

என்றாராகலின், நடுவாதியந்தத் தடைதருபாதத்தகவ லடிமறி மண்டிலமே எ-து. எல்லாவடியுமுதனடுவிறுதியாக வுச்சரிப்பினு மோசையும் பொருளும் பிழையாதுவருவ தடிமறிமண்டில ஆசிரியப்பா எ - று.

சூத்திரம்.

மனப்படு மடிமுதலாயிறின் மண்டிலம்.
என்ப தியாப்பருங்கலம்.

சூத்திரம்.

உரைப்போற் குறிப்பி னுணர்வகை யன்றி
யிடைப்பான் முதலீறென் றிவைதம்முண்
மதிக்கப் படாதன மண்டில யாப்பே.

என்றார் காக்கைபாடினியார்.

அடிமறிமண்டிலவாசிரியப்பா.

சூரல் பம்பிய சிறுகான் யாறே
சூரர மகளிராரணங் கினரே
வார லெனினே யானஞ் சுவலே
சாரனாட நீவரலாறே.

இஃதெல்லாவடியு முதனடு விறுதியாக வுச்சரிக்க, ஓசையும் பொருளும் பிழையாதுவந்த அடிமறிமண்டில ஆசிரியப்பா.

உதாரண முதனினைப்பு.

நேரிசை யாகு நிலத்தினை மென்ப தீணக்குறட்பா
நீரின் சிறிய நிலைமைய தாநிலை மண்டிலப்பா
வேரலென் றுகும்வினைமலர்க் கோதைவில் லேர்நுதலாய்
சூரல்பம் பென்ப தடிமறி யாகத் துணிந்தனரே.

இவ்வுரைச் சூத்திரக்காரிகையின்வழியே ஆசிரியப்பா நான்கிற்குங் காட்டிய இலக்கியங்களை முதனினைத்துக்கொள்க. (அ)

## ஆசிரியப்பா வினம்.

தருக்கிய ருழிசை மூன்றடி யொப்பன நான்கடியாய்
எருத்தடி நைந்து மிடைமடக் காயு மிடையிடையே
சுருக்கடி யாயுந் துறைபாங் குறைவிற்றல் சீரகவல்
விருத்தங் கழிநெடி ஞன்கொத் திறுவது மெல்லியலே.

ஆசிரியத்தாழிசையும், ஆசிரியத்துறையும், ஆசிரியவிருத்தமு மாமாறுணர்த்து தனுதலிற்று.

தருக்கியருழிசை மூன்றடி யொப்பன எ-று. தருக்கியவென்று சிறப்பித்தவதனல், அவை ஒருபொருண்மேன் மூன்றடுக்கிவருவன சிறப்புடையன தனியேவரப்பெறுமாயினுமெனக் கொள்க.

### சூத்திரம்.

மூன்றடி யொத்த முடிவின வாய்விடி
ஞன்ற வகவற் ருழிசை யாகும்.

என்ப தியாப்பருங்கலம்.

### ஆசிரியத் தாழிசை.

கன்று குணிலாக் கனியுகுத்த மாயவன்
இன்று நம்மானுள் வருமே லவன்வாயிற்
கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழீ

பாம்புகயி றாக்கடல் கடைந்த மாயவன்
ஈங்கு நம்மானுள் வருமேலவன் வாயில்
ஆம்பலந் தீங்குழல் கேளாமோ தோழீ

கொல்லையஞ் சாரற் குருந்தொசித்த மாயவன்
எல்லி நம்மானுள் வருமே லவன்வாயில்
முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழீ.

இவையொரு பொருண்மேன் மூன்றடுக்கிவந்த ஆசிரியத்தாழிசை.

ஆசிரியத் தாழிசை.

வானுற நிமிர்ந்தனை வையக மளந்தனை
பான்மதி விடுத்தனை பல்லுயி ரோம்பினை
நீனிற வண்ண நின்னிணை கழறொழுதனம்.

இது தனியேவந்த ஆசிரியத்தாழிசை, நான்கடியா யெருத்தடி நைந்து மிடைமடக்காயுமிடை யிடையே சுருக்கடியாயுந் துறையாம எ-து, நான்கடியாய் ஈற்றியலடிகுறைந்து வருவனவும், நான்கடியா யீற்றய லடிகுறைந்திட மடக்காய்வருவனவும் நான்கடியா யிடை யிடைகுறைந்து வருவனவும், நான்கடியாயிடையிடைகுறைந் திடை மடக்காய் வருவனவும், ஆரியத்துறை எ-று. நான்கடியா யென்பதனை யெல்லாவற்றினோடுங் கூட்டி யிடைமடக்காயென்பதனை யொருகா லிருதலையுங் கூட்டி மத்திமதீபமாகப் பொருளுரைத்துக்கொள்க. சீர்வரையறுத்திலாமையால் எனைத்துச்சீரானும் அடியாய்வரப் பெறுமெனக் கொள்க.

ஆசிரியத் துறை.

கரைபொரு கான்யாற்றங் கல்லதரெம் முள்ளி வருவிரான்
அரையிருள்யாமத் தடுபுலி யேறஞ்சி யகன்றுபோக
நரையுறு மேறு நுங்கைவேலஞ்சு நும்மை
வரையர மங்கையர் வௌவுதலஞ்சுதும் வாரலையோ.

இது நான்கடியாய் ஈற்றயலடி குறைந்துவந்த ஆசிரியத்துறை.

விலக்கலி னிறுவரை மிசையெறி குறும்பிடை
யிதுவென் னெனவது நோனார் கரவிரவிடைக்
களவுளமது கற்றறோதுங் கற்பன்றே.

இது நான்கடியாய் முதலடியு மூன்றாமடியும் பதினன்கு சீரா யல்லாத வடியிரண்டும் பதினறுசீரா யிடையிடைகுறைந்துவந்த ஆசிரியத்துறை.

ஆசிரியத் துறை.

இரங்குயின் குழவா வின்னிசையாழ் தேனு
அரங்கமணி பொழிலா வாடும்போலு மிளவேனில்
அரங்கமணி பொழிலா வாடுமாயின்
மரங்கொன் மணந்தகன்றார் நெஞ்சமென்செய்த திளவேனில்.

இது நான்கடியா யிடையிடைகுறைந்திடை மடக்காய்வந்த ஆசிரியதுறை.

சூத்திரம்.

கடையத னயலடி கடைதபு நடையபு
நடுவடி மடக்காய் நான்கடி யாகி
யிடையிடை குறையவு மகவற் றுறையே.

என்பு தியாப்பருங்கலம். குறைவிறெல்சீரகவல் விருத்தங்கழி நெடி ஞன்கொத்திறுவது எ - து, கழிநெடிலடி நான்காய்த் தம்மு ள் ஒத்துவருவன ஆசிரியவிருத்தம் எ-று. குறைவிறெல்சீரென்று சிறப்பித்தவதனுல் எண்சீரின் மிக்கசீரான்வந்த அடியெல்லாஞ் சிற ப்பிலவெனக் கொள்க.

அறுசீராசிரிய விருத்தம்.

விடஞ்சூ முரவி னிடைநுடங்க மின்வாள் வீசிவிளையார்வேங்
கடஞ்சூழ் நாடன் காளிஙகன் கதிர்வேல்பாடு மீதங்கி

வடஞ்சேர்கொங்கைமலைதாந்தாம்வடிக்கண்ணீலமலர்தாந்தாந்
தடந்தோ ளிரண்டும் வேய்தாந்தா மென்னுந் தன்மைத்தண்
[ணுமையே.

இஃதறுசீர்க்கழி நெடிலடியான்வந்த ஆசிரியவிருத்தம். கணி கொண்ட எ - து. எழுசீர்க்கழி நெடிலடியான்வந்த ஆசிரியவிருத்தம். மூவடிவினுல் எ-து. எண்சீர்க்கழி நெடிலடியான்வந்த ஆசிரியவிருத்தம். இடங்கையெஞ்சிலை எ-து, ஒன்பதின்சீர்க்கழி நெடிலடியான்வந்த ஆசிரியவிருத்தம். கொங்குதங்கு எ-து, பதின்சீர்க்கழி நெடிலடியான்வந்த ஆசிரியவிருத்தம்.

சூத்திரம்.

கழிநெடி லடிநான் கொத்திறின் விருத்தமஃ
தழியா மரபின் தகவலாகும்.

என்ப தியாப்பருங்கலம். மெல்லியலே எ-து மகடூஉமுன்னிலை.

## உதாரண முதனினைப்பு.

கன்று குணில்வா னுறத்தா ழிசையாங் கரைபொருகான்
என்றதும் வண்டுளர் பூந்தா ரிரங்கு குயின்முழவாக்
கொன்றூர்ந் தமைந்த வகவற் றுறைகுறை யாவிருத்தம்
பின்றாழ் குழலி விடங்கணி மூவடி வாதியவே

இவ்வுரைச் சூத்திரக்காரிகையின் வழியே ஆசிரியப்பாவினினங் கட்டுக்காட்டிய இலக்கியங்களை முதனினைத்துக்கொள்க. (க)

நேரிசையோத்தாழிசை-அம்போதரங்கவோத்தாழிசை.

தரவொன்று தாழிசை மூன்று தனிச்சொற் சுரிதகமா
மிரலொன்றி னேரிசை யொத்தா ழிசைக்கலி நீர்த்திரைபோன்

மரபொன்று நேரடி மூச்சீர் குறணடி வேமடுப்ப
தரவொன்று மல்குல தமபோ தரஙகவொத் தாழிசையே.

துள்ளலோசைத்தாய் நேரீற்றியற்சீரும், நிரைநடுவாகிய வஞ்சி யுரிச்சீரும் வாராது, நிரைமுதலாகிய வெண்பா வுரிச்சீர்மிக்கு நேரடித்தாய்க் கலித்தளையும், அயற்றளையுந்தட்டுத் தரவுதாழிசையென்னு முதலுறுப்பும், அராகம், அம்போதரங்கம், தனிச்சொல் சுரிதகமென்னுந் துணையுறுப்புமுடைத்தாய், ஒத்தாழிசைக்கலி வெண்கலி கொச்சகக்கலியென்னும் வேறுபாட்டாற்கிடந்த, கலிப்பாக்களை உறுப்பினானும், ஓசையானும், பொருளானும, பெயர்வேறுபாடுணர்த்துவா னெடுத்துக்கொண்டார், அவற்றுள், இக்காரிகை, நேரிசையொத்தாழிசைக் கலிப்பாவும், அம்போதரங்க வொத்தாழிசைக் கலிப்பாவுமாமா றுணர்ந்துதனுதலிற்று.

தரவொன்று தாழிசைமூன்று தனிச்சொற்சுரிதகமாய் நிரலொன்றினேரிசை யொத்தாழிசைக்கலி எ - து முன்னொருதரவுவந்து, அதன்பின்பு மூன்றுதாழிசைவந்து, அதன்பின்னொரு தனிச்சொல் வந்து, அதன்பின்னாசிரியத்தாலாவது, வெண்பாவாலாவது, ஒருசுரிதகவுறுப்புப்பெற்றுவருவது நேரிசையொத்தாழிசைக் கலிப்பா எ-று, தரவெனினும், எருத்தமெனினுமொக்கும். தாழிசையெனினும், இடைநிலைப்பாட்டெனினுமொக்கும. தனிச்சொலெனினும், விட்டிசையெனினும், கூனெனினும், தனிநிலையெனினுமொக்கும். சுரிதகமெனினும், மடக்கியலெனினும், வாரமெனினும், வைப்பெனினும் போக்கியலெனினுமொக்கும்.

சூத்திரம்.

தந்து முன்னிற்றலிற் றரவேதாழிசை
யொத்தாழ்ந் திறினஃ தொத்தாழிசையே

தனிதர நிற்றலிற் றனிச்சொற் குனிதிரை
நீர்ச்சுழி போலநின் றுசுரிந் திறுதலிற்
சோர்ச்சியில் புலவர் சுரிதகமென்ப.

என்று காரணக்குறிசொன்னரு முளரெனக்கொள்க. இனித் தரவுதாழிசைகட் கடிவரையறையாமாறு சுருங்கிற்று மூன்றடியென்னுங் காரிகையுட்போகிச் சொல்லுதும்.

## நேரிசையொத்தாழிசைக் கலிப்பா.

தரவு.

வாணெடுங்கண் பனிகூர வண்ணம்வே றுய்த்திரிந்து
தோணெடுந்த கைதுறந்து துன்பங்கூர் பசப்பினவாய்ப்
பூணெருங்கு முலைகண்டும் பொருட்பிரிதல் வலிப்பவோ,

தாழிசை.

சூருடைய கடுங்கானஞ் சொலற்கரிய வென்பவாற்
பீருடைய நலந்தொலையப் பிரிவாரோ பெரியவரே,

தாழிசை.

சேணுடைய கடுங்கடங்கள் செலற்கரிய வென்பவால்
நாணுடைய நலந்தொலைய நடப்பாரோ நலமிலரே,

தாழிசை.

சிலம்படைந்த வெங்கானஞ் சிறிலவே யென்பவாற்
புலம்படைந்த நலந்தொலையப் போவாரோ பொருளிலரே.

இவை மூன்றுந் தாழிசை. எனவாங்கு தனிச்சொல்.

சுரிதகம்.

அருளொன்று மிலராய்ப் பொருள்வயிற் பிரிவோர்
பன்னெடுங் காலமும் வாழியர்
பொன்னெடுந் தேரொடுந் தானையிற் பொலிந்தே.

இது சுரிதகம். தரவுமூன்றடியாய்த் தாழிசைமூன்றுமிரண்டடி யாய்த் தனிச்சொற்பெற்று மூன்றடியாசிரியச் சுரிதகத்தாலிற்ற நே ரிசை யொத்தாழிசைக் கலிப்பா, வெள்ளைச்சுரிதகத்தாலிற்றன யாப் பருங்கல விருத்தியுட் கண்டுகொள்க.

சூத்திரம்.

தரவு தாழிசை தனிச்சொற் சுரிதக
மெனுநான் குறுப்பின தொத்தா ழிசைக்கலி.

என்றாராகலின்.

சூத்திரம்.

தரவொன் றாகித் தாழிசை மூன்றாய்த்
தனிச்சொ லிடைகிடந்து சுரிதகந் தழுவ
வைத்த மரபின் தொத்தா ழிசைக்கலி.

என்றார் மயேச்சுரர். நீர்த்திரைபோன் மரபொன்றுநேரடி முச் சீர் குறணடுவேமடுப்பத்து அம்போதரங்க வொத்தாழிசை எ - து, கரைசாரக் கரைசார வொருகாலைக் கொருகாற் சுருங்கிவருகின்ற நீர் த்தரங்கம்போல நாற்சீரடியும், முச்சீரடியும், இருசீரடியுமாகிய அளவை யடிகளைத் தாழிசைக்குந் தனிச்சொற்கு நடுவேதொடுத்துத் தரவு தாழிசை அம்போதரங்கம் தனிச்சொல் சுரிதகமென்னும் ஐந்துறு ப்புடைத்தாய்வருவது அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா எ-று. அரவொன்றுமல்குல் எ-து. மகடூஉமுன்னிலை.

மரபொன்று நேரடியென்று சிறப்பித்தவதனால். அசையடி தான் ஈரடியா லிரண்டும், ஓரடியானான்கும், மூச்சீராலெட்டும், இருசீரரற் பதினாறுமாய்வருவது சிறப்புடைத்து, எட்டும் பதினாறுமென்று சொல்லப்பட்டன, நான்குமெட்டுமாகச் சுருங்கி வரப்பெறுமாயினு மெனக்கொள்க.

சூத்திரம்.

ஈரடி யிரண்டு மோரடி நான்கு மூச்சீரெட்டு
மிருசீ ரிரட்டியு மச்சீர்குறையினு மம்போதரங்கம்.

என்றாராகலின். அம்போதரங்கமெனினும், அசையடியெனி னும்பிரிந் திசைக்குறளெனினும், சொற்சீரடியெனினும், எண்ணெ னினுமொக்கும்.

சூத்திரம்.

அனைய வாகியவசையடி நான்குந்
தனியொடு தாழிசை யிடைவரு மென்ப.

அவற்றைப் பேரெண், அளவெண், இடையெண், சிற்றெண் ணென்று பெயரிட்டு வழங்குவாருமுளர்.

## அம்போதரங்கவொத்தாழிசைக் கலிப்பா.

தரவு.

கெடலரு மாமுனிவர் கிளர்ந்துடன் தொழுதேத்தக்
கடல்கெழு கனைசுடரிற் கலந்தொளிரும் வாலுளைய
அழலவிர் சுழல்செங்க ணரிமாவாய் மலைந்தானைத்
தாரொடு முடிபிதரத் தமனியப் பொடிபொங்க
ஆர்புன லிழிகுருதி யகலிட முடனனைப்பக்
கூருகிரான் மார்பிடந்த கொலைமலி தடக்கையோய்,

தாழிசை.

முரசதிர் வியன்மதுரை முழுவதூஉந் தலைபணிப்பப்
புரைதொடித் திரடிண்டோட் போர்மலைந்த மறமல்லர்
அடியோடு முடியிறுப்புண் டயர்ந்தவர் நிலஞ்சேரப்
பொடியெழ வெங்களத்துப் புடைத்ததுநின புகழாமோ,

தாழிசை.

கலியொலி வியனுலகங் கலந்துட னனிநடுங்க
வலியிய லவிராழி மாறெதிர்ந்த மருட்சோர்வு
மாணுதா ருடம்போடு மறம்பிதிர வெதிர்கலங்கிச்
சேணுய ரிருவிசும்பிற் செகுத்ததுநின் சினமாமோ,

தாழிசை.

படுமணி யினநிரைகள் பரந்துட னிரிந்தோடக்
கடுமுர ணெதிர்மலைந்த காரொலி யெழிலேறு
வெரினெடு மருப்பொசிய வீழ்ந்துநிறம வேறாக
எருமலி பெருந்தொழுவி னிறுத்ததுநின் னிகலாமோ,

நாற்சீரடியம்போதரங்கம்-௨.

இலங்கொளி மரகத மெழின்மிகு வியன்கடல்
வலம்புரித் தடக்கை மாஅ னின்னிறம்,
விரியிணர்க் கோங்கமும் வெந்தெரி பசும்பொனும்
பொருகளி றட்டோய் புரையு நின்னுடை,

நாற்சீரோரடியம்போதரங்கம்-௪.

கண்கவர் கதிர்முடி கனலுஞ் சென்னியை,

தண்சுட ருறுபகை தவிர்த்த வாழியை,
ஒலியிய லுவண மோங்கிய கொடியினை,
வலிமிகு சகட மாற்றிய வடியினை,

முச்சீரோரடி-ச.

போரவுணர்க் கடந்தோய் நீ,
புணர்மருதம் பிளந்தோய் நீ,
நீரகல மளந்தோய் நீ,
நிழறிக ழைம் படைப்போய் நீ,

இருசீரோரடி-அ.

(க) ஊழி நீ, (உ) உலகு நீ, (ங) உருவு நீ, (ச) அருவு நீ,
(ரு) ஆழி நீ, (சு) அருளு நீ, (எ) அறமு நீ, (அ) மறமு நீ,

தனிச்சொல். எனவாங்கு.

சுரிதகம்.

அடுதிற லொருவநிற் பரவுது மெங்கோன்
தொடுகழற் கொடும்பூட் பகட்டெழின் மார்பிற்
கயலொடு கலந்த சிலையுடைக் கொடுவரிப்
புயலுறழ் தடக்கைப் போர்வே லச்சுதன்
தொன்று புரிகட லுலகமுழுதுடன்
ஒன்றுபு திகிரி யுருட்டுவோ னெனவே.

இது சுரிதகம், இஃதெட்டும் பதினாறுமென்று சொல்லப்பட்ட முச்சீரடியும், இருசீரடியும். நான்குமெட்டுமாய்வந்த அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா.

நலங்கிளர் திருமணியு நன்பொன்னுங் குயின்றழகார்
இலங்கெயிற் றழலரி மானெருத்தனு சோணையின்மேல்
இருபுடையு மியக்கரச ரிணைக்கவரி யெடுத்தசைப்ப
விரிதாமந் துயல்வரூஉம் வெணகுடைமூன் றுடனிழற்ற
வண்டரற்ற நாற்காதம வகைமாண வுணர்ந்தோங்கும
தண்டளிர்ப்பூம பிண்டிக்கீழ்க் கைபெறவீற் றிருந்தனையே.

என்னும் அம்போதரங்கவொத்தாழிசைக் கலிப்பாவினுளெட்டும் பதினாறுமென்று சொல்லப்பட்ட அம்போதரங்கங் குறையாதே வந்தவாறு யாப்பருங்கலவிருததியுட கண்டுகொள்க.

சூ த் தி ர ம்.

நீர்த்திரை போலே நிரலே முறைமுறை
யாக்கஞ சுருஙகி யசையடி தாழிசை
விட்டிசை விரியத் தொடுத்துச சுரிதகந்
தரக்கித் தொடுத்த தரவினோ டெனவும்
யாப்புற் றமைந்த வம்போத ரஙகம்.

என்றார் காக்கைபாடினியார்.

உதாரணமுதனினைப்பு.

வாணெடுங் கண்பனி நேரிசை யாகு மதர்த்திருண்டு
சேணுற வோடிக் குழையிட றிச்செறிச் செய்யும்விழி
நாணுந் திருவு மறிவுஞ் செறிவு முடையநல்லாய்
ஏணுங் கெடலரு மாமுனி யமபோ தரங்கமென்னே.

இவ்வுரைச் சூத்திரக் காரிகையின்வழியே நேரிசையொத்தாழிசைக் கலிப்பாவிற்கும், அம்போதரங்க வொத்தாழிசைக் கலிப்பாவிற்குங் காட்டிய இலக்கியங்களை முதனினைத்துக்கொள்க. (க0)

### வண்ணகவொத் தாழிசைக்கலிப்பா-வெண்கலிப்பா.

அசையடி முன்ன ராகம்வந் தெல்லா வுறுப்புமுண்டேல்
வசையறு வண்ணக வொத்தா ழிசைக்கலி வான்றனை தட்
டிசைதன தாகியும் வெணபா வியைந்துமின் பான்மொழியாய்
விசையறு சிந்தடி யாலிறு மாய்விடின் வெண்கலியே.

வண்ணக வொத்தாழிசைக் கலிப்பாவும், வெண்கலிப்பாவுமா மாறுணர்த்துதனுதலிற்று.

அசையடி முன்னராகம்வந் தெல்லாவுறுப்புமுண்டேல் வசையறு வண்ணகவொத் தாழிசைக்கலி எ-து, அமபோதரங்கவுறுப்பிற் குந் தாழிசைக்கு நடுவே அராகவுறுப்புப்பெற்றுத் தரவு, தாழிசை, அராகம, அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகமென்னுமா றுறுப் பினையுமுடைத்தாய் வருமெனினது வண்ணகவொத்தாழிசைக் கலிப்பா வெனப்படும் எ-று. அராக மெனினும், வணணகமெனினும், முடுகியலெனினும், அடுக்கியலெனினுமொக்கும், வசையறுவண்ண கமென்று சிறப்பித்தவதனால், அராகவுறுப்புத்தானளவடி முதலா கிய எல்லாவடியானும், வரப்பெருமெனக்கொள்க. அடிவரையறை யாவது சிறுமைநான்கடி பெருமையெட்டடி இடைஐந்தடியானும், ஆறடியானும், எழடியானும், வரப்பெறுமெனக்கொள்க.

### சூத்திரம்.

அளவடி முதலா வனைத்தினு நான்கடி
முதலா யிரட்டியு முடுகிய னடக்கும்.

என்றாராகலின்.

## வண்ணகவொத்தாழிசைக் கலிப்பா.

### தரவு.

விளங்குமணிப் பசும்பொன்னின் விரித்தமைத்துக் கதிர்கான்
றுளங்குமணிக் கனைகழற்காற் றுறுமலர் நறும்பைந்தார்ப் [று

பரூஉத்தடக்கை மதயானைப் பகட்டெழி லெரிகுஞ்சிக்
குரூஉக்கொண்ட மணிப்பூணேய் குறையிரந்து முன்னாட்கண்
மாயாத வனப்பினையாய் மகிழுவார்க்கு மல்லார்க்குந்
தாயாகித் தலையளிக்குந் தண்டுறை யூரகேள்,

தாழிசை.

காட்சியாற் கலப்பெய்தி யெத்திறத்துங் கதிர்ப்பாகி
மாட்சியாற் றிரியாத மரபொத்தாய் கரவினாற்
பிணிநலம் பெரிதெய்திப் பெருநதடந்தோள் வனப்பழிய
வணிநலந் தனியேவந் தருளுவது மருளாமோ,

தாழிசை.

அன்பினா லமிழ்தளாஇ யறிவினாற் பிறிதின்றிப்
பொன்புனை பூணாகம் பசப்பெய்தப் பொழிலிடத்துப்
பெருவரைத்தோ ளருளுதற் கிருளிடைத் தமியையாய்க்
கருவரைத்தோள் கதிர்ப்பிக்குங் காதலுங் காதலோ,

தாழிசை.

பாங்கனையே வாயிலாப் பலகாலும் வந்தொழுகுந்
தேங்காத கரவினையுந் தெளியாத விருளிடைக்கட்
குடவரைவேய்த் தோளிணைகள் குளிர்ப்பிப்பான் றமியையாய்த்
தடமலர்த்தா ரருளிநின் றகுதியுந் தகுதியோ,

அராகம்.

தாதுறு முறிசெறி தடமலரிடையிடை தழலென விரிவன பொழில், போதுறு நறுவிரை புதுமலர் தெரிதரு கருநெய் தல் விரிவன கழி, தீதுறு திறமறு கெனநனி முனிவன துனை

யொடு பிணைவன துறை, மூதுறு மொலிகலி நுரைதரு திரை
யொடு கழிதொடர் புடையது கடல,

நாற்சீரிரண்டடியம்போதரங்கம் இரண்டு.

கொடுந்திற லுடையன சுறவேறு கொட்பதனால்
இடுங்கழி யிராவருதல வேண்டாமென் றுரைத்திலமோ,
கருநிறத் தடுதொழிற கராமபெரி துடைமையால்
இருணிறத் தொரு கான விராவார லென்றிலமோ.

நாற்சீரோரடியம்போதரங்கம் நான்கு.

நாணொடு கழிந்தன்றாற் பெண்ணரசி நலத்தகையே,
துஞ்சலு மொழிந்தன்றாற் றொடித்தோளி தடங்கண்ணே,
அரற்றொடு கழிந்தன்றா லாரிருளு மாயிழைக்கே,
நயப்பொடு கழிந்தன்றா னனவதுவு நன்னுதற்கே,

முச்சீரோரடியம்போதரங்கம் எட்டு.

அத்திறத்தா லசைந்தன தோள்.
அலர்தற்கு மெலிந்தன கண,
பொய்த்துரையாற புலர்ந்தது முகம,
பொன்னிறத்தாற் றொலைந்தன முலை,
அழலினா லசைந்தது நகை,
அணியினா லொசிந்தன விடை,
குழலினா லவிர்ந்தது முடி,
குறையினாற் கோடிற்று நிறை.

இருசீரோரடியம்போதரங்கம் பதினறு.

உட்கொண்ட தகைத்தொருபால்,
கட்கொண்ட றளித்தொருபால்,
பரிவுறாஉந் தகைத்தொருபால்,
இரவுறாஉந் துயரொருபால்,
மெலிவுறாஉந் தகையொருபால்,
பொலிவுசென் றகன்றொருபால்,
காதலிற் கதிர்ப்பொருபால்,
ஏதில்சென் றணைந்தொருபால்,
உலகறிந்த வலத்தொருபால்,
கழிவெய்தும் படித்தொருபால்,
படர்வுறாஉம் பசப்பொருபால்,
இளிவந்த வெளிரொருபால்,
விளப்புவந் தடைந்தொருபால்,
பொறைவந்து கூர்ந்தொருபால்,
கட்படாத்துய ரொருபால்,
இயனுணிற் செறிவொருபால்,

தனிச்சொல். எனவாங்கு.

சுரிதகம்.

இன்னதிவ் வழக்க மித்திற மிவணல
மென்னவு முன்னுட் டின்ணு யாகிக்

கலந்த வண்மையை யாயினு நலந்தகக்
கிளையொடு கெழீஇத் தளையவிழ் கோதையைக்
கற்பொடு காணிய யாமே
பொற்பொடு பொலிகநும் புணர்ச்சி தானே.

இது ஆறுறுப்புங் குறைவின்றிவந்த வண்ணகவொத்தாழிசைக் கலிப்பா.

சூத்திரம்.

அச்சொ லப்பட்ட வுறுப்போ டராகவடி
வைத்த நடையது வணணகமாகும்.

என்றார் காக்கைபாடினியார். வான்றளை தட்டிசைதனதாகியும் வெண்பாவியைந்தும், விசையறு சிந்தடியாலிறுமாய்விடின் வெண்கலியே எ-து, கலித்தளை தட்டுக் கலியோசை தழுவியும், வெண்டளை தட்டு வெள்ளோசை தழுவியும்வந்து ஈற்றடி முச்சீரானிறுமெனினது வெண்கலிப்பாவென்றும் கலிவெண்பாவென்றும் வழங்கப் படும் எ-று, இன்பான்மொழியாய் எ-து, மகடூஉமுன்னிலை.

விசையறு சிந்தடியென்று சிறப்பித்தவதனால், வேற்றுத்தளை தட்டுருகிவரவும்பெறும்.

## கலித்தளையிபைந்த வெண்கலிப்பா.

வாளார்ந்த மழைத்தடங்கண் வனமுலைமேல் வம்பனுங்கக்
கோளார்ந்த பூணுகங் குழைபுரளக் கோட்டெருத்தின்
மாலைதாழ் கூந்தலார் வரன்முறையால் வந்தேத்தச்
சோலைதாழ் பிண்டிக்கீழ்ச் சூழ்ந்தவர்தஞ் சொன்முறையால்
மனையறமுந் துறவறமு மண்ணவர்க்கும் விண்ணவர்க்கும்
வினையறுக்கும் வகைதெரிந்து வீடொடுகட் டிவையுரைத்த

தொன்மைசான் மிகுகுணத்துத் துறவரசைத் தொழுதேத்த
நன்மைசால் வீடெய்து மாறு.

இது தனிச்சொல்லானும், துள்ளலோசையானும், வந்தமையான் வெண்கலிப்பா.

கலி வெண்பா.

சுடர்த்தொடீஇ கேளாய் தெருவினு மாடு
மணற்சிற்றில் காலிற் சிதையா வடர்ச்சிய
கோதை பரிந்து வரிப்பந்து கொண்டோடி
நோதக்க செய்யுஞ் சிறுபட்டி மேலோர்நாள
அன்னையும் யானு மிருந்தேமா வில்லுளே
உண்ணுநீர் வேட்டே னெனவந்தாற் கன்னை
அடற்பொற் சிரகத்தால் வாக்கிச் சுடரிழா
யுண்ணுநீ ரூட்டிவா வென்றா ளெனயானுந்
தன்னை யறியாது சென்றேன்மற் றென்னை
வளைமுன்கை பற்றி நலியந் தெருமந்திட்
டன்னா யிவனொருவன் செய்ததுகா ணென்றேனா
அன்னை யலறிப் படர்தரத் தன்னையான்
உண்ணுநீர் விக்கினா னென்றேனா வன்னையுந்
தன்னைப் புறம்பழித்து நீவமற் றென்னைக் [கு
கடைக்கண்ணாற் கொல்வான்போ னோக்கி நகைக்கூட்ட
செய்தானக் கள்வன் மகன்.

இது வெண்டளைதட்டு வெள்ளோசைதழுவி யொருபொருண் மேல் வந்தமையாற் கலிவெண்பா.

சூத்திரம்.

ஒருபொரு ளுதலிய வெள்ளடி யியலாற்
றிரிபின்றி முடிவது கலிவெண் பாட்டே.

என்றார் தொல்காப்பியனார்.

சூத்திரம்.

வெண்டளை தன்றளை யென்றிரு தன்மையின்
வெண்பா வியலது வெண்கலி யாகும்.

என்றார் காக்கைபாடினியார். இனிப் பிறதளையான்வரு

வெண்கலிப்பா.

ஏர்மலர் நறுங்கோதை யெருத்தலைப்ப விறைஞ்சித்தன்
வார்மலர்த் தடங்கண்ணார் வலைப்பட்டு வருந்துமவெள்
தார்வரை யகன்மார்பன் றனிமையை யறியுங்கொல
சீர்மலி கொடியிடை சிறந்து.

இது ஆசிரியத்தளையானும், தன்றளையானும்வந்த வெண்கலிப்பா, பிறவும் யாப்பருங்கல விருத்தியுட் கண்டுகொள்க.

உதாரண முதனினைப்பு.

நின்று விளங்கு மணிப்பசும் பொன்னிற மாறுறுப்பும
ஒன்றிய வண்ணக வொத்தா ழிசைகலி யோசைகுன்றாக்
துன்றிய வாளார் மழையுஞ் சுடர்த்தொடீஇ யேர்மலரும
என்றிவை வெண்கலிப் பாவிற் கிலக்கிய மேந்திழையே.

இவ்வுரைச் சூத்திரக்காரிகையின்வழியே அம்போதரங்க வொத்தாழிசைக் கலிப்பாவிற்கும், வண்ணகவொத்தாழிசைக் கலிப்பாவிற்

கும், வெண்கலிப்பாவிற்குங் காட்டிய இலக்கியங்களை முதனினைத்துக்கொள்க. (கக)

## கொச்சகக்கலிப்பா.

தரவே தரவிணை தாழிசை தாமுஞ் சிலபலவாய்
மரபே யியன்று மயங்கியும் வந்தன வாயகமைத்தோள்
அரவே ரகலல்கு லம்பேர் நெடுங்கண வம்பேறுகொங்கைக்
குரவே கமழ்குழ லாய்கொண்ட வான்பெயர் கொச்சகமே.

தரவு கொச்சகக்கலிப்பாவும், தரவிணைக் கொச்சகக்கலிப்பாவும், சிஃறாழிசைக் கொச்சகக்கலிப்பாவும், பஃறாழிசைக் கொச்சகக்கலிப்பாவும், மயங்கிசைக் கொச்சகக்கலிப்பாவு மாமாறுணர்த்துதனுதலிற்று.

தரவே தரவிணைதாழிசை தாமுஞ் சிலபலவாய் மரபேயியன்று மயங்கியும் வந்தன எ-து, ஒருதரவுவந்தும், இரண்டுதரவுவந்தும், தாழிசை சிலவந்தும், தாழிசை பலவந்தும் தரவு, தாழிசை, அராகம், அம்போதரங்கம் தனிச்சொல், சுரிதகமென்னு மாறுறுப்பும் தம்முண்மயங்கியும், வெண்பாவினோடும், ஆசிரியத்தினோடு மயங்கியும் வருவனவெல்லாங் கொச்சகக்கலிப்பாவென்று பெயரிட்டு வழங்கப்படும் எ-று. சொல்லின் முடிவினப்பொருண் முடித்தல் எ-து, தந்திரவுத்தியாகலின் தரவு கொச்சகமுதலாயின அப்பெயரானே வழங்கப்படுமெனக்கொள்க. ஒருதரவுவந்தால் தரவுகொச்சகக்கலிப்பாவென்றும், தரவிரண்டாய்வந்தால் தரவிணைக்கொச்சகக்கலிப்பாவென்றும், சில தாழிசைவந்தால் சிஃறாழிசைக் கொச்சகக்கலிப்பாவென்றும், பலதாழிசைவந்தால் பஃறாழிசைக் கொச்சகக்கலிப்பாவென்றும், தம்முண் மயங்கியும், பிறவற்றினோடு மயங்கியும் வருவனவெல்லா மயங்கிசைக் கொச்சகக்கலிப்பாவென்றும் வழங்கப்படும். தாமுமென்ற மிகுத்துச்சொல்லியவதனால் தனிச்சொல்லும், சுரிதகமும்

இடையிடை வரப்பெறுமெனக்கொள்க, மரபேயியன்றுமென்று சிறப்பித்தவதனால், வரலாற்றுமுறைமையோடுங்கூட்டிக் கலியுறுப்பில் மிக்கும், குறைந்தும், பிறழ்ந்தும், உறழ்ந்தும், மயங்கியும், கலியுள் வாராவென்ற நேரீற்றியற்சீரும், நிரைநடுவாகிய வஞ்சியுரிச்சீரும், ஐஞ்சீரடியும் வந்தொத்தாழிசைக் கலிப்பாக்களோடொவ்வாது வருவனவெல்லாம் மயங்கிசைக் கொச்சகக்கலிப்பாவென்று வழங்கப்படும் எ-று, வாங்கமைத்தோள் குழலாய் எ - து, மகடூஉமுன்னிலை கொண்டவான்பெயர் கொச்சகமே எ - து, இறுதிவிளக்கெனக் கொள்க எ - று.

தரவு கொச்சகக்கலிப்பா.

தரவு.

செல்வப்போர்க் கதக்கண்ணன் செயிர்த்தெறிந்த சினவாழி
முல்லைத்தார் மறமன்னர் முடித்தலையை முருக்கிப்போய்
எல்லைநீர் வியன்கொண்மூ விடை நுழையு மதியம்போன்
மல்லலோங் கெழில்யானை மருமம்பாய்ந் தொளித்ததே.

இது சுரிதகமில்லாது முடிந்தது.

தரவு கொச்சகக்கலிப்பா.

தரவு.

குடநிலைத் தண்புறவிற் கோவல ரெடுத்தார்ப்பத்
தடநிலைப் பெருந்தொழுவிற் றகையேறு மரம்பாய்ந்து
வீங்குமணிக் கயிறொரீஇத் தாங்குவணத் தொன்றப்போய்க்
கலையினொடு முயலிரியக் கடிமுல்லை முறுவலிப்ப,

தனிச்சொல் - எனவாங்கு

சுரிதகம்.

ஆனொடு புல்லிப் பெரும்புதர் முல்லையுங்
கானுடைத் தலர்தேர் சென்ற வாறே.

இது தனிச்சொல்லுஞ் சுரிதகமும், பெற்றுவந்த தரவுகொச்சகக் கலிப்பா.

தரவிணைக் கொச்சகக்கலிப்பா.

தரவு.

வடிவுடை நெடுமுடி வானவர்க்கும் வெலற்கரிய
கடிபடு நறும்பைந்தார்க் காவலர்க்குங் காவலனாம்
கொடிபடு மணிமாடக் கூடலார் கோமானே,

எனவாங்கு - தனிச்சொல்

தரவு.

துணைவளைத்தோ ளிவண்மெலியத் தொன்னலந் துறப்புண்டாங்
கிணைமலர்த்தா ரருளுமே யிதுவிதற்கோர் மாறென்று
துணைமலர் தடங்கண்ணார் துணையாகக் கருதாரே,

அதனால் - தனிச்சொல்

சுரிதகம்.

செவ்வாய்ப்பேதை யிவடிறத்தெவ்
வாறுங்கொளிஃ தெண்ணியவாறே.

இது இடையிடைத் தனிச்சொற்பெற்று ஆசிரியச்சுரிதகத்தா லிற்ற தரவிணைக் கொச்சகக்கலிப்பா, சுரிதகமில்லாதது வந்தவழிக் கண்டுகொள்க.

சிஃறாழிசைக்கொச்சகக்கலிப்பா.

தரவு.

பருஉத்தடக்கை மதயானைப் பணையெருத்தின்
மேற்றோன்றிக், குரூஉக்கொண்ட வெண்குடைக்கீழ்க் குடைமன்

ர் புடைசூழப், படைப்பரிமான் றேரினொடும் பரந்தலவு
றகினிடைக், கொடித்தானை யிடைப்பொலிந்தான் கூடலார்
காமானே,

ஆங்கொருசார்

தாழிசை - க.

உச்சியர்க் கிறைவனு யுலகமெலாங் காத்தளிக்கும்
பச்சையார் மணிப்பைம்பூட் புரந்தரனைப் பாவித்தார்
வச்சிரங்கைக் காணாத காரணத்தான் மயங்கினரே,

ஆங்கொருசார்,

அக்கால மணிநிறாகாத் தருவரையாற் பனிதவிர்த்து
வக்கிரனை வடிவழித்த மாயவனைப் பாவித்தார்
சுக்கரங் காணாத காரணத்தாற் சமழ்த்தனரே,

ஆங்கொருசார்,

ால்கொண்ட பகைதணிப்பான் மாத்தடிந்து மயங்காச்செங்
கால்கொண்ட சேவலங் கொடியவனைப் பாவித்தார்
வேல்கொண்ட தின்மையால் விம்மிதராய் நின்றனரே,

அஃதான்று-தனிச்சொல்,

சுரிதகம்.

கொடித்தேர்த் தோன்றல் கொற்கைக் கோமான்
நின்புக ழொருவன் செம்பூட் சேஎய்
என்றநனி யறிந்தனர் பலரே தாநும்
ஐவரு ளொருவனென் றறிய லாகா
மைவரை யானை மடங்கா வென்றி

மன்னவன் வாழியென் றேத்தத்
தென்னவன் வாழி திருவொடும் பொலிந்தே.

இது நான்கடித்தரவும், மூன்றடித்தாழிசை மூன்றும், சுரிதகமுமாய் இடையிடைத் தனிச்சொற்பெற்று நேரிசையொத்தாழிசைக் கலிப்பாவிற் சிறிதுவேறுபட்டு வந்தமையாற் சிஃறாழிசைக் கொச்சகக்கலிப்பா.

பஃறாழிசைக்கொச்சகக்கலிப்பா.

தரவு.

தண்மதியேர் முகத்தாளைத் தனியிடத்து நனிகண்டாங்
குண்மதியு முடைநிறையு முடன்றளர முனாட்கட்
கண்மதியொப் பிவையின்றிக் காரிகையை நிறைபுகவர்ந்து
பெண்மதியின் மகிழ்ந்தநின் பேரருளும் பிறிதாமோ,

தாழிசை - ௬.

இளநல மிவள்வாட விரும்பொருட்குப் பிரிவாயேல்
தளநல முகைவெண்பற் றாழ்குழ றளர்வாளோ,

தகைநல மிவள்வாடத் தரும்பொருட்குப் பிரிவாயேல்
வகைநல மிவள்வாடி வருந்தியில விருப்பாளோ,

அணிநல மிவள்வாட வரும்பொருட்குப் பிரிவாயேல்
மணிநல மகிழ்மேனி மாசோடு மடிவாளோ,

நாம்பிரியே மினியென்று நறுநுதலைப் பிரிவாயேல்
ஓம்பிரியே மெனவுரைத்த வுயர்மொழியும் பழுதாமோ,

குன்றளித்த திரடோளாய் கொய்புனத்திற் கூடியநாள்
அன்றளித்த வருண்மொழியா லருளுவது மருளாமோ,

சில்பகலு மூடியக்காற் சிலம்பொலிச்சீ றடிபரவிப்
பல்பகலுந் தலையளித்த பணிமொழியும் பழுதாமோ

என வாங்கு - தனிச்சொல்,

சுரிதகம்.

அரும்பெற லிவளினுந் தரும்பொரு ளதனினும்
பெரும்பெற வரியன வெறுக்கையு மற்றே

அதனால்

விழுமிய தறிமதி வாழி
கெழுமிய காதலிற் றரும்பொருள் சிறிதே.

நாலடித்தரவும், இரண்டடித் தாழிசையாறும், தனிச்சொல்லும், நான்கடிச் சுரிதகமும்பெற்றுவந்த பஃறாழிசைக் கொச்சகக்கலிப்பா.

மயங்கிசைக்கொச்சகக்கலிப்பா.

தரவு-உ.

மணிகிளர் நெடுமுடி மாயவனுந் தம்முனும்போன்
றணிகிளர் நெடுங்கடலுங் கானலுந் தோன்றுமால்
நுரைநிவந் தவையன்ன நொய்ப்பறைய சிறையன்னம்
இரைநயந் திரைகூறு மேமஞ்சார் துறைவகேள்,

மலையென மழையென மஞ்செனத் திரைபொங்கிக்
கனலெனக் காற்றெனக் கடிதுவந் திசைப்பினும்
விழுமியோர் வெகுளிபோல் வேலாழி யிறக்கலா
தெழுமுந்நீர் பரந்தொழுகு மேமஞ்சார் துறைவகேள்,

தாழிசை - ௪.

கொடிபுரையு நுழைநுசிப்பிற் குழைக்கமர்ந்த திருமுகத்தோ
தொடிநெகிழ்ந்த தோள்கண்டுந் துறவலனே யென்றியால், [ள

கண்கவரு மணிப்பைம்பூட் கயில்கவைய சிறுபுறத்தோள்
தெண்பனிநீ ருகக்கண்டுந் தெரியலனே யென்றியால்,

நீர்பூத்த நிரையிதழ்க்க ணின்றுருசிந்த புருவத்தோள்
பீர்பூத்த நுதல்கண்டும் பிரியலனே யென்றியால்,

கனைவரலாற் றிருகணைபோற் கைநில்லா துண்ணெகிழ்ந்து
நினையுமென் னிலைகண்டு நீங்கலனே யென்றியால்,

வீழ்சுடரி னெய்யேபோல் விழுமநோய் பொறுக்கலாத்
தாழுமென் னிலைகண்டுந் தாங்கலனே யென்றியால்,

கலங்கவிழ்ந்த நாய்கன்போற் களைதுணை பிறிதின்றிப்
புலம்புமென் னிலைகண்டும் போகலனே யென்றியால்,

அதனால் - தனிச்சொல்,

அராகம்-௪.

அடும்பயி லிறும்பி னெடும்பனை மிசைதொறும்
கொடும்புற மடலிடை யொடுங்கின குருகு,

செறிதரு செருவிடை யெறிதொழி லிளையவர்
நெறிதரு புரவியின் மறிதருந் திமில்,

அரசுடை நிரைபடை விரைசெறி முரசென
நுரைவரு திரையொடு கரைபொரு கடல்,

அலங்கொளி யவிர்சுட ரிலங்கொளி மலர்தொறுங்
கலந்தெறி காலொடு புலம்பின பொழில்,

தாழிசை - ௩.

விடாஅது கழலுமென் வெள்வளையுந் தவிர்ப்பாய்மன்
கெடாஅது பெருமென் கேண்மையு நிறுப்பாயோ,

ஒல்லாது கழலுமென் னொளிவளையுஞ் செறிப்பாய்மன்
நில்லாது பெருகுமென் னெஞ்சமு நிறுப்பாயோ,

தாங்காது கழலுமென் றகைவளையுந் தவிர்பாய்மன்
நீங்காது பெருகுமென் னெஞ்சமு நிறுப்பாயோ,

மறவாத வன்பினேன் மனனிற்கு மாறானாயாய்
துறவாத தமருடையேன் துயர்தீரு மாறுரையாய்,

காதலார் மார்பின்றிக் காமக்கு மருந்தானாயாய்
ஏதிலார் தலைசாய யானுய்யு மாறானாயாய்,

இணைபிரிந்தார் மார்பின்றி யின்பக்கு மருந்தானாயாய்
துணைபிரிந்த தமருடையேன் றுயர்தீரு மாறுரையாய்.

எனவாங்கு - தனிச்சொல்

அம்போதரங்கம் - அ.

பகைபோன்றது துறை, தகையிழந்தன தோள்,
பரிவாயின குறி, தலைசிறந்தது துயர்,
நகையிழந்தது முகம், புகைபரந்தது மெய்,
நனிகாணிற் றனம், பொறையாயிற்றென் னுயிர்,

அதனால் தனிச்சொல்.

சுரிதகம்.

இனையது நினையா லினையது பொழுதால்
நினையல் வாழி தோழி தொலையாப்

பனியொடு கழிக வுண்கண்
என்னொடு கழிக்கவித் துன்னிய நோயே.

இது தரவிரண்டும், தாழிசையாறும், தனிச்சொல்லும், அராகம் நான்கும், பெயர்த்தும ஆறுதாழிசையும், தனிச்சொல்லும், இருசீரோரடியெட்டடம்போதரங்க வுறுப்பும்பெற்று நான்கடி ஆசிரியச் சுரிதகத்தாலிற்றுக் கலிகோதப்பட்ட ஆறுறுப்பும் மிக்கும், குறைந்தும், பிறழ்ந்தும், உறழ்ந்தும், மயங்கியும், வந்தமையான் மயங்கிசைக் கொச்சகக்கலிப்பா. வெண்பாவினேடும், ஆசிரியத்தினேடும்வந்த மயங்கிசைக் கொசசகக்கலிப்பா யாப்பருங்கலவிருத்தியுள் காமர்கடும்புனலென்னும் பழம்பரட்டிற் கண்டுகொள்க. இன்னுமரபே மியன்றுமென்று சிறப்பித்தவதனல், ஒரு போகுமுதலாவுடையனவற்றையெல்லா மிதனற் பெயர்கொடுத்துக் கொசசகமென்று வழங்கப்படுமெனக் கொளக.

சூ த் தி ர ம்.

எருத்திய லின்றி யிடைநிலை பெற்று
மிடைநிலை யின்றி யெருத்துடைத் தாயு
மெருத்த மிரட்டித் திடைநிலை பெற்று
மிடைய திரட்டித் தெருத்துடைத் தாயு
மிடையு மெருத்து மிரட்டுற வந்து
மெருத்த மிரட்டித் திடைநிலை யாறு
யடக்கியல் காறு மமைந்த வுறுப்பிற்
கிடக்கை முறைமையிற் கிழமைய தாயுந்
தரவொடு தாழிசை யம்போத ரங்க
முடுகியல் போக்கிய லென்றிவை யெல்லா
முறை தடுமாற மொழிந்தவை யின்றி
யிடையிடை வெண்பா சிலபல சேர்ந்து

மற்றும் பிறபிற வொப்புறுப் பில்லன்
கொச்சக மென்னுங் குறிப்பின வாகும்.

என்றார் காக்கைபாடினியார்.

சூத்திரம்.

தரவே தரவிணை தாழிசை சிலபல
வரன்முறை பிறழ வயற்பா மயங்கியுந்
தனிச்சொற பலவா யிடையிடை நடந்து
மொத்தா ழிசைகலி யுறுப்பினிற் பிறழ
வைத்த முறையான் வண்ணக விறுவாய்
மயங்கி வந்தனவு மியங்குநெறி முறைமையிற்
கொச்சகக் கலியெனக் கூறினர் புலவர்.

ஓதப் பட்ட வுறுப்பு வகையெல்லா
மேதப் படாமற் கலிக்கியல் பெய்தி
மிக்குங் குறைந்தும் பிறழ்ந்து முறழ்ந்தும்
வண்ண முடியுந் தொடையு மயங்கியு
மடுக்கிய லந்தந் தொடுத்தன பல்கியுங்
கலிவயிற் கடிந்த சீரிடை மிடைந்து
நாற்சீ ரிறந்த சீரொடு சிவணியு
முச்சீ ரிருசீ ரம்போ தரங்க
மச்சீர் முடிவிடை யழிவில தழுவியுங்
கொச்சகக் கலியெனக் கூறவும் படுமே.

கூறிய வுறுப்பிற் குறைபா டின்றித்
தேறிய விரண்டுந் தேவ பாணியுங்

தரவே யொழியினுந் தாழிசை யொழியினு
மிருவகை மூத்திறத் தெண்ணே நீங்கினு
மொருபோ கென்ப வுணர்ந்தி சினோரே

என்றாராகலின்

தரவின் றாகித் தாழிசை பெற்றுந்
தாழிசை யின்றித் தரவுடைத் தாகியு
மெண்ணிடை யிட்டுச் சின்னங் குன்றியு
மடுக்கிய வின்றி யடிநிமிர்ந் தொழுகியும்
யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடையது
கொச்சக வொருபோ காகு மென்ப.

என்றார் தொல்காப்பியனார். இவற்றிற் கிலக்கியம் யாப்பருங்கல விருத்தியுட் கண்டுகொள்க.

உதாரண முதனினைப்பு.

குடநிலைத் தண்செல்வப் போர்க்கதக் கண்ணன் றரவுகுன்றா
வடிவுடை யாகுந் தரவினை மன்னும் பருஉத்தடக்கை
இடமிக வாஞ்சிஃ றாழிசை தண்மதி யோர்பலவாய்
மடலவிழ் கோதை மணிகிள ராகு மயங்கிசையே.

இவ்வுரைச் சூத்திரக்காரிகையின்வழியே கொச்சகக் கலிப்பாக்கட்குக் காட்டிய இலக்கியங்களை முதனினைத்துக்கொள்க. (கஉ)

கலிப்பாவினம்.

அடிவரை யின்றி யளவொத்து மத்தடி நீண்டிசைப்பிற்
கடிதலில் லாக்கலித் தாழிசை யாகுங் கலித்துறையே

நெடிலடி நான்காய் நிகழ்வது கோடி யிரிரண்டாய
விடினது வாகும் விருத்தந் திருத்தகு ம்மெல்லியலே.

கலித்தாழிசையும், கலித்துறையும், கலிவிருத்தமுமாமாறுணர்த்துதனுதலிற்று.

அடிவரையின்றி யளவொத்துமந்தடி நீண்டிசைப்பிற் கடிதலில்லாக் கலித்தாழிசையாகும் எ - து, இரண்டடியும், பலவடியும்வந்து, ஈற்றடிமிக்கு, அல்லாதவடி தமமுளொத்தும், ஒவ்வாதும்வருவது கலித்தாழிசை எ-று. கடிதலில்லாக் கலித்தாழிசையென்று சிறப்பித்தவதனல், ஒருபொருண்மேன் மூன்றடுக்கிவருவது சிறப்புடைத்து, தனியே வரப்பெறுமாயினு மெனக்கொள்க.

கலித்தாழிசை.

கொய்தினை காத்துங் குளவி யடுக்கத்தெம்
பொய்தற் சிறுகுடி வாரனீ யைய நலம்வேண்டின்
ஆய்தினை காத்து மருவி யடுக்கத்தெம்
மாசில் சிறுகுடி வாரனீ யைய நலம்வேண்டின்
மென்றினை காத்து மிருபூங் கமழ்சோலைக்
குன்றச் சிறுகுடில் வாரனீ யைய நலம்வேண்டின்.

இவையிரண்டடியாய் ஈற்றடிமிக்கு ஒருபொருண்மேல் மூன்றடுக்கி வந்தது.

கலித்தாழிசை.

வாள்வரி வேங்கை வழங்குஞ் சிறுநெறியெங்
கேள்வரும் போதி னெழால்வாழி வெண்டிங்காள்
கேள்வரும் போதி னெழாலாய்க் குறுமியரோ
நீள்வரி நாகத் தெயிறேவாழி வெண்டிங்காள்.

இஃது ஈற்றடிமிக்கு ஏனையடிமூன்று மொத்துவந்த அளவொத்து மென்றவும்மையால் ஈற்றடிமிக்கு ஏனையடியொவ்வாது வரப்பெறு மெனவுங்கொள்க.

கலித்தாழிசை.

பூண்ட பறையறையப் பூத மருள
நீண்ட சடையா னாடுமே
நீண்ட சடையா னாடு மென்ப
மாண்ட சாயன் மலைமகள் காணவே காணவே.

இஃதீற்றடிமிக்கு இரண்டாமடி குறைந்து முதலடியும், மூன்றா மடியும், ஒத்துவந்தது சீர்வரையறுத்திலாமையால் ஏனைத்துச்சீரானு மடியாய் வரப்பெறுமெனக்கொள்க.

சூத்திரம்.

அடியெனைத் தாகியு மொத்துவந் தளவிற்
கடையடி மிகுவது கலித்தா ழிசையே.

என்ப தியாப்பருங்கலம்.

சூத்திரம்.

அந்தடி மிக்குச் சிலபல வாயடி
தந்தமு ளொப்பன தாழிசை யாகும்.

என்றாராகலின். கலித்துறையே நெடிலடிநான்காய் நிகழ்வது எ-து, ஐஞ்சீரடி நான்காய்வருவது கலித்துறை எ-று,

கலித்துறை.

யானுந் தோழியு மாயமு மாடுந் துறைநண்ணித்
தானுந் தேரும் பகனும் வந்தென் னலனுண்டான்

தேனும் பாலும் போல்வன சொல்லிப் பிரிவானேல்
காணும் புள்ளுங் கைதையு மெல்லாங் கரியன்றே.

வென்றான் வினையின் றொகையாகி விரிந்து தன்கண்
ஒன்றாய்ப் பரந்த வுணர்வின்னொழி யாது முற்றுஞ்
சென்றான் றிகழுஞ் சுடர்சூழொளி மூர்த்தி யாகி
நின்றா னடிக்கீழ்ப் பணிந்தார்வினை நீங்கி நின்றார்.

இவை நெடிலடிநான்காய் வந்தது.

நெடிலடி நான்காய் நிகழ்வது கலித்துறை
என்ப தியாப்பருங்கலம்.

ஐஞ்சீ ரடியி னடித்தொகை நான்மையோ
டெஞ்சா தியன்றன வெல்லாங் கலித்துறை.

என்றாகலின் நேரடியீ ரிரண்டாய் விடினதுவாகும விருத்தம எ-து, நாற்சீரடி நான்காய்வருவது கலிவிருத்தம் எ - று. திருத்தகு மெல்லியலே எ-து, மகடூஉ முன்னிலை.

கலிவிருத்தம்.

வேய்தலை நீடிய வெள்ளி விலங்கலில்
ஆய்தலி லொண்சுட ராழியி னன்றமர்
வாய்தலி னின்றனர் வந்தனர் மன்னர்முன்
நீதலை சென்றுரை நீள்கடை காப்போய்.

தேம்பழுத் தினியநீர் மூன்றுந் தீம்பலா
மேம்பழுத் தளிந்தன சுளையும் வேரியும்
மாம்பழக் கனிகளு மதுத்தண் டீத்தமுந்
தாம்பழுத் துள்சில தவள மாடமே.

அளவடி நான்கின் கலிவிருத் தம்மே.
என்ப தியாப்பருங்கலம்.

## உதாரணமுதனினைப்பு.

கொய்தினை யாய்தினை மென்றினை வாள்வரி பூண்டபறை
எய்திய தாழிசை யானும்வெண் றுறையுங் கலித்துறையே
மைதிக ழோதி வரிநெடுங் கண்ண வனமுலையாய்
மெய்தரு வேய்தலை தேம்பழுக் தென்ப விருத்தங்களே.

இவ்வுரைச் சூத்திரக்காரிகையின் வழியே கலிப்பாவினங்கட்குக் காட்டிய இலக்கியங்களை முதனினைத்துக்கொள்க. (கஅ)

## வஞ்சிப்பா - வஞ்சிப்பாவினம்.

கூறளடி நான்கின மூன்றொரு தாழிசை கோதில்வஞ்சித்
துறையொரு வாது தனிவரு மாய்விடிற் சிந்தடிநான்
கறைதரு காலை யமுதே விருத்தந் தனிச்சொல்வந்து
மறைதலில் வாரத்தி னாலிறும் வஞ்சிவஞ் சிக்கொடியே.

வஞ்சித்தாழிசையும், வஞ்சித்துறையும், வஞ்சிவிருத்தமும், வஞ்சிப்பாவிற் கீறுமாறுமுணர்த்துத னுதலிற்று.

கூறளடிநான்கின் மூன்றொருதாழிசைகோதில் எ-து, இருசீரடி நான்காய் மூன்றுசெய்யுள் ஒருபொருண்மே லடுக்கிவருவன வஞ்சித் தாழிசையாம் எ - று. கோதிலென்று மிகுத்துச்சொல்லியவதனால், அவையொரு பொருண்மேல் மூன்றடுக்கி யல்லது வாராவெனக் கொள்க.

### வஞ்சித்தாழிசை.

மடப்பிடியை மதவேழந்
தடக்கையான் வெயின்மறைக்கும்

இடைச்சுர மிறந்தார்க்கே
நடக்குமென் மனனேகாண்.

பேடையை யிரும்போத்துத்
தோகையான் வெயின்மறைக்குங்
காடக மிறந்தார்க்கே
ஓடுமென் மனனேகாண்.

இரும்பிடியை மதவேழம
பெருங்கையான் வெயின்மறைக்கும்
அருஞ்சுர மிறந்தார்க்கே
விரும்புமென் மனனேகாண்.

(இ)வை இருசீரடிநான்காய் ஒருபொருண்மேன் மூன்றடுக்கிவந் தமையால் வஞ்சித்தாழிசை. வஞ்சித்துறையொருவாது தனிவருமாய் விடின் எ - து, இருசீரடிநான்காய் ஒருபொருண்மேலொன்றாய் வரு வது வஞ்சித்துறை எ-று.

வஞ்சித்துறை.

மைசிறந்தன மணிவரை
கைசிறந்தன காந்தளும்
பொய்சிறந்தனர் காதலர்
மெய்சிறந்திலர் விளங்கிழாய்.

இது குறளடிநான்காய் ஒருபொருண்மேற் றனியேவந்தது.

சூத்திரம்.

குறளடி நான்மையிற் கோவை மூன்றாய்
வருவன வஞ்சித் தாழிசை தனிவரிற்
றுறையென மொழிப துணிந்திசி னோரே.

சிந்தடிநான்கறை தருகாலைவிருத்தம் எ - து, முச்சீரடி நான்காய்வருவது வஞ்சிவிருத்தம் எ - று.

வஞ்சிவிருத்தம்.

சோலை யார்ந்த சுரத்திடைக்
காலை யார்கழ லார்ப்பவும்
மாலை மார்பன் வருமாயின்
நீல வுண்க ணிவள்வாழுமே.

இது சிந்தடிநான்காய் வந்தது.

சூத்திரம்.

சிந்தடி நான்காய் வருவன வஞ்சி
யெஞ்சா விருத்த மென்மனார் புலவர்.

என்பதியாப்பருங்கலம். தனிச்சொல்வந்து மறைதலில் வாரத திறலிறும் வஞ்சி எ-து, குறளடிவஞ்சிப்பாவும், சிந்தடிவஞ்சிப்பாவும், தனிச்சொற்பெற்று ஆசிரியச்சுரிதகத்தாலிறும் எ-று. மறைதலில் வாரமென்று சிறப்பித்தவதனல், வஞ்சிப்பா ஆசிரியச்சுரிதகத்தா லிறுவதல்லது வெள்ளைச்சுரிதகந்தா லிறப்பெறுதெனக் கொள்க.

குறளடி வஞ்சிப்பா.

பூந்தாமரைப் போதலமரத்
தேம்புனலிடை மீன்றிரிதரும்
வளவயலிடைக் களவயின்மகிழ்
வினைக்கம்பலை மனைச்சிலம்பவும்
மனைச்சிலம்பிய மணமுரசொலி
வயற்கம்பலைக் கயலார்ப்பவும்

தனிச்சொல். நாளும்,

சுரிதகம்.

மகிழ்துஉங் கூரன்
புகழ்த லானுப் பெருவுண் மையனே.

சிந்தடி வஞ்சிப்பா.

கோடிவாலன குருநிறத்தன குறுந்தாளன
வடிவாளெயிற் றழலுளேயன வள்ளுகிரன
பணையெருத்தி னிணையரிமா னணையேறித்
துணையில்லாத் துறவுநெறிக் கிறைவனாகி
எயினடுவ ணினிதிருந் தெவ்வுயிர்க்கும்
பயில்படுவினை பத்திமையிற் செப்பினோன்

தனிச்சொல். புணையெனத்,

சுரிதகம்.

திருவுறு திருந்தடி திசைதொழ
விரிவுறு நாற்கதி விடுநனி யெளிதே.

சூத்திரம்.

தூங்க லிசையன வஞ்சி மற்றவை
யாய்ந்த தனிச்சொலோ டகவலி னிறுமே.

என்பதியாப்பருங்கலம். அமுதேஎன்பதும், வஞ்சிக்கொடியே என்பதும் மகடூஉமுன்னிலை.

உதாரண முதனினைப்பு.

மடப்பிடி பேடை யிரும்பிடி வஞ்சியின் றூழினசயாம்
புனா கண்ணினல்லாய்மை சிறந்தன வான்றுனையாம்

தடப்பெருஞ் சோலை விருத்த மாகுந் தயங்குவஞ்சிக்
கொடித்தொடி பூந்தா மரைகொடி வால னுதாரணமே.

இவ்வுரைச் சூத்திரக்காரிகையின் வழியே வஞ்சிப்பாவினங்கட்குங் காட்டிய இலக்கியங்களை முந்துணிந்துகொள்க. (௧௬)

## மருட்பா.

பண்பார் புறநிலை பாங்குடைக் கைக்கிளை வாயுறைவாழ்த்
தொண்பாச் செவியறி வென்றிப் பொருண்மிசை யூனமில்லா
வெண்பா முதல்வந் தகவற்பின் னாக விளையுமென்றல்
வண்பான் மொழிமட வாய்மருட் பாவென னும்வையகமே

மருட்பாவாமா றுணர்த்துதனுதலிற்று. இதன்பொழிப்பு, புறநிலைவாழ்த்தும், கைக்கிளையும், வாயுறைவாழ்த்தும், செவியறிவுறூஉ மென்னும், நான்குபொருண்மேலும், வெண்பாமுதலாக ஆசிரியமீறாக வருமெனின் அதனை மருட்பாவென்று வழங்குவர் புலவர் எ-று வண்பான்மொழி மடவாய் எ-து, மகடூஉமுன்னிலை.

## சூத்திரம்.

வெள்ளை முதலா வாசிரிய மிறுதி
கொள்ளத் தொடுப்பது மருட்பா வாகும்.

## மநட்பா.

தென்ற லிடைபோழ்ந்து தேனார் நறுமுல்லை
முன்றின் முகைவிரியு முத்தநீர்த்—தண்கோளூர்க்
குன்றமர்ந்த கொல்லேற்றா னிற்புறங் காப்ப
என்றுந் தீரா நண்பிற் றேவர்
சீர்சால் செல்வமொடு பொலிமதி சிறந்தே.

இது வழிபடுதெய்வநிற் புறங்காப்பப் பழிதீர்செல்வமோ டொரு காலைக் கொருகாற்சிறந்து பொலிமினென்றமையாற் புறநிலைவாழ்த்து மருட்பா.

சூத்திரம்.

வழிபடு தெய்வநிற் புறங் காப்பப்
பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து
பொலிமி னென்னும் புறநிலை வாழ்த்தே
கலிநிலை வகையும் வஞ்சியும் பெறாஅ.

என்றார் தொல்காப்பியனார்.

கைக்கிளை மருட்பா.

திருநுதல் வேர்வரும்புந் தேங்கோதை வாடும்
இருநிலஞ் சேவடியுந் தோயும்—அரிபரந்த
சேயித ழுண்கணு மிமைக்கும்
ஆகு மற்றிவ ளகலிடத் தணங்கே.

சூத்திரம்.

காட்சி முதலாக் கலவியி னொருதலை
வேட்கையிற் புலம்புதல் கைக்கிளை யதுதான்
கேட்போ ரில்லாக் கிளவிகள் பெறுமே.

வாயுரைவாழ்த்து மருட்பா.

பலமுறைய மேம்பப் படுவன கேண்மின்
சொலன்முறைக்கட் டோன்றிச் சுடர்மணித்தே ரூர்ந்து
நிலமுறையி னுண்ட நிகரில்லார் மாட்டுஞ்
சிலமுறை யல்லது செல்வங்க ளில்லா

இலக்கு மெறிபடையு மாற்றலு மன்பும்
கலந்ததன் கல்வியுந் தோற்றமு மேனைப்
பொலன்செய் புனைகலனே டிவ்வாற னுறும்
விலங்கிவருங் கூற்றை விலக்கலு மாகா
அனைத்தாத னியிருங் காண்டீர்--நினைத்தக்க
கூறியவெம் மொழிமிறைமு யாது
தேறிநீ ரொழுகிற் சென்றுபயன் றருமே.

இது மெய்ப்பொருள் சொன்னமையால் வாயுறைவாழ்த்து மருட்பா.

சூத்திரம்.

வாயுறை வாழ்த்தே வயங்க நாடின்
வேம்புங் கடுவும் போல வெஞ்சொற்
றாங்குத லின்றி வழிநனி பயக்குமென்
றோம்படைக் கிளவியின் வாயுறுத் தன்றே.

என்றார் தொல்காப்பியனார்.

செவியறிவுறூஉ மருட்பா.

பல்யானை மன்னர் முருங்க வமருழந்து
கொல்யானைத் தேரொடுங் கோட்டந்து நல்ல
தலையாலங் கானம் பொலியத் தொலையாப்
படுகளம் பாடுக் காற்றிப் பகைஞர்
அடுகளம் வேட்டோன் மருக வடுதிறல்
ஆளி நிமிர்தோட் பெருவழுதி யென்னுன்றும்
ஈர முடைமை யென்வாய்ச்சொற் கேட்டி
உடைய வுழவரை நெஞ்சனுந்தக் கொண்டு

வருகாத லுழவர்க்கு வேளாண்மை செய்யல்
மழவ ரிழைக்கும் வரைக்கா ணிதியீட்டம்
காட்டு மமைச்சரை யாற்றத்தெளியல்
அமைத்த வரும்பொரு ளாறின்றி வெளவல்
இனத்தைப் பெரும்பொரு ளாசையாற்சென்று
மன்ற மறுக வகழாதி யென்றும்
மறப்புற மாக மதுரையா ரோம்பும்
அறப்புற மாசைப்பட் டேற்க வறத்தால்
அவையார் கொடுநாத் திருத்தி நவையாக
நட்டார் குழிசி சிதையாதி யொட்டார்
செவிபுதைக்குந் தீய கடுஞ்சொற் கவியுடைத்தாய்க்
கற்றார்க் கினனாகிக் கல்லார்க் கடிந்தொழுகிச்
செற்றார்ச் செறுத்துநிற் சேர்ந்தாரை யாக்குதி
அற்ற மறிந்த வறிவினாய்—மற்றும
இவையிவை வீயா தொழுகு நிலையாப்
பொருகட லாடை நிலமகள்
ஒருகுடை நீழற் றுஞ்சுவண் மன்னே.

இது வியப்பின்றி உயர்ந்தோர்கண் வியந்தொழுகுதல் கடனென வரசர்க்குரைத்தமையாற் செவியறிவுறூஉ மருட்பா.

சூத்திரம்.

செவியுறைதானே பொங்குதலின்றிப் புரையோர் நாப்ப ணவிதல் கடனெனச் செவியுறுத் தற்றே.

என்றார் தொல்காப்பியனார், என்றிப் பொருண்மிசையென்று மிகுத்துச்சொல்லியவதனால், இந்நான்கு பொருண்மேலுமன்றி மருட்பா வரப்பெறுமெனக்கொள்க.

சூத்திரம்.

புறநிலை வாயுறை செவியறி வுறூஉவெனத்
திறநிலை மூன்றுந் திண்ணிதிற் றெரியின்

வெண்பா வியலினு மாசிரிய வியலினும்
பண்புற முடியும் பாவின வென்ப.

என்றார் தொல்காப்பியனார். பண்பார் புறநிலையென்றும், ஒண்பரச்செவியறிவென்றுஞ் சிறப்பித்தவதனால் புறநிலைவாழ்த்தும, வாயுறைவாழ்த்தும், செவியறிவுறூஉம் இவ்வாறன்றி வெண்பாவேயாயும், ஆசிரியமேயாயும் வரப்பெறும். கலியும், வஞ்சியுமாய் வரப்பெறாவெனக்கொள்க.

சூ த் தி ர ம்.

கலிநிலை வகையும் வஞ்சியும் பெறா
வாயுறை வாழ்த்தே யவையடக் கியலே
செவியறி வுறூஉமென் றவையு மன்னே.

பாங்குடைக்கைக்கிளையென்று சிறப்பித்தவதனால், கைக்கிளையெல்லாப் பாவானும் வரப்பெறும், மருட்பாவேயாய் வருகவென்னும் யாப்புறவில்லையென்றும், கைக்கிளை வெண்பாமுதலாக வாசிரியமீறாக வரும்வழி ஆசிரியவடியிரண்டேயாய் அவற்றுள் ஈற்றயலடி முச்சீராய்வருமென்றும், வெண்பாவடியும், ஆசிரியவடியும், ஒத்து வருவன சமனிலைமருட்பாவென்றும், ஒவ்வாதன வியனிலைமருட்பாவென்றும் வழங்கப்படும். ஊனமில்லா வெண்பாவென்று சிறப்பித்தவதனால் வேற்றுவண்ணம் விரவாதுவெள்ளை வண்ணமெல்லா வண்ணத்துள்ளுஞ் சிறப்புடைத்தாய், மங்கலமரபிற்றாய், அவ்வாறே வேற்றுத்தளையும் அடியும், சீரும், விரவாமையால், எல்லாப்பாவினுள்ளும் வெண்பா சிறப்புடைத்தென்று முன்வைக்கப்பட்டதென்பது அறிவித்தற்கு வேண்டப்பட்டது.

வேதவாய் மேன்மகனும் வேந்தன் மடமகளும்
நீதியாற் சேர்ந்து நிகழ்ந்த நெடுங்குலம்போல்

ஆதிசால் பாவு மரசர் வியன்பாவும்
ஓதியவா றேத மருட்பாவா யோங்கிற்றே
பண்ணுந் திறமும்போற் பாவு மினமுமாய்
வண்ண விகற்ப வகைமையாற்
பண்ணின்
திறம்விளரிக் கில்லதுபோற் செப்ப லகவல்
இசை மருட்கு மில்லை யினம்.

## உதாரண முதனினைப்பு.

தென்ற லிடையுந் திருநுதல் வேர்வரும் பன்முறையென்
றொன்றிய பாவும்பல் யானையு மென்பவொண் போதமைந்த
பொன்றிக ழோதி புறநிலை கைக்கிளை வாயுறைவாழ்த்
தென்றிவற் றிற்குஞ் செவியறி விற்கு மிலக்கியமே.

இவ்வுரைச் சூத்திரக்காரிகையின்வழியே மருட்பா நான்கிற்கும் காட்டிய இலக்கியங்களை முதனினைத்துக்கொள்க.

## செய்யுளியல் செய்யுண்முதனினைப்பு.

வெண்பா வடம்பட வீரடி யொன்றுட னேரிசையும்
கண்பானல் போன்மயி லந்தமின் மூன்றுங் கடைதருக்கி
றண்பார் தரவொன் றசைதர வேயடி யோடுகுறள்
பண்பார் புறநிலை செய்யு ளியலென்ப பாவலரே.

## செய்யுளியல் முற்றிற்று.



மூன்றவது.

# ஒழிபியல்.

## அலகொழிப்பு.

சீருந் தளையுஞ் சிதையிற் சிறியஇ உஅளபோ
டாரு மறிவ ரலகு பெறுமைமைய காரணைவேல்
ஓருங் குறிலிய லொற்றள பாய்விடி னோரலகாம்
வாரும் வடமுந் திகழு முகிழ்முலை வாணுதலே.

இவ்வியலென்ன பெயர்த்தோவெனின், உறுப்பியலுள்ளும், செய்யுளியலுள்ளும் சொல்லாதொழிந்தவைகளை யுணர்த்தினமையால் ஒழிபியலென்னும் பெயர்த்து. இவ்வியலுள் இக்காரிகையென்னுதலிற்றோ வெனின், ஒருசார ரெழுத்துகட் கெய்தியதோ ரிலக்கணமுணர்த்துதனுதலிற்று.

சீருந்தளையுஞ் சிதையிற்சிறியஇஉ அளபோடாரு மறிவாலகு பெறுமை எ - து, சீருந்தளையுங் கெடவந்தவிடத்துக் குற்றியலிகரமும், குற்றியலுகரமும், உயிரளபெடையும் அலகு காரியம்பெறு எ-று. ஒற்றளபாய்விடி னோரலகாமென் றுரைத்தமையால், ஈண்டுயிரளபெடை கொள்ளப்பட்டது. ஆருமறிவரென்று மிகுத்துச்சொல்லியவதனால் குற்றியலிகரமும், குற்றியலுகரமும், ஒற்றியல்பினவாய் நிற்கும். உயிரளபெடைகள் நெட்டெழுத்தியல்பினவாய் நிற்கும், லவிமெயிடத்தெனக்கொள்க. எனவே எதிரது மறுத்தலென்னும் இலக்கணத்தாற் சீருந்தளையுந் திருந்தநிற்புழிச் சிறியஇஉ அளபோருமறிவாலகுபெறு மென்பதாயிற்று இன்னும், ஆருமறிவரென்று

மிகுந்துச்சொல்லியவதனுல். அவையலகு காரியம்பெறும்போது குற்றியலிகரமும், குற்றியலுகாரமும், குற்றெழுத்தின்பயத்தவாம். உயிரளபெடை யலகுகாரியம் பெறுமாறு தங்காரிகையுட் போக்கிச் சொல்லுதும்.

குற்றிய லிகரம்.

சிறுநன்றி யின்றிவர்க்கியாஞ் செய்தக்க ஞேப்
பெறுநன்றி பின்னும பெரிதென்—று றுநன்றி
தானவாய்ச் செய்வதுந் தான்மன் றெனபவே
வானவா முள்ளத் தவர்.

இதனுள், இன்றிவர்க்கியாமென்புழி குற்றியலிகரம்வந்து வெண்பாவினுள் வஞ்சியுரிச்சீராயிற்று. வெண்பாவினுள் வஞ்சியுரிசசீர் விரவுமென்னும், ஒத்தில்லாமையால் வெண்பா வழியழிற்குமாதலால், ஈண்டுக் குற்றியலிகரத்தை இவ்விலக்கணத்தால் அலகுபெருதென்று களையச் சீர்சிதையாதாம்.

குற்றிய லிகரம்.

குழலினி தியாழினி தென்பதம் மக்கள்
மழலைச்சொற் கேளா தவர்.
அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் றினல்.

இவற்றுள், குழலினிதியாழினிதென்புழி, ஆசிரியத்தளையும், அருளல்ல தியாதெனில், என்புழிக்கலித்தளையுந்தட்டு வெள்ளைத்தன்மை குன்றிப்போஞ்சீர் கனிபுகிற்புல்லாத யற்றளையென்னும் இலக்கணத்தோடும் வெள்ளையுட்பிறதளை வாராவல்லன, வெல்லாத்தளையு மயங்கியும்வழங்கும். என்னுமிலக்கணத்தோடும், மாறுகொள்ளுமாதலால், ஈண்டுக் குற்றியலிகரத்தை இவ்விலக்கணத்தால் அலகுபெ

ருதென்று களையச்சீருந்தளையும சிதையாவாம். இனிக் குற்றியலுகர த்திற்குச் சொல்லுமாறு.

குற்றிய லுகரம்.

கொன்று கோடுநீடு குருதி பாயவும்
சென்று கோடுநீடு செழுமலை பொருவன
வென்று கோடுநீடு விறல் வேழம்
என்று மூடுநீடு பிடியுள போலும்
அதனால்
இண்டிடை யிரவிவ ணெறி வரின்
வண்டுண் சோதை யுயிர்வா ழலளே.

சீரடி வஞ்சிப் பாவினுட் குற்றுகரம்வந்து, ஐந்தசைச சீரும், ஆறசைசசீருமாயின. இவ்வாறு வருகவென்னும் ஒத்தில்லா மையிற் குற்றுகரத்தை இவ்விலக்கணத்தால் அலகுபெறுதென்று களையச் சீருந்தளயுஞ் சிதையாவாம், இனி உயிரளபெடைக்குச் சொல்லுமாறு.

உயிரளபெடை.

பல்லுக்குத் தோற்ற பனிமுல்லை பைங்கிளிகள்
சொல்லுக்குத் தோற்றின்னந் தோன்றினவாள்--நெல்லுக்கு
நூறேறூநூ றென்பா னுடங்கிடைக்கு மென்முலைக்கும்
மாறேமா லன்றளந்த மண்.

இதனுள் நூறேஒநூறென்புழிப் பண்டமாற்றின்கண் அளபெ டை யநுகரணம்வந்து வெண்பாவினுள் நாலசைச்சீராயிற்று, அவ் வாறு வருகவென்னும் ஒத்தில்லாமையால் இவ்வாறகிட்டு உதார ணவாய்பாட்டால் ஓசையூட்டும்பொழுது ஓசையுண்ணுது செப்ப

லோசை பிழைத்து நிற்குமாதலால், ஈண்டு உயிரளபெடையை இவ விலக்கணத்தால் அலகுபெறுதென்று நெட்டெழுத்தேபோலக்கொண்டு அலகிடச் சீரும் தளையுஞ் சிதையாவாம்.

வெண்பா.

இடை முடங்க வீர்ங்கோதை பின்றாழ வாட்கண
புடைபெயரப் போழ்வாய் திறந்து—கடைகடையில
உப்போஒ வெனவுரைத்து மீள்வா ளொளிமுறுவ்ற
தொப்போ நீர்வேலி யுலகு.

இதனுள் உப்போஒவென்புழிப் பண்டமாற்றின்கண் அளபெடை யநுகரணம்வந்து கலித்தளைதட்டு வெண்பாவழிய நிற்குமாதலின ஈண்டியிரளபெடையை இவவிலக்கணத்தால் அலகுபெறுதென்று நெட்டெழுத்தே போலக்கொண்டு அலகிடத் தளை சிதையாதாம இனிக் குற்றியலிகர குற்றியலுகரங்கள், குற்றெழுத்தேபோல நின் றலகுபெறுமாறு.

வெண்பா.

வந்துநீ சேரி னுயிர்வாழும் வாராக்கால்
முந்தியாய் பெய்த வளைகழலும்—முந்தியாங்
கோளானே கண்டநங் கோல்குறியா யின்னுமோர்
நாளானே நாம்புணரு மாறு

இதனுள், வந்துநீயென்புழிக் குற்றியலுகரமும, முந்தியாலென்புழிக் குற்றியலிகரமும் வந்து சீருந்தளையுந் திருத்திநிற்புழிக் குற்றெழுத்தின் பயத்தவாய் அலகுபெற்றவாறு கண்டுகொள்க.

சூத்திரம்.

தளைசீர் வணந் தாங்கெட வரினே

குறுகிய விகாரமுங் குற்றிய லுகாரமு
மளபெடை யாவியு மலகியல் பிலவே.

என்பதியாப்பருங்கலம். ஐகாரநைவே லோருங்குறிலியல் எ-து, ஒன்றனை மாத்திரையென் மீறுதப்பட்ட ஐகாரக்குறுக்கம் குற்றெழுத்தேபோலக் கொண்டு அலகிடப்பெறும் எ-று. ஒருமென்பதிடைச் சொல்.

சூ த் தி ர ம்.

குறுமையெழுத் தினியல்பே
யைகா ரநெடுமை னீங்கியக்கால்.

எ ன் று ர ா க லி ன்.

ஐகாரக் குறுக்கம்.

அன்னை யையா னேவதவமா லணியிழாய்
புன்னை யையா னேவன் புலந்து.

நடைக்குதிரை யேறி நறுந்தார் வழுவி
அடைப்பையாய் கோறு வெனலும்--அடைப்பையான்
சுள்ளற் சிறுகோல் கொடுத்தான் றனைப்பெறினும்
கொள்ளாதி யாங்காண் டலே.

கெண்டையை வென்ற கிளரொளி யுண்கணாள்
பண்டைய ளல்லள் படி.

என்னும் இவற்றுள் ஐகாரக்குறுக்கம், குற்றெழுத்தேபோலக் குறிலோடும், நெடிலோடுங் கூடிநின்று நிரையசையாயினவாறும், தனியேநின்று நேரசையாயினவாறுங் கண்டுகொள்க. ஒற்றளபாய் விடினேர்காலம் எ - து, ஒற்றுக்கள் அளபெழுந்தவிடத்து நேரசையாம் எ-று.

சூத்திரம்.

ஆய்தமு மொற்று மளபெழ நிற்புழி
வேறல் கெய்தும் விதியின் வாகும்.

என்றார் காக்கைபாடினியார். அளபெழாதவிடத்து ஒற்றுக்கள் அலகுபெறா தென்பதாம்.

சூத்திரம்.

தனிநிலை யொற்றிவை தாமலகியலா
வளபெடை யல்லா காலையான
ஈரொற் றாயினு மூவொற் றாயினு
மோரொற் றியல வென்மனார் புலவர்.

கார்க்கடல், கார்ச்சேதம், கதிர்ச்செந்நெல், கடாய்க்கன்று என ஈரொற்றுடனிலையாய்நிற்பினும் குற்றெழுத்தின் பயத்தவாயலகு பெறாதென்பதூஉம், ஒற்றளபெழினும், மற்றோரெழுத்தினோடுங்கூ நிரையசையாகா தென்பதூஉம் பெறப்பட்டது.

கண்ண் கருவிளை கார்முல்லை கூரெயிறு
பொன்ன் பொறிசுணங்கு போழ்வா யிலவம்பூ
மின்ன் னுழைமருங்குன் மேக்கு சாயலாள்
என்ன் பிறமகளா மாறு
எஃஃகி லங்கிய கையரா யின்னுயிர்
வெஃஃகு வார்க்கில்லை வீடு.

இவற்றுள் ஒற்றும், ஆய்தமும், அளபெழுந்து ஓரலகுபெற்றவாறு கண்டுகொள்க. வாளும்வடமுந்திகழு முகிழ்முலைவாணுதலே எ-று, மகடூஉ முன்னிலை,

## அசை.

விடடிசைத் தலலான முதறகட் டனிககுறி னேரசையென
றெடடப் படாததற குணணு னுதாரண மோசைகுன்று
நெடடள பாய்விடி னோரேர் நிரையொடு நேரசையாம
இடடத்தி னறகுறில சேரி னிலககிய மோசிதைவே.

ஒருசார அசைகடகெயதியதோ ரிலககண முணாததறுதலுத விறறு

விடடிசைததலலான முதறகட்டனிககுறி னேரசையெனறு டடபபடாது எ-து, மேறபொதுவாகையாற றனிககுறினேரசையெனறாயினும, விடடிசைதது நினறவழியலலது மொழிமுதறகணினற தனிககுறறெழுதது நேரசையாமென் றுடமபடப பெறாது எ-று. எனவே விட்டிசையாதவழி மொழிமுதறகட்டனிக குறில குறிலோடு நெடிலோடுஙகூடி நிரையசையா மெனபதாயிறறு. அதற குணணுதாரணம எ-து.

## வெண்பா.

உணணு னொளிநிற னோஙகு புகழசெயயான
றுனனரும கேளிர துயாகளையான—கொனனே
வழஙகான பொருள்காத் திருப்பானேல அ ஆ
இழந்தானென றெணணப் படும.

இதனுள் அ-ஆ, என்புழி யருளின்கட் குறிப்பாய் மொழிமுதற்கணினற குற்றெழுதது விட்டிசைத்து நேரசையாயினவாறும, அலலாதவழி குறிலோடு நெடிலோடுங்கூடி நிரையசையாயினவாறுங கண்டுகொள்க.

வெண் பா.

வெறிகமழ் தண்புறவின் வீங்கி யுகளு
மறிமுலை யுண்ணாமை வேண்டிப்—பறிமுன்கை
அஉ மறியா வறிவி லிடைமகனே
நொ அலைய னின்னாட்டை நீ.

அ அவனும் இஇவனும் உஉவனுங் கூடியக்கால்
எஎவனை வெலலாரிகல்.

இவற்றின்கட் டனிக்குறின் முதற்கண்விட்டிசைத்து நேரசை யாயினவாறு கண்டுகொள்க. இவற்றுள் அஉமறியாவென்பது தற் சுட்டுக் குறிப்புச்சொல், நொ என்பது செயவெனெச்சத் திறுதிதொ க்கு முதனிலைகுறுகிய ஏவற்குறிப்புச்சொல், அஇஉஎ என்பன சுட்டு வினாவாகிய குறிப்புச்சொல். ஒட்டப்படாவென்று மிகுத்துச்சொல் லியவதனான், மொழிக்கு மூன்றிடத்தும், விட்டிசைத்துவந்த குற் றெழுத்து நேரசையாமென்பதூஉம், விட்டிசைப்பதுதான் குறிப்பு ஏவல் தற்சுட்டு வினாசுட்டென்னு மைந்தன்கண்ணு மென்பதூஉம், குற்றெழுத்து விட்டிசைத்துநின்றவிடத்து மற்றோரெழுத்தினோடுங் கூடி நிரையசையாகா தென்பதூஉம் பெறப்பட்டது.

சூத்திரம்.

அஇஎஉஒ இவைகுறிய மற்றையவேழ்
நெட்டெழுத்தா நேரப் படும்.

இதனுண் மொழிக்கு மூன்றிடத்தும் விட்டிசைத்துவந்த குற் றெழுத்து நேரசையாயினவாறு கண்டுகொள்க. இவைதற்சுட்டு ஏவ ல்வந்தவழிக் காண்க.

சூத்திரம்.

ஏவல் குறிப்பே தற்சுட்டல் வழி
யாவையுந் தனிக்குறின் முதலசை யாகா.

என்றார் மயேச்சுரர். ஓசைகுன்று நெட்டளபாய்விடினேர்நேர் எ-து, நெட்டெழுத்தளபெழுந்து வருமெனின் அஃது இரண்டுநேர சையாக வைக்கப்படும் எ-று. ஓசைகுன்றுவென்று மிகுந்துச்சொல் லியவதனால், மூன்றுமாத்திரையின் மிகவுச்சரிப்பினு நேர்நேராக வைக்கப்படுமெனக்கொள்க. நிரையொடு நேரசையா மிட்டத்தினற குறில்சேரின் எ - து, குற்றெழுத்தினோடு புணர்ந்தநெட்டெழுத்து அளபெழுந்தா லவ்விரண்டனையுங்கூட்டி நிரையசையும் நேரசையு மாக வைக்கப்படும் எ-று. இலக்கியமோர்சிதைவே.

வெண்பா.

ஏஎர் சிதைய வழாஅ லெழாஅநின்
சேயரி சிந்திய கண்,

இப்பாட்டு நேர்நேராதற்கும் நிரைநேராதற்கும் இலக்கியமாமெ ன்க. ஏஎர்-என நேர்நேராயிற்று. அழாஅல் எழாஅ என நிரைநேரா யிற்று. இட்டத்தினலென்று மிகுத்துச்சொல்லியவதனால், பின்னி ன்றகுறிலோடும் நெடிலோடுங்கூடி அளபெடை நிரையசையாகாதெ னக்கொள்க.

சூத்திரம்.

தனிநிலை யளபெடை நேர்நே ரியற்றே
யிறுதிநிலை யளபெடை நிரைநே ரியற்றே
யிறுதிநிலை யளபெடை நிரைநே ரியற்றே.

என்றார் நத்தத்தனார்.

## சீர் - தளை.

மாஞ்சீர் கலியுட் புகாகலிப் பாவின் விளங்கனிவந்
தாஞ்சீ ரடையா வகவ லகத்துமல் லாதவெல்லாந்
தாஞ்சீர் மயங்குந் தளையும தேவெள்ளைத் தன்மைகுன்றிப்
போஞ்சீர் கனிபுகிற் புல்லா தயற்றளை பூங்கொடியே.

சீருந்தளையுஞ் செய்யுளகத்து நிற்பதோர் முறைமை யுணர்த்து

மாஞ்சீர் கலியுட்புகா எ - து, தேமா புளிமாவென்னும் நேரீற்றியற்சீரிரண்டும், கலிப்பாவினுட் புகப்பெறா எ-று. கலிப்பாவின் விளங்கனிவந்தாஞ்சீரடையா எ - து, கருவிளங்கனி கூவிளங்கனி என்னும் நிரைநடுவாகிய வஞ்சியுரிச்சீரிரண்டும், கலிப்பாவினுட்புகப்பெறா எ-று. அகவலகத்தும் எ-து, ஆசிரியப்பாவினுள்ளும், கருவிளங்கனி கூவிளங்கனியென்னு மிரண்டுசீரும் புகப்பெறா எ-று. அல்லாதவெல்லாந் தாஞ்சீர்மயங்கும் எ-து, இவையொழிந்தசீர்களெல்லாம் பாவினுள்ளும் பாவினத்துள்ளும்வந்து மயங்கப்பெறும் எ-று. தளையுமதே எ-து, எல்லாத்தளையும், எல்லாப்பாவினுள்ளும், எல்லாப்பாவினத்துள்ளும் வந்து மயங்கப்பெறும் எ-று. வெள்ளைத்தன்மை குன்றிப்போஞ்சீர்கனிபுகில் எ-து, எல்லாச்சீரும் எல்லாப்பாவினுள்ளும், பாவினத்துள்ளும் வந்து மயங்கப்பெறுமென்றாராயினும், வஞ்சியுரிச்சீர் நான்கும் வெண்பாவிற்புகப்பெறா புகிற் செப்பலோசையழிந்து வேறுபட்டு [illegible]சையுண்ணுதுகெடும் எ-று. புல்லாதயற்றளை எ-து, எல்லாத்தளையும் எல்லாப்பாவினுள்ளும், பாவினத்துள்ளும் வந்து மயங்கப்பெறுமென்றாராயினும், வெண்பாவில் இயற்சீர்வெண்டளையும், வெண்சீர்வெண்டளையுமல்லது வேற்றுத்தளை விரவாது எ-று. பூங்கொடியே எ-து, மகடூஉமுன்னிலை.

※ குடநிலைத் தண்புறவில்—சென்ற வாறே.

என்னுந் தரவுகொச்சகக்கலிப்பாவில் நேரீற்றியற்சீரும், நிரை நடுவாகிய வஞ்சியுரிச்சீரும், வாராது நிரையீற்றாசிரிய வுரிச்சீரும், வெண்டாவுரிச்சீரும், நேர்நடுவாகிய வஞ்சியுரிச்சீரும்வந்து வெண்டளையும், ஆசிரியத்தளையும், கலித்தளையும், வஞ்சித்தளையு மயங்கிவந்த வாறு கண்டுகொள்க.

ஆசிரியப்பா.

நெடுவரைச் சாரற் குறுங்கோட்டுப் பலவின்
விண்டுவார் தீஞ்சுளை வீங்குகவுட் கடுவன்
உண்டு சிலம்பேறி யோங்கிய விருங்கழைப்
படிகம் பயிற்று மென்ப
மடியாக் கொலைவி லென்னையர் மலையே.

இவ்வாசிரியத்துள் தன்சீரும், வெண்சீரும், நேர்நடுவாகிய வஞ்சியுரிசீரும்வந்து வெண்டளையும், தன்றளையும், கலித்தளையும், வஞ்சித்தளையும் மயங்கிவந்தவாறு கண்டுகொள்க.

வஞ்சிப்பா.

மண்டிணிந்த நிலனும்
நிலனேந்திய விசும்பும்
விசும்புதைவரும் வளியும்
வளிதலைஇய தீயும்
தீமுரணிய நீரும்
புன்காற் புணர்மருதின்

---

※ இச்செய்யுளினை ககடு-வது பக்கத்திற்காண்க.

போதரும்பிய புனற்றாமரை
தேன்றாட்டீங் கரும்பின்
பூந்தாட் புனற்றாமரை
வார்காற் செங்கழுநீர்.

இக்குறளடி வஞ்சிப்பாக்களுள், வெண்சீரும், தன்சீரும், நேரீற்றியற்சீரும்வந்து வெண்டளையும், தன்றளையும், கலித்தளையும், ஆசிரியத்தளையு மயங்கிவந்தவாறு கண்டுகொள்க.

* முழங்குதிரைக் கொற்கைவேந்தன்.

என்னும் வெண்டுறையுள் வஞ்சியுரிச்சீரும், இயற்சீரும், வெண்சீரும், வஞ்சித்தளையும், ஆசிரியத்தளையும், வெண்டளையும், கலித்தளையும் மயங்கிவந்தவாறு கண்டுகொள்க.

கலிவிருத்தம்.

வளர்கொடியன மணம்விரிவன மல்லிகையொடு மௌவல்
நளிர்கொடியன நறுவிரையன நகுமலரன வகுளம்
குளிர்கொடியன குழைமாதவி குவிமுகையன கோங்கம்
ஒளிர்கொடியன வுயர்தளிரினொ டொழுகிணரன வோடை.

இக்கலிவிருத்தத்துள், நிரைநடுவாகிய வஞ்சியுரிச்சீரும், நேரீற்றியற்சீரும், வஞ்சித்தளையும், ஆசிரியத்தளையும், மயங்கிவந்தவாறு கண்டுகொள்க. நேரீற்றியற்சீர் ஒத்தாழிசைக்கலியுள் வாராதவாறும், நிரைநடுவாகிய வஞ்சியுரிச்சீர் கலிப்பாவுள்ளும், ஆசிரியத்துள்ளும் வாராதவாறும், வெண்பாவினுள்ளும், வஞ்சியுரிச்சீர் வாராதவாறும், வேற்றுத்தளை விரவாமையும், மேற்காட்டிய செய்யுளகத்தும் பிறவற்றுள்ளுங் கண்டுகொள்க. நேரீற்றியற்சீர் வெண்கலியுள்ளும், கொச்

* இச்செய்யுளினை அஎ-வது பக்கத்திற்காண்க.

சகத்துள்ளும் வருதலும், கிளைநவோகிய வஞ்சியுரிச்சீர் கொச்சகத்துள்ளுருகிவருதலும் செய்யுளோத்துள்ளே சொல்லப்பட்டன.

வெண்பா.

சூலாவணங்கு வில்லெயினர் கோன்கண்டன் கோழி
நிலாவணங்கு வெண்மணன்மே னின்று—புலா லுணங்கல்
கொள்ளும்புட் காக்கின்ற கோவின்மையோ நீபிறர்
உள்ளம்புக் காப்ப துளை.

இவ்வெண்பாவினுள் வஞ்சியுரிச்சீர்வந்தன வாலோவெனின், திருவள்ளுவப்பயன் நாலடிநானூறுமுதலாகிய கீழ்க்கணக்குள்ளும், முத்தொள்ளாயிர முதலாகிய சான்றோர்செய்யுளுள்ளும், வஞ்சியுரிச்சீர் வந்திலாமையானும், வெண்பாவினுள் வஞ்சியுரிச்சீர் வருகவென்னு மொத்தில்லாமையானும், வேற்றுத்தளை வெண்பாவினுள் வந்திலாமையானும், இத்தொடக்கத்தன குற்றமல்லது குணமாகாவென்பது காக்கைபாடினியார் முதலாகிய தொல்லாசிரியர் துணிவு, அதுவே இந்நூலுடையார்க்கு முடன்பாடு.

சூத்திரம்.

இயற்சீர் நேரீற்றுத் தன்றளை யடைதல்
கலிக்கியல் பிலவே காணுங் காலை
வஞ்சி யுள்ளும் வரத்தகா வாயினு
மொரோ விடத் தாகு மென்ப.

என்றார் பல்காயனார். கிளைநவில்லா வஞ்சியுரிச்சீர், கலியினோடகவலிற் கடிவனாயிலவே என்றாராகலின். (கூ)

அடி மயக்கம்.

இயற்றளை வெள்ளடி வஞ்சியின் பாத மகவற்றின்னான்
மயக்கப் படாவல்ல வஞ்சி மருங்கினெஞ் சாவகவல்

கயற்கணல் லாய்கலிப் பாதமு நண்ணுங் கலியினுள்ளான்
முயக்கப் படுமுதற் காலிரு பாவு முறைமையினே.

அடிமயக்க மாமாறுணர்த்துதனுதலிற்று.

இயற்றளை வெள்ளடி வஞ்சியின்பாத மகவலுள் மயக்கப்படா வல்ல எ-து, இயற்சீர் வெண்டளையான்வந்த வெண்பாவடியும், வஞ்சியடியும், ஆசிரியப்பாவினுள்வந்து மயங்கப்பெறும் எ-று.

சூத்திரம்.

இயற்சீர் வெள்ளடி யாசிரிய மருங்கி
னிலைக்குரி மரபி னிற்கவும் பெறுமே.

என்றார் தொல்காப்பியனார்.

சூத்திரம்.

வஞ்சி விரவ லாசிரிய முரித்தே
வெண்பா விரவினுங் கடிவரை யின்றே.

என்றார் பல்காயனார்.

ஆசிரியப்பா.

எறும்பி யளையுட் குரும்பல் சுனைய
உலைக்க லன்ன பாறை யேறிக்
கொடுவில் லெயினர் பகழி மாய்க்கும்
கவலைத் தென்பவர் தேர்சென்ற வாறே
அதுமற் றவலங் கொள்ளாது
நொதுமற் கலுழுமிவ் வழுங்க லூரே.

இயற்றளைவெள்ளடி, இதனுள் எறும்பியளையுட் குறும்பல்சுனை யஎ - து இயற்றளை வெள்ளடி இதனை எறும்பியளையுட் குறும்பல் சுனைய குறுந்தொடியாஞ் செல்சுரம் எனவுச்சரித்து வெள்ளடியா மாறு கண்டுகொள்க.

## ஆசிரியப்பா.

இருங்கட லுடுத்த பெருங்கண் மாநிலத்
துடைநிலை நடுவண திடைபிறர்க் கின்றித்
தாமே யாண்ட வேமங் காவலர்
இடுதிரை மணலினும் பலரே சுடுபிணக்
காடு பதியாகப் போகித் தத்தம
நாடு பிறர்கொளச் சென்றுமாய்ந் தோரே
அதனால், நீயுங் கேண்மதி யத்தை வீயா
துடம்பொடு நின்ற வுயிரு மில்லை
மடங்க லுண்மை மாயமோ வன்றே
கள்ளி வேய்ந்த முள்ளியம் புறங்காட்டு
வெள்ளில் போகிய வியலு ளாங்கண்
உப்பிலாவவிப் புழுக்கல்கைக்கொண்டு பிறர்க்குநோக்கா
திழி பிறப்பினோ னீயப் பெற்று
நிலங் கலனாக விலங்கு பலிமிசையு
மின்னு வைகல் வாரா முன்னே
செய்ந்நீ முன்னிய வினையே
முந்நீர் வரைப்பக முழுதுடன் றுறந்தே.

இதனுள் உப்பிலாவவிப் புழுக்கல் கைக்கொண்டு பிறர்க்கு நோக்கா எ-ம் இழிபிறப்பினோ னீயப்பெற்று எ-ம் வஞ்சியடி விரவிவந்த வாறு கண்டுகொள்க. மயக்கப்படுமென்றது மயக்கப்படா வல்லவெ

ன்றிருகால் விலக்கிச்சொல்லியவதனால் வெண்சீர்விரவிய இயற்றளை வெள்ளடியும் கலியடியும் ஆசிரியத்துள்ளருகி வரப்பெறுமெனக் கொள்க.

## ஆசிரியப்பா.

அங்கண் மதிய மரவின்வாய்ப் பட்டெனப்
பூசல் வாயாப் புலம்பு மனைக்கலங்கி
ஏதின் மாக்களு நோவார் தோழி
என்று நோவா ரில்லை
தண்கடற் சேர்ப்ப னுண்டவென் னலக்கே.

இதனுள், அங்கண்மதிய மரவின்வாய்ப்பட்டென எ-து, வெண் சீர்விரவிய வியற்றளை வெள்ளடி, இதனை அங்கண்மதிய மரவின் வாய்ப்பட்டெனப் பொங்கியபூசல்பெரிது எனவுச்சரித்து வெள்ளடி யாமாறு கண்டுகொள்க.

## ஆசிரியப்பா.

குருகுவேண் டாளி கோடுபுயத் துண்டென
மாவழங்கு பெருங்காட்டு மழகளிறு காணாது
மருள்பிடி திரிதருஞ் சாரல்
அருளா னுகுத லாயிழை கொடிதே.

இதனுள் இரண்டாமடிகலியடி, இதனை மாவழங்கு பெருங்கா ட்டு மழகளிறுகாணாது, தீவழங்குசுழல் விழிக்கட்சீயஞ்சென் றுழலு மே, எனவுச்சரித்துக் கலியடியாமாறு கண்டுகொள்க. வஞ்சிமருங்கி னெஞ்சாவகவல் கலிப்பாதமுமண்ணும் எ-து, வஞ்சிப்பாவினுள் ஆசி ரியவடியும், கலியடியும், விரவிவரப்பெறும் எ-று. எஞ்சாவகவலென் று சிறப்பித்ததனால், வஞ்சியுள் ஆசிரியவடி பயின்றுவரும். கலியடி யும், வெள்ளடியும், அருகியன்றி வாராவெனக்கொள்க. கயற்கணல்

லர்ய் எ-து, மகடூஉமுன்னிலை பட்டினப்பாலையென்னும் வஞ்சி நெடும்பாட்டினுள் ஆசிரியவடி பயின்றுவந்தன, கலியடியும் வெள்ளடியும் அருகினவெனக்கொள்க. நேரிழைமகளிருண் கண்கவரும் என்றித் தொடக்கத்தன.

வயலாமை புழுக்குண்டு வறள்அடம்பின் மலர்மிலைந்து:—

இதனை வயலாமை புழுக்குண்டு வறளடம்பின் மலர்மிலைந்து, கயனுட்டக் கடைசியர்தங் காதலர்தோண் மணந்தனரே என வுச்சரித்துக் கலியடியாமாறு கண்டுகொள்க.

கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழாய்:—

இதனைக் கோழி யெறிந்த கொடுங்காற் கனங்குழை யாழிசூழ் வையக்கணி எனயுச்சரித்து வெள்ளடியாமாறு கண்டுகொள்க. கலியினுள் மயக்கப்படு முதற்காலிருபாவும் எ-து, கலிப்பாவினுள் வெண்பாவடியும், ஆசிரியவடியும் புக்குமயங்கப்பெறும் எ-று. முறைமையினே எ-து, முறைமையோடுங்கூட்டி வழங்கப்படும் எ-று.

சூத்திரம்.

ஆசிரியப்பாவி னயற்பா வடிமயங்கும்
ஆசிரியம் வெண்பா கலிக்கண்ணும்—ஆசிரியம்
வெண்பாக் கலிவிரவும் வஞ்சிக்கண் வெண்பாவின்
ஒண்பா வடிவிரவா வுற்று.

இதனை விரித்துரைத்துக்கொள்க. காமர்கடும்புனலென்னு மயங்கிசைக் கொச்சகக்கலிப்பாவினுள் வெண்பாவும், ஆசிரியப்பாவும், மயங்கினவாறு கண்டுகொள்க. ஆல் இரண்டும் அசை." (௯)

அடி-தொடை.

அருகிக் கலியோ டகவன் மருங்கினையுஞ் சீரடியும்
வருதற் குரித்தென்பர் வான்றமிழ் நாவலர் மற்றொருசார்

கருதிற் கடையே கடையிணை பின்கடைக் கூழையுமென்
றிரணத் தொடைக்கு மொழிவ ரிடைப்புணர் வென்பதுவே.

ஒருசாரடிக்கும், தொடைக்குமெய்தியதோ ரிலக்கணமுணர்த் துதனுதலிற்று.

அருகிக்கலியோ டகவன் மருங்கினையுஞ், சீரடியும், வருதற்கு ரித்தென்பர் வான்றமிழ்நாவலர் எ-து, ஒருசார்கலிப்பாவினுள்ளும், ஆசிரியப்பாவினுள்ளும், ஐஞ்சீரடியு மருகிவரப் பெறுமென்று சொல் லுவர் புலவர் எ-று.

அணிகிளர் சிறுபொறியவிர் துத்திமாநாகத் தெருதம்தேறித்
துணியிரும் பனிமுந்நீர் தொட்டுழந்து மலைந்தனையே.

இக்கலிப்பாவில் முதலடி ஐஞ்சீரடி வந்தவாறு கண்டுகொள்க.

ஆசிரியப்பா.

உமணர்ச் சேர்ந்து கழிந்த மருங்கி னகன்றலை
ஊர்பாழ்த் தன்ன வோமையம பெருங்காட்
டின்னு வென்றீ ராயின்
இனிய வோபெரும் தமியேற்கு மனையே.

இவ்வாசிரியத்துள் முதலடி ஐஞ்சீர் வந்தவாறு கண்டுகொள்க. ரியகட் பெறினேயென்னு மிணைக்குறள் ஆசிரியப்பாவினுள்ளும் ஐஞ்சீரடி வந்ததெனக்கொள்க.

சூத்திரம்.

வெண்டளை விரவியு மாசிரியம் விரவியு
மைஞ்சீ ரடியு முளவெனமொழிப.

என்றார் தொல்காப்பியனார். வெண்பாவினுள் ஐஞ்சீரடி வரப் பெறாதெனக்கொள்க.

சூத்திரம்.

ஐஞ்சீ ரடுத்தலு மண்டில மாகலும்
வெண்பா யாப்பிற் குரிய வல்ல.

என்று நந்தத்தனார் அடிநூலிலெடுத்தோதினார். மற்றொருசார கருதிற்கடையே கடையிணைபின் கடைகூழையுமென் றிரணத்தொடைக்கு மொழிவரிடைப் புணரென்பதுவே எ-து, ஒருசாராசிரியா முரண்டொடையைக் கடைமுரணும், கடையிணை முரணும், பின் முரணும், கடைக்கூழைமுரணும், இடைப்புணர் முரணுமென்று வேண்டுவர் எ-று.

இரணத்தொடை யெனினும், பகைத்தொடை யெனினும, முரண்டொடையெனினும் ஒக்கும்.

சூத்திரம்.

மொழியினும் பொருளினு முரணத் தொடுப்பி
னிரணத் தொடையென் றெய்தும் பெயரே
மறுதலை யுரைப்பினும் பகைத்தொடை யாகும்.

அவற்றுள் கடைமுரணாவது அடிதோறு மிறுதிச்சீர்க்கண் மறுதலைப்படத்தொடுப்பது, கடையிணைமுரணாவது கடையிருசீர்க்கண்ணும் மறுதலைப்படத் தொடுப்பது பின்முரணாவது, இரண்டாஞ்சீர்க்கண்ணும், நான்காஞ்சீர்க் கண்ணும், மறுதலைப்படத் தொடுப்பது, கடைக்கூழை முரணாவது முதற்சீர்க்கணின்றி யொழிந்த மூன்றுசீர்க்கண்ணும் மறுதலைப்படத் தொடுப்பது, இடைப்புணர் முரணாவது நடுவிருசீர்க்கண்ணும் மறுதலைபடத் தொடுப்பது.

ஆசிரியப்பா.

கயன்மலைப் பன்ன கண்ணிணை களிதே
தடமுலை திவளுந் தனிவடம் வெளிதே
நாவி னுண்ணிடை சுறிதே
ஆடமைத் தோளிக் கல்குலோ பெரிதே.

இஃது அடிதோறு மிறுதிச்சீர்க்கண் மறுதலைப்படத் தொடுத்தமையாற் கடைமுரண்.

ஆசிரியப்பா.

மீன்றேர்ந் தருந்திய கருங்கால் வெண்குருகு
தேனார் ஞாழல் விரிசினை குழூஉம்
தண்ணந் துறைவன் றவிர்ப்பவுந் தவிரான்
தேரேர் காணலங் காண்டும்
பீரேர் வண்ணமுஞ் சிறுநுதற் பெரிதே.

இது அடிதோறுங் கடையிருசீர்கண்ணும் மறுதலைப்படத்தொடுத்தமையால் கடையிணைமுரண்.

ஆசிரியப்பா.

சார லோங்கிய தடந்தாட் டாழை
கொய்மலர் குவிந்து தண்ணிழல் விரிந்து
தமியே யிருந்தன மாக நின்றுறுதன்
நலனுடைப் பணிமொழி நன்கு பலபயிற்றி
வீக்குதொடிப் பணைத்தோ ணெகிழத்
துறந்தோ னல்லனம் மேனியோ தீதே.

இது அடிதோறுங் கடைச்சீரும், இரண்டாஞ்சீரும், மறுதலைப்படத் தொடுத்தமையாற் பின்முரண்.

ஆசிரியப்பா.

காவியங் கருங்கட் செவ்வாய்ப் பைந்தொடி
பூவிரி சுரிமென் கூந்தலும்
வேய்புரை தோளு மணங்குமா லெமக்கே.

இது முதற்சீரொழிந்த மூன்றுசீரும் மறுதலைப்படத் தொடுத்தமையால் கடைக்கூழைமுரண்.

ஆசிரியப்பா.

போதுவிரி குறிஞ்சிறி நெடுந்தண் மால்வரைக்
கோதையிற் றாழ்ந்த வோங்கல்வெள ளருவி
காந்தளஞ் செங்குலைப் பகங்கூ தாளி
வேரல் விரிமலர் முகையொடு விரா இப்
பெருமலைச் சீறா ரிழிதரு நலங்கவர்ந்
தின்னு வாயி னினியோர் மாட்டே.

இஃது இடையிருசீரும் மறுதலைப்படத் தொடுத்தமையா லிடைப்புணர்முரண், இவ்வாறுசொன்னார் கையனார் முதலாகிய வாசிரியரெனக்கொள்க. இனி இரணத்தொடைக்கு மென்றவுமையால் ஒழிந்த மோனை, இயைபு, எதுகை, அளபெடையென்னுந் தொடைகான்கிற்று மிவ்வாறே யொட்டிக்கொள்க. அவைக் கூடிவழங்குமாறு கடைமோனை, கடையிணைமோனை, பின்மோனை, கடைக்கூழை மோனை, இடைப்புணர்மோனை எ - ம், கடையியைபு, கடையிணை யியைபு, பின்னியைபு, கடைக்கூழையியைபு, இடைப்புணரியைபு எ-ம், கடையெதுகை, கடையிணையெதுகை, பின்னெதுகை, கடைக்கூழையெதுகை, இடைப்புணரெதுகை எ - ம், கடையளபெடை, கடையிணையளபெடை, பின்னளபெடை, கடைக்கூழையளபெடை,

இடைப்புணரளபெடை எ-ம் கண்டுகொள்க. இவற்றிற் கிலக்கியம் யாப்பருங்கல விருத்தியுட் கண்டுகொள்க. (௫)

## எதுகை-மோனை

வருக்க நெடிலினம் வந்தா லெதுகையு மோனையுமென்
றொருக்கப் பெயரா னுரைக்கப் படுமுயி ராசிடையிட்
டிருக்கு மொருசா ரிரண்டடி மூன்று மெழுத்துமொன்றி
நிரக்கு மெதுகையென் றுலுஞ் சிறப்பில நேரிழையே.

ஒருசாரெதுகைக்கும் மோனைக்குமெய்தியதோ ரிலக்கணமுண ர்த்துதனுதலிற்று.

வருக்கநெடிலினம் வந்தாலெதுகையு மோனையுமென்றொருக்கப் பெயரானுரைக்கப்படும் எ-து, வருக்கவெழுத்தும், நெடிலெழுத்தும், இனவெழுத்தும், எதுகையும், மோனையுமாய்வந்தால் அவற்றை வருக்கவெதுகை, நெடிலெதுகை, இனவெதுகை எ-ம. வருக்கமோனை, நெடின்மோனை, இனமோனை எ-ம். பெயரிட்டு வழங்கப்படும் எ-று.

வெண்பா.

நீடிணர்க் கொம்பர்க் குயிலாலத் தாதிப்
பாடும் வண்டஞ்சி யகலும் பருவத்துத்
தொடார்தொடி நெகிழ்த்தா ருள்ளார் படரெல்லாப்
பாடமை சேக்கையுட் கண்.

இது டகரமெய் வருக்கவெதுகை.

அறத்தா றிதுவென வேண்டா சிவிகை
பொறுத்தானோ டூர்ந்தா னிடை.

இது நகரமெய் வருக்கவெதுகை.

ஆவாவென்றே ஒருசாரார்:—

என்பதிரண்டா மெழுத்தொன்றாதாயினும் இரண்டாமெழுத்தின்மேலேறிய நெடிலொப்புமைநோக்கி நெடிலெதுகையென்று வழங்கப்படும். இனி இனவெதுகை மூன்றுவகைப்படும். வல்லினவெதுகையு, மெல்லினவெதுகையும், இடையினவெதுகையு மென வ-று. வெம்தக்கார்தகவிலா ரென்பதவரய ரெச்சத்தாற் காணப்படும், இது

வெண்பா.

அன்பினு மார்வ முடைமை யதுவீனு
நண்பென்னு நாடாச் சிறப்பு.

இது மெல்லினவெதுகை.

வெண்பா.

எல்லா விளக்கும் விளக்கல்ல சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு.

இது இடையினவெதுகை. வருக்கமோனை முதலாகிய மூன்றும் வருமாறு.

ஆசிரியப்பா.

பகலே பூங்கானற் கிள்ளை யோப்பியும்
பாசிலைக் குளவியொடு கூதளம் விரைஇப்
பின்னுப் பிணியவிழ்ந்த நன்னெடுங் கூந்தர்
பீர்கப் பெய்து தேம்படத் திருகிப்
புனைபீ ரோதி செய்குறி நசைஇப்

பூந்தார் மார்ப புனத்துட் டோன்றிப்
பெருவரை யடுக்கத் தொருவே லேந்திப்
பேயு மறியா மாவழங்கு பெருங்காட்டுப்
பைங்க ணுழுவைப் படுபகை வெரீஇப்
பொங்கு சினந்தணியாப் பூநுத லொருத்தல்
போகாது வழங்கு மாரிரு ணடுநாள்
பௌவத் தன்ன பாயிரு ணீந்தியிப்
பொழுது வருகுவை யாயி
னற்றூர் மார்ப தீண்டலெங் கதுப்பே.

இது பகரமெய் வருக்கமோனை.

ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம்
ஓதலிற் சிறந்தன் றொழுக்க முடைமை.

இது முதலெழுத் தொன்றாதாயினும், முதலெழுத்தின்மேலேறிய நெடிலொப்புமைநோக்கி நெடின்மோனையென்று வழங்கப்படும். இனி இனமோனை மூன்றுவகைப்படும். வல்லினமோனையும், மெல்லினமோனையும், இடையினமோனையுமென்.

ஆசிரியப்பா.

கயலே ருண்கண் கலுழ நாளும்
சுடர்புரை திருநுதல் பசலை பாயத்
திருந்திறை யமைத்தோ ளரும்பட ருழப்பப்
போகல் வாழி யைய பூத்த
கொழுங்கொடி யணிமலர் தயங்கப்
பெருந்தண் வாடை வரூஉம் பொழுதே.

இஃதெல்லாவடியு முதற்கண்ணே வல்லெழுத்து வந்தமை யான் வல்லினமோனையும், மெல்லினமோனையும், இடையினமோனையும வந்தவழிக் கண்டுகொள்க.

சூத்திரம்.

ஒருக்க நெடிலினம் வரையா ரான்டே
நெடிய பிறவு மினத்தினு மாகும்.

என்றார் பிறருமெனக்கொள்க, ஒருக்கப்பெயராளென்று சிறப்பித்தவதனால் ஒருசாராசிரியர் தலையாகெதுகை, இடையாகெதுகை, கடையாகெதுகை என்றும் தலையாகுமோனை, இடையாகுமோனை, கடையாகுமோனை என்றும் வேண்டுவரெனக்கொள்க.

சூத்திரம்.

சீர்முழு தொன்றிற் றலையா கெதுகை
யோரெழுத் தொன்றி னிடைகடை பிறவே.

என்றாராகலின். இச்சூத்திரத்தான் மோனைக்கும் இவ்வாறே விரித்துரைத்துக்கொள்க.

வெண்பா.

சிலைவிலங்கு நீள்புருவஞ் சென்றொசிய நோக்கி
முலைவிலங்கிற் றென்று முனிவாள்—மலைவிலங்கு
தார்மாலை மார்ப தனிமை பொறுக்குமோ
கார்மாலை கண்கூடும் போது.

எ-து, தலையாகெதுகை.

அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு.

எ-து, இடையாகெதுகை.

தக்கார் தகவில ரென்ப தவரவர்
எச்சத்தாற் காணப் படும்.

எ-து, கடையாகெதுகை.

பற்றுக பற்றற்றான் பற்றினைப் பற்றைப்
பற்றுகப் பற்றுவி டற்கு.

எ-து, தலையாகுமோனை.

ஆசிரியப்பா.

மாவும் புள்ளும் வதிவயிற் படர
மாநீர் விரிந்த பூவுங் கூம்ப
மாலை தொடுத்த கோதையுங் கமழ
மாலை வந்த வாடை
மாயோ ளின்னுயிர்ப் புறத்திறுத் தன்றே.

எ-து, இடையாகுமோனை.

ஆசிரியப்பா.

பகலே பூங்கானற் கிள்ளை யோப்பியும்
பாசிலைக் குளவியொடு கூதளம் விரைஇப்
பின்னுப் பிணியவிழ்ந்த நன்னெடுங் கூந்தல்
பீர்ங்கப் பெய்து தேம்படத் திருகிப்
புனையீ ரோதி செய்குறி நசைஇப்
பூந்தார் மார்ப புனத்துட் டோன்றிப்
பெருவரை யடுக்கத் தொருவே லேந்திப்
பேயு மறியா மாலழங்கு பெருங்காட்டுப்

பைங்க ணுழுவைப் படுபகை
பொங்கு சினந்தணியாப் பூறுத லொருத்தல்
போகாது வழங்கு மாரிரு ணடுநாள்
பௌவத் தன்ன பாயிரு ணீந்தியிப்
பொழுது வருகுவை யாயி
னற்றார் மார்ப நீண்டலெங் கதுப்பே.

எ-து, கடையாகுமோனை.

உயிராசிடை யிட்டிருக்கு மொருசாரிரண்டடி மூன்றாமெழுத்துமொன்றி நிரக்குமெதுகையென்றாலுஞ் சிறப்பில் எ-து உயிரெதுகை, ஆசெதுகை, இடையிட்டெதுகை, இரண்டடியெதுகை, மூன்றாமெழுத்தொன்றெதுகை யென்றொரு சாரெதுகையு முளவாயினும் பெறியதோர் சிறப்பிலவெனக்கொள்க. சேரிமொழியே எ-து மகடூஉ முன்னிலை.

ஆசிரியப்பா.

துளியொடு மயங்கிய தூங்கிரு ணடுநாள்
அணிகிளர் தாரோ யருஞ்சுர நீந்தி
வடிவமை யெஃகம் வலன்வயி னேந்தித்
தனியே வருதி நீயெனின்
மையிருங் கூந்த லுய்தலோ வரிதே.

இஃதிரண்டாமெழுத் தொன்றாதாயினும், இரண்டாமெழுத்தின் மேலேறிய வுயிரொன்றிவந்தமையால் உயிரெதுகை, இனி ஆசெதுகை, யரலழவொற்றுநான்கும் ஆசாய்வருமெனக் கொள்க.

சூத்திரம்.

யரலழ வென்னு மீரிரண் டொற்றும்

வரன்முறை பிறழாது வந்திடை யுயிர்ப்பினஃ
தாசிடை யெதுகையென் றறைதல் வேண்டுமே.

என்றாராகலின,

விருத்தம்.

காய்மாண்ட தெங்கின பழம்வீழ கமுகினெற்றிப்
பூமாண்ட தீந்தேன் றொடைகீறிவருக்கை போழ்ந்து
தேமாங் கனிசிதறி வாழைப்பபழங்கள சிந்தும
ஏமாங் கதமென் றிசையாற்றிசை போயதுண்டே.

இது யகரவொற்றிடை வந்த ஆசெதுகை.

கலிவிருத்தம்.

மாகக்கொடி யானையு மௌவற பந்தரும்
காரகக்கொடி முல்லையுங் கலந்து மலலிகைப்
பூகக்கொடிப் பொதுமபருங் கான ஞாழலும
தூகக்கொடி கமழ்ந்துதான் றுறகக மொத்ததே.

இது ரகரவொற்றிடைவந்த ஆசெதுகை.

வெண்பா.

ஆவே றுருவின வாயினு மாபயந்த
பாலவே றுருவின வலலவாம—பால்போல
ஒருதன்மைத் தாகு மறநெறி யாபோல
உருவுபலகொள ளீங்கு.

இது லகரவொற்றிடைவந்த ஆசெதுகை.

வெண்பா.

அந்தரத் துள்ளே யகங்கை புறங்கையா
மந்தரமே போலு மனைவாழ்க்கை—யந்தரத்து
வாழ்கின்றே மென்று மகிழன்மின் வாழ்நாளும்
போகின்ற பூளையே போன்று.

இது ழகரவொற்றிடைவந்த ஆசெதுகை.

ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லாம்
ஓதலிற் சிறந்தன் றொழுக்க முடைமை.

இது ஆகிடையிட்டுவந்த வல்லினவெதுகை, பிறவும் வந்தவழிக் கண்டுகொள்க. இடையிட்டெதுகை வருமாறு.

ஆசிரியப்பா.

தோடா ரெல்வளை நெகிழ நாளு
நெய்த லுண்கண் பைதல் லுழல்க
வாடா வவ்வரி புதைஇப் பசலையும்
வைக றோறும் பையப் பெருகி
நீடா ரிவரென நீண்மணங் கொண்டார்
கேளார் கொல்லோ காதலர் தோழி
வாடாப் பௌவ வறன்முகந் தெழிலி
பருவம் பொய்யாது வலனேர்பு வளைஇ
ஓடா மலையன் வேலிற்
கடிது மின்னுமிக் கார்மழைக் குரலே.

இஃது அடிதோறும் இடையிட்டுவந்தமையால் இடையிட்டெதுகை. இது தொல்காப்பியனார்காட்டிய பாட்டு.

விருத்தம்.

தாதுவண்ண மிடையிட்டுவந்த வெதுகைத்தாகும்.

என்றாராகலின். இரண்டடியெதுகை வருமாறு.

துளைவக்குந் துளிமுந்நீர்க் கொற்கை மகளிற்
அலைப்பதம் பல்லிற் கழகொவ்வா முத்தம்
மணங்கமழ்தா ரச்சுதன் மண்காக்கும வேலின்
அணங்கு மமுதமு மன்னலார் பாடல்.

இது முன் இரண்டடியுமோ ரெதுகையாய்ப் பின் இரண்டடியுமோ ரெதுகையாய் வந்தமையால் இரண்டடி எதுகை.

சூத்திரம்.

இரண்டடி யெதுகை திரண்டொருங் கியன்றபின்
மூரண்ட லெதுகை யிரண்டில வரையார்.

என்றாராகலின். மோனைக்குமவ்வாறே யொட்டிக்கொள்க.

விருத்தம்.

ஆகங் கண்டக ராளற்ற வாடவர்
ஆகங்கண் டகத்தா லற்ற வன்பினர்
பாகங் கொண்டு பயோதரஞ் சேர்த்தினர்
பாகங் கொண்டு பயோதர நண்ணினர்.

இது முன் இரண்டடியும் ஒருமோனையாய்ப் பின்இரண்டடியு மற்றொருமோனையாய் வந்தமையால் இரண்டடிமோனை.

வெண்பா.

பவழமும் பொன்னுங் குழையிடு முத்தின்
திகழரும் பின்றனபுன் னே.

பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்.

இவை மூன்றுமெழுத்தொன்றெதுகை, கிரக்குமெதுகையென்று சிறப்பித்தவதனால், விட்டிசை வல்லொற்றெதுகையென்றும், விட்டிசைமோனையென்றும் வேண்டுவாருமுளரெனக்கொள்க.

வெண்பா.

. பற்றுப் பலகாலும் பான்மறு யுண்ணுமை
நொஅலைய னின்னுட்டை நீ.

இது வல்லொற்றடுத்தாற்போல விட்டிசைத்த குற்றெழுத்தினோடு புணர்ந்தமையால் விட்டிசைவல்லொற் றெதுகை.

வெண்பா.

அஅவனும் இஇவனும் உஉவனும் கூடியக்கால்
எஎவனை வெல்லா ரிகல்.

இது முதலெழுத் திரண்டடிக்கண்ணும் விட்டிசைத்துவந்தமையால் விட்டிசைமோனை. இவையெல்லாஞ் சிறப்பிலவெனக்கொள்க. இன்னுமொருக்கப் பெயரானுனாக்கப்படுமென்று சிறப்பித்தவதனால் பாவினங்களெல்லாந் தொடையானும், வருமென்றுராயினும் பெரும்பான்மையுந் தலையாகுமோனையிற்றிரிந்தும் தலையாகெதுகையிற்றிரிந்தும் வாராவென்பதூஉம் செந்தொடையொழித்தெல்லாத் தொடைக்கும் இனவெழுத்து வரத்தொடுப்பதூஉம், வழியெதுகை வரத்தொடுப்பதூஉம், வழிமுரண்வரத்தொடுப்பதூஉம் சிறப்புடைத்தெனக்கொள்க. இனவெழுத்துப்பெற்று மோனைமுதலாகிய தொடையுந் தொடைவிகற்பமு போலாமை வேறுபடத்தொடுப்பது மருட்செந்தொடை எனக்கொள்க. இனவெழுத்தாமாறு ஞானமொத்குறிலும் நெடிலுந் தம்முளினமாம். அவை அகர-ஆகார-ஐகார-ஔ

காரங்க டம்முளினமாம். இகர-ஈகார-எகர-ஏகாரங்கள் தம்முளினமாம். உகர-ஊகார-ஒகர-ஓகாரங்கள் தம்முளினமாம். இவையேறிய வுயிர்மெய்க்கும் இவ்வாறேகொள்க. ஒற்றினுள் சகர தகரங்கள் தம்முளினமாம். ஞகர நகரங்கள் தம்முளினமாம். மகர வகரங்கள் தம்முளினமாம். இவற்றை அநுவென்று வழங்குவாருமுளர்.

வெண்பா.

அகரமோ டாகார மைகார மௌவாம்
இகரமோ டீகார மெஏ-உகரமோ
டூகார மொஓ ஞநமவதச் சகரம்
ஆகாத வல்ல வநு.

என்றாராகலின் அவற்றுட் சிலவருமாறு.

ஈத்துவக்கு மின்ப மறியார்கொ றுமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்
அமிழ்தினு மாற்ற வினிதே தம்மக்கள்
சிறுகை யளாவிய கூழ்.

இவை யினவெழுத்துப்பெற்று மோனை முதலாகியதொடையும் தொடைவிகற்பமும் போலாமை வேறுபடத் தொடுத்தமையான் மருட்சேர்தொடை, பிறவுமன்ன இனிவழியெதுகை வருமாறு.

விருத்தம்.

மண்டலம் பண்டுண்ட திண்டேர் வரகுணன் றெண்டியி ஞ்வாய்க், கண்டலர் தண்டுறைக் கண்டதொான் றண்டுகளமகர, குண்டலங் கெண்டை யிரண்டொடு தொண்டையுங் கொண்டோர் திங்கள், மண்டலம் வண்டலும் புக்கொண்டறுழ லுருகின்றதே.

கோக்குதக்கு முதலாயினவுங்கொள்க. அநுப்பிராச மென்னு ம்வடமொழியை வழியெதுகை யென்பது தமிழ்வழக்கு, இனி வழி மூரண்வருமாறு.

விருத்தம்.

செய்யவாய்ப் பசும்பொன்னோலைச் சீரடிப்பரவை யல்குல்
ஐயநுண் மருங்குநோவ வடிக்கொண்ட ருவவுக்கொங்கை
வெய்யவாய்த் தண்மணிலம் விரிந்தென விலங்கிநீண்ட
மையவர் மழைக்கட் கூந்தன் மகளினை வருகவென்றான்.

ஒருமால்வரை நின்றிரு சுடரோட்டி மூந்நீர்கிடந்த
பெருமானிலனுஞ் சிறுவிலைத்தா வுண்டு பேதையர்கண்
பொருமாதவித் தொங்கலெங்கோன் புரவலன் பூம்பொதியிற்
கருமாவிழிவெண்பற்செவ்வாய்ப் பசும்பொற்கனங்குழைக்கே.

மோனையெதுகையிற் றிரிந்து பாவுமினமும் வாராமை மேற் காட்டியவற்றுள்ளும், பிறவற்றுள்ளுங் கண்டுகொள்க.

## தரவுதாழிசைகட் கடிநியமம்.

சுறுக்கிற்று மூன்றடி யேனைத் தரவிரு மூன்றடியே
தரங்கக்கும் வண்ணகக் குந்தர வாவது தாழிசைப்பா
சுருங்கிற் றிரண்டடி யொக்க மிரட்டி சுரும்பிமிரும்
தரங்கக் குழலாய் சுருங்குந் தரவினிற் றாழிசையே,

தரவு தாழிசைகட்கு அடிவரையறையா மாறுணர்த்துதனுத லிற்று.

சுருங்கிற்று மூன்றடியேனைத்தரவு எ-து, அம்போதரங்கவொ த்தாழிசைக் கலிப்பாவும, வண்ணகவொத் தாழிசைக்கலிப்பாவும், ஒழித்தல்லாத கலிப்பாவிற்குத் தரவுமூன்றடியே சிறுமை, பெருமை பாடுவோனது பொருண்முடிவுகுறிப்பே வரையறையில்லை எ - று. இருமூன்றடியே தரங்கக்கும் வண்ணகக்குந் தரவாவது எ-து, அம் போதரங்க வொத்தாழிசைக்கலிப்பாவிற்கும், வண்ணகவொத்தாழி சைக் கலிப்பாவிற்கும் பெருக்கசுருக்கமில்லை, ஆறடியே தரவாவது எ-று. சுருங்கிற்று மூன்றடியேனைத் தரவென்றாராயினும் வெள்ளைக் கிரண்டடியென்னுங் காரிகையுள், கலிப்பாவிற்கு நான்கடி சிறுமை சொன்னமையால் தரவுகொச்சகக்கலிப்பாவிற்கு நான்கடியே சிறு மை வருவதெனக்கொள்க. தாழிசைப்பா சுருங்கிற் றிரண்டடியொ க்கமிரட்டி எ-து, பொதுவகையாற் றாழிசைசொல்லிப்போந்தாராயி னும் தாழிசைகட் கிரண்டடி சிறுமை, நான்கடி பெருமை, இடைமூ ன்றடியானும் வருவது எ-று. சுரும்பி மிருதரங்கக்குழலாய் எ-து, மகவே உமுன்னிலை சுருங்குந்தரவினிற்றாழிசையே எ-து, தரவடியிற் றாழிசையடி சுருஙகிவருவது எ-று. இவற்றிற்கிலக்கியமேற் காட்டிய வற்றுள்ளும் பிறவற்றுள்ளுங் கண்டுகொள்க.

## கூனும் பிறவும்.

பொருளோ டடிமுத னிற்பது கூனது வேபொருந்தி
இருள்சேர் விலாவஞ்சி யீற்றி னு நிற்கு மினியொழிந்த
மருடீர் விகாரம் வகையுளி வாழ்த்து வசைவனப்புப் [டியே.
பொருள்கோள்குறிப்பிசை யொப்புக்குறிக்கொள்பொலங்கொ

மேற்சொல்லப்பட்ட பாக்கட்கெல்லா மெய்தியதோ ரிலக்க ணமுணர்த்துதனுதலிற்று.

பொருளோ டடிமுதனிற்பது கூன் எ-து, அடிமுதற்கட்பாவி னது பொருளைத்தழுவித் தனியேநிற்பது கூனெனப்படும் எ-று.

அதுவே பொருந்தி யிருள்சேர்விலா வஞ்சியீற்றினுநிற்கும் எ-து, அக்கூன் வஞ்சிப்பாவினதடியின் இறுதிக்கண்ணும்நிற்கப்பெறும் எ-று. ஈற்றினுமென்ற வும்மையால், வஞ்சிப்பாவினடி நடுவினுங் கூன் வரப் பெறுமெனக்கொள்க. இருள்சேர்விலா வஞ்சியென்று சிறப்பித்தவதனால், வஞ்சியடியின் நடுவும் இறுதியும் அசைகூனாய்வருவது சிறப்புடைத்து சீர்கூனாய்வரினும், உகரவிறுதியாகிய நேரீற்றியற்சீராயல்லது வாராவெனக்கொள்க. அசைச் சீரெல்லாப் பாவினுள்ளும் அருகியல்லது கூனாய்வாராதெனக்கொள்க. எனவே வெண்பா ஆசிரியம் கலியென்னு மிவற்றினிடையு மிறுதியுங் கூன்வரப்பெறாதெனக்கொள்க.

சூத்திரம்.

அடிமுதற் பொருளைத் தானினிது கொண்டு
முடிய நிற்பது கூனென மொழிப.

வஞ்சியி னிறுதியு மாகு மதுவே
யசை கூனாகு மென்மனார் புலவர்.

பல்காயனார். கூனைத்தனிச்சொல்லென்று வழங்குவாருமுளர் என்றார்.

சூத்திரம்.

அடிமுதற் பொருள் பெறவருவது தனிச்சொ
லஃதிறுதியும் வஞ்சியு ளியலு மென்ப.

என்றாராகலின், கொச்சகக்கலியுள் ஓரடிமுழுதுங் கூனாய்வரப் பெறும் அவை சிறப்பிலவெனக்கொள்க.

வெண்பா.

உதுக்காண், சுரந்தானு வண்கைச் சுவணமாப் பூதன்
பரந்தானுப் பல்புகழைப் பாடி—இரந்தார்மாட்

டின்மை யகல்வது போல விருணீங்க
மின்னு மளிதோ மழை.

வெண்பாவினுள் அடிமுதற்கண் உதுக்காணெனக் கூன் வந்தவாறு கண்டுகொள்க.

ஆசிரியப்பா.

அவரே, கேடில் விழுப்பொரு டருமார் பாசிலை
வாடா வள்ளியங் காடிறந் தோரே
யானே, தோடா ரெல்வளை நெகிழ வேங்கிப்
பாடமை சேக்கையுட் படர்கூர்ந் திசினே
அன்ன ளளிய ளென்னாது மாமழை
இன்னும் பெய்ய முழங்கி
மின்னுந் தோழியென் னின்னுயிர் குறித்தே.

என இவ்வாசிரியப்பாவின் அடிமுதற்கண் அவரே எ-ம், யானே எ-ம், கூன்வந்தவாறு கண்டுகொள்க.

கலிப்பா.

உலகி } பெருந்தகையார் பெருந்தகைமை பிறழாவேபிறழினும்
னுள், } இருந்தகைய விறுவரைமே லெரிபோலச் சுடர்விடுமே
சிறுதகையார்சிறுதகைமைசிறப்பெனினும்பிறழ்பின்றி
உறுதகைமை யுலகினுக்கோ ரொப்பாகித்தோன்றுமே.

இக்கலிப்பாவினுள், அடிமுதற்கண் உலகினுளெனக் கூன்வந்தவாறு கண்டுகொள்க.

வஞ்சிப்பா.

உலகே, முற்கொடுத்தார் பிற்கொளவும்
பிற்கொடுத்தார் முற்கொளவும்

உறுதிவழி யொழுகுமென்ப
அதனால்,
நற்றிற நாடுத லன்மை
பற்றற யானையும் பரிவறத் துறந்தே

இவ்வஞ்சிப்பாவினுள் அடிமுதற்கண் உலகேயெனச்சீர் கூனாய் வந்தவாறும்.

மாவழுங்கலின் மயக்குற்றன வழி

என இவ்வஞ்சியடியி னிறுதிக்கண்வழியென, அசைகூனாய் வந்தவாறும.

கலங்கழாலிற் றுறை கலக்குற்றன

என இவ்வஞ்சியடியி னடுவிற்றுறையென, அசை கூனாய்வந்த வாறுங் கண்டுகொள்.

தேரோடத் துகள் செழுமினதெருவு.

இவ்வஞ்சியடியின திறுதிக்கட்டெருவு என வுகரவிறுதியாகிய இயற்சீர் கூனாயினவாறு கண்டுகொள்க.

காமர் கடும்புனலென்னுங், கொச்சகக்கலியுட் சிறுகுடியீரே சிறுகுடியீரே என வோரடியால் கூன்வந்தவாறு காண்க. பிறவுமன்ன இனிமொழிந்த மருடீர்விகாரம் வகையுளிவாழ்த்து வசைவனப் புப்பொருள் கோள்குறிப்பிசையொப்புங் குறிக்கொள்க எ - து, மேலெழுத்தசைசீர் பந்தமடி தொடை பாவினங்கூறுவனென் றதிகாரம்பாரித்த காரிகையுள் ஓதப்படாத யாப்புறுப்பாய் மயக்கந்தீர வகுக்கப்பட்டவிகாரமும், வகையுளியும், வாழ்த்தும், வசையும், வனப்பும், பொருளும், பொருள்கோளும், குறிப்பிசையும், செய்யுளொப்

புமையு மாமாறு உபதேச முறைமையானுணர்க எ-று. பொலங்கொடியே எ-து, மகடூஉமுன்னிலை.

அவற்றுள், விகாரம் அறுவகைப்படும். வலித்தலும், மெலித்தலும், விரித்தலும், தொகுத்தலும், நீட்டலும், குறுக்கலுமென.

சூத்திரம்.

அந்நாற் செல்லுந் தொடுக்குங் காலை
வலிக்கும் வழி வலித்தலும்
மெலிக்கும் வழி மெலித்தலும்
விரிக்கும் வழி விரித்தலுந்
தொகுக்கும் வழி தொகுத்தலும்
நீட்டும வழி நீட்டலும்
குறுக்கும் வழி குறுக்கலும்
நாட்டல் வலிய மென்மனார் புலவர்.

என்றார் தொல்காப்பியனார்.

குறுத்தாட் பூதஞ் சுமந்த
வறக்கதி ராழியெம் மண்ணலைத் தொழினே.

இதனுள் குறுந்தாளெனற் பாலதனைக் குறுத்தாளென வலிக்கும்வழி வலித்தவாறும்.

தண்டை யினக்கிளி கடிவோள்
பண்டைய ளல்லண் மானோக்கினளே.

இதனுள், தட்டையெனற் பாலதனைத் தண்டையெனமெலிக்கும்வழி மெலித்தவாறும்.

வெண்பா.

வெண்மணலெக்கர் விரிதிரை தந்தநீர்
கண்ணாடி மண்டிலத் தூதாவி—ஒத்திழியும்
தண்ணந் துறைவர் தகவிலரே தற்சேர்ந்தார்
வண்ணங் கடைப்பிடியா தார்.

இதனுள் தண்டுறைவரெனற்பாலதனைத் தண்ணந்துறைவரென விரிக்கும்வழி விரித்தவாறும்,

வெண்பா.

பூத்தாட் புறவிற் புனைமதில் கைவிடார்
காத்தலிற் காவலரேனையார்—பார்த்துற்ற
வேண்டா வணக்கி விறன்மதிற்றான் கோடல்
வேண்டுமாம் வேண்டார் மகன்.

இதனுள் வேண்டாதாரைவணக்கி யெனற்பாலதனை வேண்டார் வணக்கியெனத் தொகுக்கும்வழி தொகுத்தவாறும்,

வெண்பா.

பாசிழை யாகம் பசப்பித்தான பைந்தொடி
மாசேன னென்று மனங்கொளீஇ—மாசேனன்
சேயிதட்கண்ணி தருதலாற் சேர்த்தியென்
னோய்தீர நெஞ்சின்மேல் வைத்து.

இதனுள் பச்சிழையெனற் பாலதனைப் பாசிழையென நீட்டும் வழி நீட்டியவாறும்,

வெண்பா.

யானையெழுமித் தத்திருந்த விலங்கிலே வேற்றென்னன்
திருத்தார்நன் றென்றேன்றி யேன்.

இதனுள் தீயெனெனற்பாலதனைத் தியெனெனக்குறுக்கும் வழி குறுக்கினவாறுங் கண்டுகொள்க. பிறவுமன்ன. மருடீர் விகாரமென்று சிறப்பித்தவதனல், வரலாற்று முறைமையோடுங்கூடிப் பொருந்தி வாராநின்றனவல்லது துவைக்குப்பாலில்லை யெனற்பாலது தூவைக் குப் பாலில்லையென்றாற்போலப் புணர்க்கப்படாதென்க. இன்னு மருடீர் விகாரமென்று சிறப்பித்தவதனல் தலைக்குறையும், இடைக் குறையும், கடைக்குறையும் வருவனவுமுள. அவையும்வரலாற்று முறைமையோடுங்கூடி வழங்கப்படுமென்கொள்க.

மரையிதழ் புரையு மஞ்செஞ்சீறடி.

இதனுள் தாமரையெனற்பாலதனை மரையெனத் தலைகுறைத்து வழங்கினவாறும்,

வேதினவெரி நிறோதி முதுபோத்து.

இதனுள் ஓந்தியெனற்பாலதனை, ஓதியென இடைகுறைத்து வழங்கினவாறும்,

அகலிரு விசும்பி னூல்போல்
வாலிதின் மலர்ந்தன புன்கொடி முசுண்டை.

இதனுள் ஆரலெனற்பாலதனை யாலென இடைகுறைத்து வழங்கினவாறும்,

நீலுண்டு கிலிகை கடுப்ப.

இதனுள் நீலமுண்டுகி லிகைகடுப்ப எனற்பாலதனை நீலுண் டுகி லிகைகடுப்பவெனக் கடைகுறைத்து வழங்கினவாறுங் கண்டு கொள்க. பிறவுமன்ன அந்நாற்சொல்லுந் தொடுக்குங்காலை யென் வழி நான்குசொல்லாவன இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என்விவை.

சூத்திரம்.

இயற்சொற் றிரிசொற் றிசைச்சொல் வடசொலென்
றனைத்தே செய்யுளீட்டச் சொல்லே.

அவற்றுள் இயற்சொல்லாவன சோறு, கூழ், பால், பாளிதம், என்பன.

சூத்திரம்.

இயற்சொற் றானே யியம்புங் காலை
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் வழாமை யிசைக்குஞ் சொல்லே.

அவைநாடக்கும் எல்லையாவையோவெனின் வையையாற்றின் வடக்கும், மருதயாற்றின் றெற்கும், கருவூரின் கிழக்கும், மருவூரின் மேற்குமாகிய நான் கெல்லைக்குட்பட்ட சோணாடென்ப.

சூத்திரம்.

குன்ற வாணன் மலர்திரு வருளாற்
றென்றமிழ் மகிமை சிவணிய செய்த
வடியவர் கூட்டமு மாதிச் சங்கமும்
படியின்மாப் பெருமை பரவுறு சோழனும்
சைவமா தவருந் தழைத்தினி திருக்கு
மையறு சோழ வளநா டென்ப.

திரிசொல்லாவன அடுக்கல், பிறங்கல், ஓங்கல், விலங்கல், விண்டு, குவடுயெனவிவை, மலையென்னும் ஒருபொருள் குறித்தவேறு சொல். உந்தியென்பது ஆற்றிடைக்குறையும், கொப்பூழும், தேருருளும், யாழுறுப்பும் எனுமிவை, வேறுபொருள்குறித்த ஒருசொல்,

சூத்திரம்.

ஒருபொருள் குறித்த வேறுசொல் லாகியும்
வேறுபொருள் குறித்த வொருசொல் லாகியு
மிருபாற் றென்ப திரிசொற் கிளவி.

திசைச்சொல்லாவன, மயிலை மஞ்ஞையென்றும், கிளியைக் கிள்ளையென்றும், தாயைத் தள்ளையென்றும், நாயை ஞமலியென்றும் வழங்குவனவாம்.

சூத்திரம்.

செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தினும்
தங்குறிப்பின வேதிசைச் சொற்கிளவி.

செந்தமிழ் நிலத்தைச்சேர்ந்த பன்னிருகொடுந்தமிழ் நிலமாவன.

வெண்பா.

தென்பாண்டி குட்டங் குடங்கற்கா வேண்பூழி
பனறி யருவா வதன்வடக்கு—நன்றாய்
சீத மலாடு புனனாடு செந்தமிழ்சேர்
ஏதமில் பன்னிருநாட் டெண்.

இதை விரித்துரைத்துக்கொள்க. வடசொல்லாவன குங்குமம், மூலம், சங்கு, சந்தனம் என்பனவாம்.

சூத்திரம்.

வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா குமமே
சிதைந்தன வரினு மியைந்தன வரையார்.

என்றார் தொல்காப்பியனார். வகையுளி எ-து, மூன்றும் பின்றும் அசைமுதலாகிய உறுப்புகள் சிற்புழியறிந்து குற்றப்படாமல் வண்ணமறுத்தலெனக்கொள்க.

வெண்பா

ஙகரு நீரா ரசைசீ ரடிக்கட
பொருளுகைகா தோசையே நோக்கி—மருணீகக்க
கூமபவுங் கூமபா தலரவுங கொணடியறறல
வாயநத வகையுளியின பாணபு

என றூ ர ா க லி ன,

கடியாா பூஙகோதை கடாயினுன் றிணடோ
சிறியாா தஞ சிறறில சிதைத்து

இதனை கடியாா எ - ம, பூஙகோதை எ-ம, கடாயினுன எ-ம் அலகிடின ஆசிரியததளையும, கலிததளையுந்தட்டு, வெளளைத்தனமை குனறுமாதலால் கடியாாபூவெ[illegible]று புளிமாங்காயாகவும, கோதையெனறு தேமாவாகவும, கடாயினுனென்று கருவிளமாகவும அலகிட்டுககொளக

வெண்பா.

மலாமிசை யேகினுன் மாணடி சோநதாா
நிலமிசை நீடு வாழவாா.

இதனை நிலமிசை எ-ம, நீடு எ-ம, வாழவார் எ-ம, அலகிடின் ஆசிரியததளை தட்டு, வெணபாவி னிறுதிககண அசைசசீராகறபாலது இயறசீராய, ஙகரில் வெணளைககோரசைச சீருமொளிசோபிறபபு மொணகாசுமிறற சீருடைச சிந்தடியே முடிவாமெனனும, இலககணததோடு மாறுபடுமாதலின நிலமிசைஎனக கருவிளமாகவும, நீடுவாழஎனக கூவிளமாகவும, வார் என நாளென்னும நேரசைச சீராகவும் அலகிட்டுககொள்க.

வெண்பா.

பாடுநர்கது மாடுநர்க்கும பண்டுதாவ கொண்டவர்க்கும
ஊடுநர்ககுவ கூடுநர்கது மொத்தலால்-நீடுநீ

நல்வய லூரன் நறுஞ்சாந் தணிய
சலம் புல்லவி னூடலினிது.

இதனுள் கொரகரங்கள் பிரிந்திசைத்தனவாயினும், இரண்டி னையுங்கூட்டி நிரையசையாக அலகிடச் சீருந்தளையுஞ் சிதையவாம். அல்லாவிடின் நாலசைச்சீராய் வண்ணமழிந்து ஓசையுண்ணுது கெடும், பிறவுமன்ன. வாழ்த்து இருவகைப்படும் மெய்வாழ்த்தும் இருபுற வாழ்த்துமென.

வெண்பா.

கார்நறு நீலங் கடிக்கயத்து வைகலும்
நீர்நிலை நின்ற பயன்கொலோ-கூர்நுனைவேய்
வண்டிருக்க நக்கதார் வாமான் வழுதியார்
கொண்டிருக்கப் பெற்ற குணம்.

இது மெய்வாழ்த்து.

வெண்பா.

பண்டுமொரு காற்றன்பைந் தொடியைக் கோட்பட்டு
வெங்கடம் வில்லேற்றிக் கொண்டுழந்தான்-தென்களந்தைப்
பூமாண் டிருமகளுக் கின்னும் புலம்புமால்
வாமான்றோர் வையையார் கோ.

இஃதிரு புறவாழ்த்து. வசையும் இருவகைப்படும், மெய்வசை யும் இருபுறவசையுமென.

வெண்பா.

தந்தை யிலைச்சுமடன் றாய்தொழிலி தான்பார்ப்பான்
எந்தைக்கி தெங்ஙனம் பட்டதுகொல்-முந்தை

அவியுணவி னோர்தெரியி னவதாங் கொல்லோ
கவிகண்ணனோர் தம் பிறப்பு.

இது மெய்வகை.

வெண்பா.

படையொடு போகாது நின்றெறிந்தா னென்றும
கொடையொடு நல்லார்கட் டாழ்ந்தான்-படையொடு
பாடி வழங்குந் தெருவெல்லாந் தான்சென்று
கோடிவழங்கு மகன.

இஃதிருபுறவகை. இனிவனப்பு எட்டுவகைப்படும். அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன் இழைபு என.

சூத்திரம்.

அம்மை யழகு தொன்மை தோல்விருந் தியைபு
புலனிழை பெனவனப் பெட்டே.

அவற்றுள் அம்மையாவது, சிலவாய் மெல்லியவாய் சொற்க ளால் ஒள்ளியவாய்பொருண்மேற் சிலவடியாற் சொல்லியது.

சூத்திரம்.

சின்மென் மொழியாற் சீர்புனைந் தியாப்பி
னம்மை தானே யடிநிமிர் வின்றே.

எனுறாகவின்,

வெண்பா.

அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய்
தன்னோய்போற் போற்றாக்

அழகென்பது, செய்யுட்சொல்லாகிய இரிசொற்களானேசை யினியவாகப் புணர்க்கப்பட்டது.

சூத்திரம்.

செய்யுண் மொழியாற் சீர்புனைந் தியாப்பி
னவ்வகை தானே யழகெனப் படுமே.

என்றாராகலின்,

ஆசிரியப்பா.

துணியிரும் பௌவங் குறைய வாங்கி
அணிகிள ரடுக்கன் முற்றிய வெழிலி
காலொடு மயங்கிய கனையிருண் டோள்
யாங்குவந் தனையோ வோங்கல் வெற்ப
நெடுவரை மருங்கிற் பாம்பென விழிதரும்
கடுவரற் கலுழிநீந்தி
வல்லியம்வழங்குங் கல்லதர்நெறியே.

தொன்மை எ-ம், பழையதாகி நிகழ்ந்தபெற்றி புணர்க்கப்படுவது.

சூத்திரம்.

தொன்மை தானே
யுரையொடு புணர்ந்த பழமை மேற்றே.

என்றாராகலின்,

செறிதொடி யுவகை கேளாய்
செஞ்சுடர்த் தெறுகதிர்ச் செல்வன்.

என்பதூஉம், மாபாரதம் காத்தம் போல்வனவுங்கொள்க. தோல் எ-து, இழுமென்னும் மெல்லியவாகிய சொற்களால் விழுமியவா

ய்க் கிடப்பனவும், எல்லாச்சொற்களானும் பலவடியாய்க் கிடப்பன வுமென விருத்தநத்தவாம்.

சூத்திரம்.

இழுமென மொழியால் விழுமியது நுவலினும்
பரந்த மொழியா லடிநிமிர்ந் தொழுகினும்
தோலென மொழிப தொன்மொழிப் புலவர்.

என்றாராகலின்,

ஆசிரியப்பா.

பாரிருள் பரப்பகங் குறையப் பாம்பின்
ஆயிர மணிவிளக் கழலுஞ் சேக்கைத்
துணிதரு வெள்ளந் துயில்புடை பெயர்க்கும்
ஒளியோன் காஞ்சி யெளிதெனக் கூறின்
இம்மை யில்லை மறுமை யில்லை
நீமை யில்லை செய்வோ ரில்லை
செய்பொரு ளில்லை
அறிவோ ரியாரஃ திறுவுழி யிறுகென.

இது மார்க்கண்டேயனார் காஞ்சி, இஃதிழுமெனுமொழியால் விழுமிய து நுவன்றது.

திருமழு நன்னிய சென்ற வாறே
இதுபரந்த மொழியாலடி நிமிர்ந் தொழுகியது.

விருத்த எ - து, புதியவற்றின்மேற்று அஃதிப்பொழு துள் ளனாப்பாவேது.

சூத்திரம்.

விருந்து தானே
புதியது புனைந்த யாப்பின் மேற்றே.

அவை வந்தவழிக் கண்டுகொள்க. இயைபு எ-து, ஞணநமன ரல வழளவென்னும் பதினொரு புள்ளியு மீறாகவந்தபாட்டு.

சூத்திரம்.

ஞகர முதலா னகர வீற்றுப்
புள்ளி யிறுதி யியையெபன மொழிப.

அவையும் வந்தவழிக் கண்டுகொள்க. புலன் எ-து இயற்சொல்லாற் பொருடோன்றச் சொல்லப்படுவது.

சூத்திரம்.

தெரிந்த மொழியாற் செவ்விதிற் கிளந்து
தேர்தல் வேண்டாது குறித்தது தோன்,
புலனென மொழிப புலனுணர்ந் தோரே

என்றாராகலின்,

ஆசிரியப்பா.

பார்க்கடன் முகந்த பருவக் கொண்மூ
வார்ச்செறி முரசின் முழங்கி யொன்னார்
மலைமுற் றின்றே வயக்குதுளி சிதறிச்
சென்றவ டிருமுகங் காணக் கடுந்தேர்
இன்றுசெலக் கடவுமதி பாகவுதுக் காண்
மாவொடு புணர்ந்தமா அல் போல
இரும்பிடி யுழைய தாகப்
பெருங்காடு மடுத்த காமர் களிறே.

இழைபு எ-து, வல்லொற்றியாதுந் தீண்டாது செய்யுளியலுடையார் எழுத்தெண்ணி அடிவகுக்கப்பட்ட குறளடிமுதலாகப் பதினேழ் நிலத்தைந்தடியு முறையானே புடைத்தாய் ஓங்கியசொற்களால் வருவது.

சூத்திரம்.

ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத் தடக்காது
குறளடி முதலா வைந்தடி காறு
மோங்கிய மொழியா னாவன மொழியி
னிழைபி னிலக்கண மியைந்த தாகும்.

செய்யுளியலுடையார் நாற்சீரடிதன்னையே, நான்கெழுத்துமுதலா வாறெழுத்தின்காறும் உயர்ந்த மூன்றடியுங் குறளடியென்றும், ஏழெழுத்துமுதலா ஒன்பதெழுத்தின்காறும் உயர்ந்த மூன்றடியுஞ் சிந்தடியென்றும், பத்தெழுத்துமுதலாப் பதினான்கெழுத்தின்காறும் உயர்ந்த ஐந்தடியும், அளவடியென்றும் பதினைந்தெழுத்து முதலாப் பதினேழெழுத்தின்காறு முயர்ந்த மூன்றடியும், நெடிலடியென்றும் பதினெட்டெழுத்து முதலா இருபதெழுத்தின்காறு முயர்ந்த மூன்றடியுங் கழிநெடிலடியென்றும் இருபதெழுத்தின் மிக்க நாற்சீரடிப்பா இல்லையென்றும் வேண்டுவர். அவ்வெழுத்தெண்ணு மின்றுழிக் குற்றியலிகரமும் குற்றியலுகரமும் ஆய்தமும் ஒற்றுமொழித்துநின்ற உயிரும் உயிர்மெய்யுங்கூட்டி யெண்ணப்படும்.

வெண்பா.

குற்றிகரங் குற்றுகரமென் றிரண்டு மாய்தமும்
ஒற்றுமென வொருநான் கொழித்துக்-கற்றோர்
உயிரு முயிர்மெய்யு மோதினர் கொள்ளச்
செயிர்தீர்ந்த செய்யு ளடிக்கு.

# மூலமும்-உரையும்.

## சூத்திரம்.

நாற்சீர் கொண்ட தடியெனப் படுமே
நாலெழுத்து முதலா வாறெழுத் தெல்லை
யேறிய நிலத்த குறளடி யென்ப
ஏழெழுத் தென்ப சிந்தடிக் களவே.

யீரெழுத் தேற்ற மவ்வழி யான
பத்தெழுத் தென்ப நேரடிக் களவே
யுத்தநா லெழுத் தேற்றலங் கடையே.

மூவைந் தெழுந்தே நெடிலடிக் களவே
யீரெழுத்து மிகுதலு மியல்பென மொழிப.

மூவா றெழுத்தே கழிநெடிற் களவே
யீரெழுத் தேற்ற மவ்வழியான.

ஈரிரண்டு மோரேழு மீரைந்து மூவைந்தும்
பாரியன்ற நாற்சீர் பதினெட்டும் - ஓரா
விளையும பதினேழ் நிலத்துக் குறளசிந்
தளவு கழிநெடிலோ டைந்து.

என் றா ரா க லின்,

## ஆசிரியப்பா.

போந்து போந்து சார்ந்து சார்ந்து
தேர்ந்து தேர்ந்து மூசி நொந்து
வண்டு சூழ விண்டு விங்கி
நீர்வாய்க் கொண்டு நீண்ட நீலம்
ஊர்வா யூதை வீசவூர் வாய்
மதியேர் வண்டோ டொல்கி மாலை
நன்மணங் கெழும் பன்னெல் லூர
அமைவேர் மென்றோ ளாயரி நெடுங்கண்

பிணையி ரோதி யேந்திள வனமுலை
இறும்ப மாமல ரிடையெழுந்த மாவின்
நறுந்தழை துயல்வரூஉஞ் செறிந்தேந் தல்குல்
அணிநடை யசைஇய வரியமை சிலம்பின்
மணிமருள் வளர்குழல் வளரிளம் பிறைநுதல்
ஒளிநிலவு யககிழைஇ யுருவுடை மகளொடு
நளிமுழவு முழங்கிய வணிநிலவு மணிநகர்
இருந்தளவு மலரளவு சுரும்புலவு நறுந்தொடை
கலனளவு கலனளவு கலனளவு கலனளவு
பெருமணம் புணர்ந்தனை யென்ப அஃதொரு
நீ மறைப்பி னொழிகுவ தன்றே.

இனிப்பொருள் கோளென்பது உம்மைத்தொகை பொருளும் பொருள் கோளுமென.

வெண்பா.

அருளல்ல தியாதெனிற் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் றினல்.

இதனுள் அருளும் அருளல்லதும் என உம்மைதொக்காறபோலக்கொள்க. அவற்றுள் பொருளாவன, குறிஞ்சி கைக்கிளைமுதலிய அகமும் அகப்புறமும் வெட்சிபாடாண் பாட்டுமுதலிய புறமும் புறப்புறமுமாம். அவை அவ்விலக்கணங்கூறிய நூல்களிற் கண்டுகொள்க. இனிப்பொருள்கோள் ஒன்பதுவகைப்படும். நிரனிறைமொழிமாற்றும், சுண்ணமொழிமாற்றும், அடிமறிமொழிமாற்றும், அடிமொழிமாற்றும் பூட்டுவிற்பொருள்கோளும், புனல்யாற்றுப்பொருள்கோளும், அளைமறியாப்புப் பொருள்கோளும், தாப்பிசைப்பொருள்கோளும் கொண்டு கூட்டுப்பொருள்கோளுமென. இவற்றுள் நிரனிறை இரண்டுவகைப்படும் பெயர்நிரனிறையும் வினைநிரனிறையுமென, அவற்றுள் பெயர் நிரனிறைவருமாறு.

வெண்பா.

கொடிகுவளை கொட்டை நுசுப்புண்கண் மேனி
மதிபவள முத்தமுகம் வாய்முறுவல்
பிடிபிணை மஞ்ஞை நடைநோக்குச் சாயல்
வடிவினளே வஞ்சி மகள்.

வெண்பா.

காதுசேர் தாழ்குழையாம் கன்னித் துறைச்சேர்ப்ப
போதுசேர் தார்மார்ப போர்ச்செழிய-நீதியால்
மண்ணமிர்த மங்கையர்தோன் மாற்றுனா யேற்றூர்க்கு
நுண்ணிய வாய பொருள்.

வெண்பா.

அடல்வேன்மா நோக்கி நின்முகங் கண்டே
உடலு மிரிந்தோடு முழுமலரும்-பார்க்கும்
கடலுங் கனையிருளு மாம்பலும் பாம்பும்
தடமதியமா மென்றுதாம்.

இனி முறைநிரனிறை, எதிர்நிரனிறை, மயக்கநிரனிறை, மிகை யெண்ணிரனிறை, குறையெண்ணிரனிறை என்று வேண்டுவாரு முளர், அவற்றுள் அடிநிரனிறை வருமாறு.

விருத்தம்.

கூற்றுவனை வின்மதனை யரக்கர் கோவைக்
கூனில்லைக்குஞ் சரத்தை யிஞ்சி மூன்றை
ஏற்றுலகின் புறவுருவ மாளத் தோள்க
ளிற்வெறிப்ப விமையப்பெண் வெருவ வேலக்

காற்றொழிலான யனத்தால் விரலாற் கற்றைக்
கதிர்முடியாற் கரதலத்தாற் கண்ணயாற் பின்னும்
ஊற்றழிய வுதைத்துரித்து நெரித்துச் சூடி
யுரித்தெரித்தா னவனெம்மை யுடைய கோவே.

சுண்ணமொழிமாற்று,

வெண்பா.

சுரையாழ வம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்துமுயற்கு நிலையென்ப
கானகநாடன் சுனை.

இதனுள் சுரையென்பதனோடு மிதப்பவென்பது பொருள்கொள்ளவும், அம்மியென்பதனோடு ஆழவென்பது பொருள்கொள்ளவும், யானையென்பதனோடு நிலையென்பது பொருள்கொள்ளவும், முயலென்பதனோடு நீத்தென்பது பொருள்கொள்ளவும் வந்தமையாற் சுண்ணமொழிமாற்று, இனி அடிமறிமொழிமாற்று.

சூரல் பம்பிய-சீவரலாறே.

என்னும் ஆசிரியம் வேண்டிற்றோரடியான் முதலாகச்சொன்றும் ஓசையும் பொருளும் பிழையாது வந்தமையா லடிமறிமொழி

இனி அடிமொழிமாற்று,

ஆலத்துமேலகுவளை குளத்துளவாவி னெடியகுரங்கு.

என்பதனுள் ஆலத்துமேல குரங்குகுளத்துள் குவளையென்று இரண்டடியில் மொழிமாற்றிப் பொருள்கொண்டமையால் அடிமொழிமாற்று, இனிப்பூட்டுவிற்பொருள்கோள்.

வெண்பா.

திறந்திடுமின் றீயவைபிற் காண்டுமோதர்
இறந்துபடிற் பெரிதாமேதம்-உறந்தையர்கோன்

தண்ணூர மார்பிற் றமிழர் பெருமானைக்
கண்ணூரக் காண கதவு.

இதனுள் திறந்திடுமின் என்பதனோடு கதவு எ-து, கோக்குடைத்தாய்ப் பொருள்கொண்டமையாற் பூட்டுவிற் பொருள்கோள் இனிப்புனல்யாற்றுப் பொருள்கோள்.

வெண்பா.

அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங் குற்றம்
விலைப்பாலிற் கொண்டூன் மிசைதலுங் குற்றம்
சொலற்பால வல்லாத சொல்லுதலுங் குற்றம்
கொலைப்பாலுங் குற்றமே யாம்.

இஃதடிதோறும் பொருளற்று வந்தமையாற் புனல்யாற்றுப் பொருள்கோள், இனியளைமறிபாப்புப் பொருள்கோள்.

விருத்தம்.

தாழ்ந்தவுணர்வின ராய்த்தாளுடைந்து தண்டேன்றித் தளர்வார்தாமும், சூழ்ந்தவினையாக்கை சுடவிளிந்துநாற்கதிற் சுழல்வார்தாமும், ஊழ்ந்தபிணிநலியமுன் செய்தவினையென்றே முனிவார்தாமும், வாழ்ந்தபொழுதினே வானெய்துநெறிமுன்னி முயலாதாரே.

இதனுள் வாழ்ந்தபொழுதினே வானெய்துநெறிமுன்னி முயலாதாரென்னு மிறுதிச்சொல் இடையுமுதலுஞ்சென்று பொருள் கொண்டமையால் அளைமறி யரப்புப்பொருள்கோள். இனித்தாப்பிசைப்பொருள்கோள்.

வெண்பா.

உண்ணாமை யுள்ள துயிர்நிலை யூனுண்ண
அண்ணாத்தல் செய்யா தளறு.

இதனுள் ஊனே புண்ணுமை புள்ளதுயிரிலை எ-ம, ஊனையுண்ணை வண்ணுத்தல் செய்யளறு எ-ம், நடுநின்ற ஊனென்னுஞ் சொல்முதலும் இறுதியுஞ்சென்று பொருள்கொண்டமையால் தாப பிசைப்பொருள்கோள் இனிக்கொண்டு கூட்டுப்பொருள்கோள்.

### வெண்பா.

தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட பைங்கூந்தல
வெண்கோழி முட்டை யுடைத்தன்ன மாமேனி
அஞ்சனத் தன்னபசலை தணிவாமே
வங்கத்துச் சென்றார் வரின்.

இதனுள் அஞ்சனத்தன்னபைங் கூந்தலெனவும், தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட வெண்கோழி முட்டையுடைத்தன்ன பசலையெனவும் சொற்களைக்கொண்டு கூட்டிப் பொருள்கொண்டமையால் கொண்டுகூட்டுப் பொருள்கோள்.

### வெண்பா.

ஆரிய மன்னர் பறையி னெழூந்தியம்பும்
பாரி பறம்பின்மேற் றண்ணுமை காரி
விறன்முள் ளூர்வேங்கை வீநாறு னுந்தோளாள்
நிறனுள்ளு ருள்ள தலர்.

இதனுள் தண்ணுமை நாறுந்தோள் எ-ம், நிறமவேங்கைவீ எ-ம், அலர் ஆரியமன்னர்பறையி னெழூந்தியம்பும் எ-ம், சொற்களைக்கூட்டிப் பொருள்கொண்டமையால் இதுவுங்கொண்டு கூட்டுப் பொருள்கோள், பிறவுமன்ன, இனிக்குறிப்பிசை எ-து, எழுத்தல்லோசையான் வந்தமூற்கும், ஈளையும், இலதையும், அநுகரணமு முதலாகவுடையன செய்யுளகத்துவந்தால் அவற்றைச் செய்யுணடையழியாமல் அசையும், சீரும், அடியும், தொடையும், பிழையாமல் அலகிட்டு வழங்கப்படுமெனக் கொள்க.

வெண்பா.

மன்றலங் கொன்றைமலர்மிலைந் தாஃகுவஃ
தென்று திரியு மிடைமகனே-சென்று
மறியாட்டை யுண்ணுமல் வண்கையால் வல்லே
அறியாயோ வண்ணக்கு மாறு.

ஒழிந்தனவும் இடைக்காடனூர் பாடிய ஊசிமுறியுட் கண்டு கொள்க.

சூத்திரம்.

எழுத்தல் லிசையை யசைகொடு சீர்தளை
நிறைக்கவும் படுமென நேர்ந்திசி னோரே.

இனி ஒப்பு எ - து, மேற்சீரும் தளையும் அடியும் வரையறுக்கப் பட்ட பாவும், பாவினமுஞ்சொன்ன பெற்றியிற்றிரிந்து மிக்குங் குறைந்தும் வந்தா லவற்றையொருபுடை யொப்புமைநோக்கி ஒழிந்த செய்யுட்களின் பாற்படுத்து வழங்கப்படும் எ-று.

கலிவிருத்தம்.

கோழியுங் கூவின குக்கில் குரல்காட்டும்
தாழியு ணீலத் தடங்கணீர் போதுமினோ
ஆழிசூழ் வையத் தெம்மண்ண லடியேத்திக்
கூழை நனையக் குடைந்துங் குளிர்புனல்
ஊழியு மன்னவா மென்றேலோ ரெம்பாவாய்,

மேல்நாற்சீர் நான்கடியாய் வருவது கலிவிருத்தமென்று வரையறுத்துச்சொன்னார். இஃதைந்தடியான் வந்ததாயினும் ஒருபுடையொப்புமை நோக்கிக் கலிவிருத்தத்தின் பாற்படுத்து வழங்கப்படுமெனக்கொள்க. இதனைத் தரவுகொச்சகமெனினு மிழுக்காது.

### வஞ்சிப்பா.

சுற்றுநீர் சூழ்கிடங்கிற் பொற்றாமரைப் பூம்படப்பைத்
தெண்ணீர் நல்வய லூரன் கேண்மை
யல்லிருங் கூந்தற் கலரா குவே.

மேல் வஞ்சிப்பாவிற்கு மூன்றடிச்சிறுமையென் றெடுத்தோதினார். இஃதிரண்டடிச் சிறுமையான் வந்ததாயினும் ஒருபுடையொப்புமை நோக்கி வஞ்சிப்பாவின் பாற்படுத்தே வழங்கப்படுமெனக்கொள்க. பிறவும் புராண கவிஞராற் பாடப்பட்ட இலக்கியங்களையும் இவ்விலக்கணத்தா னொருபுடை யொப்புமைநோக்கி ஒன்றன்பாற்படுத்து வழங்கப்படுமெனக்கொள்க. ஒப்புமென்ற வும்மையால் வண்ணமும புனைந்துறையும் அடியின்றி நடப்பனவும் ஓரடியானடப்பனவும பாட்டும் உரையும் நூலும் மந்திரமும் அங்கதமும் பிசியும் முதுசொல்லும் வாழ்த்து மாமாறும் உணர்ந்துகொள்க. அவற்றுள் வண்ணம் நூறுதிறத்தனவாம். அவை சொல்லுமாறு.

தூங்கிசைவண்ணம், ஏந்திசைவண்ணம், அடுக்கிசைவண்ணம், பிரிந்திசைவண்ணம், மயங்கிசைவண்ணமென்னு மிவ்வைந்தினையு முதல்வைத்து அகவல்வண்ணம், ஒழுகிசைவண்ணம், வல்லிசை வண்ணம், மெல்லிசைவண்ணமென்னு மிந்நான்கினையும் இடைவைத்துக் குறில்வண்ணம், நெடில்வண்ணம், வல்லிசைவண்ணம், மெல்லிசைவண்ணம், இடையிசைவண்ணம் என்னு மிவ்வைந்தினையுங் கடைவைத்துக் கூட்டிப்புறழ நூறுவண்ணமும் பிறக்கும்.

### கட்டளைக் கலித்துறை.

தூங்கேந் தடுக்கல் பிரிதன் மயங்கிசை வைத்துப் பின்னும்
பாங்கே யகவ லொழுகல் வலிமெலிப் பாற்படுத்திட்
டாங்கே குறினெடில் வல்லினை மெல்லின மோடிடையைத்
தாங்கா துறழ்தரத் தாம்வண்ண நூறாந் தலைப்படுமே.

அவற்றின் விரிவாவன.

குறிலகவற் றூங்கிசைவண்ணம், நெடிலகவற் றூங்கிசைவண்ணம், வலியகவற் றூங்கிசைவண்ணம், மெலியகவற் றூங்கிசைவண்ணம், இடையகவற் றூங்கிசைவண்ணம் எ-ம்.

குறிலொழுகற் றூங்கிசைவண்ணம், நெடிலொழுகற் றூங்கிசைவண்ணம், வலியொழுகற் றூங்கிசைவண்ணம், மெலியொழுகற் றூங்கிசைவண்ணம், இடையொழுகற் றூங்கிசைவண்ணம் எ-ம்.

குறில்வல்லிசைத் தூங்கிசைவண்ணம், நெடில்வல்லிசைத் தூங்கிசைவண்ணம், வலிவல்லிசைத் தூங்கிசைவண்ணம், மெலிவல்லிசைத் தூங்கிசைவண்ணம், இடைவல்லிசைத் தூங்கிசைவண்ணம் எ - ம்.

குறின்மெல்லிசைத் தூங்கிசைவண்ணம், நெடின்மெல்லிசைத் தூங்கிசைவண்ணம், வலிமெல்லிசைத் தூங்கிசைவண்ணம், மெலிமெல்லிசைத் தூங்கிசைவண்ணம், இடைமெல்லிசைத் தூங்கிசைவண்ணம் எ-ம். தூங்கிசைவண்ணம் - உ0.

குறிலகவ லேந்திசைவண்ணம், நெடிலகவலேந்திசைவண்ணம், வலியகவ லேந்திசைவண்ணம், மெலியகவ லேந்திசைவண்ணம், இடையகவ லேந்திசைவண்ணம் எ-ம்.

குறிலொழுக லேந்திசைவண்ணம், நெடிலொழுக லேந்திசைவண்ணம், வலியொழுக லேந்திசைவண்ணம், மெலியொழுக லேந்திசைவண்ணம், இடையொழுக லேந்திசைவண்ணம் எ-ம்.

குறில்வல்லிசை யேந்திசைவண்ணம், நெடில்வல்லிசை யேந்திசைவண்ணம், வலிவல்லிசை யேந்திசைவண்ணம், மெலிவல்லிசை யேந்திசைவண்ணம், இடைவல்லிசை யேந்திசைவண்ணம் எ-ம்.

குறின்மெல்லிசை யேந்திசைவண்ணம், நெடின்மெல்லிசை யே ந்திசைவண்ணம், வலிமெல்லிசை யேந்திசைவண்ணம், மெலிமெல் லிசை யேந்திசைவண்ணம், இடைமெல்லிசை யேந்திசைவண்ணம எ-ம், ஏந்திசைவண்ணம் - உ0.

குறிலகவ லடுக்கிசைவண்ணம், நெடிலகவ லடுக்கிசைவண்ணம், வலியகவ லடுக்கிசைவண்ணம், மெலியகவ லடுக்கிசைவண்ணம், இ டையகவ லடுக்கிசைவண்ணம் எ-ம்.

குறிலொழுக லடுக்கிசைவண்ணம், நெடிலொழுக லடுக்கிசை வண்ணம், வலியொழுக லடுக்கிசைவண்ணம், மெலியொழுக லடுக் கிசைவண்ணம், இடையொழுக லடுக்கிசைவண்ணம் எ-ம்.

குறில்வல்லிசை யடுக்கிசைவண்ணம், நெடில்வல்லிசை யடுக்கி சைவண்ணம், வலிவல்லிசை யடுக்கிசைவண்ணம், மெலிவல்லிசை யடுக்கிசைவண்ணம், இடைவல்லிசை யடுக்கிசைவண்ணம் எ-ம்.

குறின்மெல்லிசை யடுக்கிசைவண்ணம், நெடின்மெல்லிசை யடு க்கிசைவண்ணம், வலிமெல்லிசை யடுக்கிசைவண்ணம், மெலிமெல் லிசை யடுக்கிசைவண்ணம், இடைமெல்லிசை யடுக்கிசைவண்ணம் எ - ம், அடுக்கிசைவண்ணம் - உ0.

குறிலகவற் பிரிந்திசைவண்ணம், நெடிலகவற் பிரிந்திசைவண் ணம், வலியகவற் பிரிந்திசைவண்ணம், மெலியகவற் பிரிந்திசைவண் ணம், இடையகவற் பிரிந்திசைவண்ணம் எ-ம்.

குறிலொழுகற் பிரிந்திசைவண்ணம், நெடிலொழுகற் பிரிந்தி சைவண்ணம், வலியொழுகற் பிரிந்திசைவண்ணம், மெலியொழுகற் பிரிந்திசைவண்ணம், இடையொருகற் பிரிந்திசைவண்ணம் எ-ம்.

குறில்வல்லிசைப் பிரிந்திசைவண்ணம், நெடிவல்லிசைப் பிரிந் திசைவண்ணம், வலிவல்லிசைப் பிரிந்திசைவண்ணம், மெலிவல்லி

சைப் பிரிந்திசைவண்ணம், இடைவல்லிசைப் பிரிந்திசைவண்ணம் எ - ம்.

குறின்மெல்லிசைப் பிரிந்திசைவண்ணம், நெடின்மெல்லிசைப் பிரிந்திசைவண்ணம், வலிமெல்லிசைப் பிரிந்திசைவண்ணம், மெலிமெல்லிசைப் பிரிந்திசைவண்ணம், இடைமெல்லிசைப் பிரிந்திசை வண்ணம் எ-ம், பிரிந்திசைவண்ணம் - உ௦.

குறிலகவன் மயங்கிசைவண்ணம், நெடிலகவன் மயங்கிசைவண்ணம், வலியகவன் மயங்கிசைவண்ணம், மெலியகவன் மயங்கிசை வண்ணம், இடையகவன் மயங்கிசைவண்ணம் எ-ம்.

குறிலொழுகன் மயங்கிசைவண்ணம், நெடிலொழுகன் மயங்கிசைவண்ணம், வலியொழுகன் மயங்கிசைவண்ணம், மெலியொழுகன் மயங்கிசைவண்ணம், இடையொழுகன் மயங்கிசைவண்ணம் எ - ம்.

குறில்வல்லிசை மயங்கிசைவண்ணம், நெடில்வல்லிசை மயங்கிசைவண்ணம், வலிவல்லிசை மயங்கிசைவண்ணம், மெலிமெல்லிசை மயங்கிசைவண்ணம், இடைவல்லிசை மயங்கிசைவண்ணம் எ-ம்.

குறின்மெல்லிசை மயங்கிசைவண்ணம், நெடின்மெல்லிசை மயங்கிசைவண்ணம், வலிமெல்லிசை மயங்கிசைவண்ணம், மெலிமெல்லிசை மயங்கிசைவண்ணம், இடைமெல்லிசை மயங்கிசைவண்ணம் எ - ம், மயங்கிசைவண்ணம் - உ௦.

ஆகவண்ணம் நூறு, இவ்வாறு விரித்துரைத்தாரவிநயனார்.

இனி ஆசிரியர் தொல்காப்பியனார்வண்ணம் இருபதென்பர்.

வண்ணந் தானே நாலைந் தென்பு
அவைதாம்
பாவீறு வண்ணந் தாஅ வண்ணம்

வல்லிசை வண்ணம் மெல்லிசை வண்ணம்
மியைபு வண்ணம் அளபெடை வண்ணம்
நெடிஞ்சீர் வண்ணங் குறிஞ்சீர் வண்ணஞ்
சித்திர வண்ணம் நலிபு வண்ணம்
மகப்பாட்டு வண்ண புறப்பாட்டு வண்ண
மொழுகு வண்ண மொரூஉ வண்ண
மெண்ணு வண்ண மகைப்பு வண்ண
தூங்கல் வண்ண மேந்தல் வண்ண
முருட்டு வண்ண முடுகு வண்ணமென்
றாங் கவையென்ப வறிந்திசி னோரே.

என்றாராகலின் - அவற்றுள்,

சூ - ம்.

பாஅவண்ணஞ் சொற்சீர்த் தாகி
நூற்பாற் பயிலு நோக்கிற் றென்ப.

அவற்றுள், குற்றெழுத் தென்ப.

சூ - ம்.

தாஅவண்ண மிடையிட்டு வந்த வெதுகைத் தாகும்.

வ - று.

உள்ளார் - காடிறந் தோரே.

சூ - ம்.

வல்லிசைவண்ணம் வல்லெழுத்து மிகுமே.

வ - று.

முட்டாட்டாமரைத் - துஞ்சி.

சூ - ம்.

மெல்லிசைவண்ண மெல்லெழுத்துமிகுமே.

வ - று.

பொன்னினன்ன பூவினறுண்டாது.

சூ - ம்.

இயைபுவண்ண மிடையெழுத்துமிகுமே.

வ - று.

வால்வெள்ளருவி வரைமிசையிழியவும்
வேலொளி விளக்கினவரின்
பிரொடுதோளி வாழ்கிற்பெயரே.

சூ - ம்.

அளபெடைவண்ண மளபெடைபயிலும்.

வ - று.

கண்ணடனைக் கண்டுகேதடும.

சூ - ம்.

நெடுஞ்சீர்வண்ணம் நெட்டெழுத்துப்பயிலும்.

வ - று.

மாவாராதே மாவாராதே.

சூ - ம்.

குறுஞ்சீர்வண்ணங் குற்றெழுத்துப்பயிலும்

வ - று.

உறுபுயலெழிலி தொகுபெயல்பொழிய
சிறுகொடியவரை பொதிதளையவிழ

குறுதியபருவ மிதுவெனமறுகுபு
செறிதொடிதனது புலனறிவொழுகே.

ஆ - ம்.

சித்திரவண்ணங் குறியவுநெடியவு
மொத்துநேர்ந்தடுக்கிய வியற்கைத்தென்ப.

வ - று.

சூரல்பம்பிய - சிறுகானே.

ஆ - ம்.

நலிபுவண்ணமாய் தம்பயிலும்.

வ - று.

அஃகாமை செல்வத்திற் கியாதெனின்
வெஃகாமை வேண்டும் பிறன்கைப் பொருள்.

ஆ - ம்.

அகப்பாட்டு வண்ண முடியாதனபோன்று
முடிந்ததன் மேற்றே.

வ - று.

பன்மீனுணங்கற் படுபுள்ளோப்பியும்
புன்னைநுண்டாது நம்மொடுதொகுத்தும்
பன்னாள்வந்து பணிமொழிபயிற்றிய
மணத்தற்கொவ்வாள் றணந்துபுறமாறி
யின்னனுமிவண் குறைத்துறைந்தான்
பொய்தலாயத்துப் பொலன்றொடியவளிர்

கோடியர்வெண்ண மணலேறி
யோடுகலன்காணுந் துறைவன்றோழி.

சூ - ம்

புறப்பாட்டுவண்ண முடிந்ததுபோன்று முடியாதாகும்.

வ - று.

இன்னுவைகல் வாராமுன்னே - முழுதுடன் றுரந்தே.

சூ - ம்.

ஒழுகுவண்ண மோசையினொழுகும்.

வ - று.

அம்மவாழி தோழிகாதல ரினனே
பரிக்கு மின்னு வாடையொடு
புன்கண மாலையன் பின்றுசவிய
வுய்யலளிவளெ அறுளைச் சொல்லிச்
செல்லுநர்ப் பெறினே சேயவல்ல
வின்னினி யிரந்த மன்னவர்
பொன்னணி நெடுந்தேர் பூண்டமாவே.

சூ - ம்.

ஒரூஉவண்ண மொரூஉத் தொடைதொடுக்கும்.

வ - று.

சிறியகட் பெறினே - உயிதவப் பலவே.

சூ - ம்.

எண்ணு வண்ண மெண்ணுப் பயிலும்.

வ - று.

நின்னென்றை நர்கணை றும் பூணதம்
துன்னருங் கடுந்திறற் க்கன்கட்டி
பொன்னணி வல்விற் போஜ்றுறை யென்றுங்கு.

சூ - ம்.

அகைப்பு வண்ண மறுத்தறுத் தொழுகும்.

வ - று.

வாராராயினும் வரினுமவர்
நமக்கியாராராகியரோ தோழி.

சூ - ம்.

தூங்கல் வண்ணம் வஞ்சிபயிலும்.

வ - று.

யானாடத்தா னுணர்த்த யானுணரா விட்டதற்பின்
றானாட யானுணர்த்தத் தானுணரான் றேனாடு.

சூ - ம்.

ஏந்தல்வண்ணஞ் சொல்லியதுசொல்லிற்
சொல்லியது சிறக்கும்.

வ - று.

வைகலும் - வைத்துணராதார்.

சூ - ம்.

உருட்டுவண்ணம ராகந்தொடுக்கும்.

வ - று.

உருகெழுமுருகிய முருமெனவதிர்தொது
மருகெழுகிறகொடு மணவருமணிமயில்.

சூ - ம்.

முடுகுவண்ண மடியிறந்தொழுகும்.

வ - று.

நெறியறி செறிகுறி புரிதிரி.

எ - ம், வருமெனக்கொள்க. இனிப்புனைந் துரையிரண்டுவகைப்படும். பெரியதனைச் சுருக்கிச்சொல்லுதலும் சிறியதனைப்பெருக்கிச்சொல்லுதலுமென.

சூத்திரம்.

உரைக்கப்படும்பொருட் கொத்தனவெல்லாம்
புகழ்ச்சியின்மிக்க புனைந்துரையாகும்.

என்றாராகலின்.
வெண்பா.

அடையார் பூங்கோதைக் கல்குலுந் தோன்றும்
புடையார் வனமுலையுந் தோன்றும்-இடையாதும்
கண்டுகொள்ளா தாயினுங் காரிகை நீர்மையாட்
குண்டாக வேண்டு நுசுப்பு.

இதுபெரியதனைச் சுருக்கிற்று.

வெண்பா.

அவாப்போ லகன்றதலைக்குன்மேற் சான்றோர்
உசாப்போல வுண்டே மருங்குல்-உசாவினைப்

பேதைக் குரைப்பான் பிழைப்பிற் பெருகினவே
கோதைக்கொம் பன்னாள் குயம்.

இதுசிறியதனைப் பெருக்கிற்று. பொன்மலிகச்சி பூமலிகூடல் மாரியிகை மணிமாடம்என்னுந் தொடக்கத்தனவுமது. இனி அடியி ன்றிகடப்பன பாட்டுரையும் நூலும் மந்திரமும் சந்தோபிசிதமும் முதுசொல்லும் அங்கதமும் வாழ்த்து மென்னுமிவை ஓரடியானும் பலவடியானும் வரப்பெறும்.

சூத்திரம்.

செயிர்தீர் செய்யு டெரியுங் காலை
யடியி னீட்டத் தழகுபெற் றியலும்
ஓரடியானு மோரோ விடத் தியலும்
அவைதாம்
பாட்டு நூலே மந்திரம் பிசியே
முதுச்சொல் லங்கம் வாழ்த்தொடு பிறவு
மாகுந வென்ப வறிந்திசி னோரே.

இனி நூலாவது மூவகைத்தாய் மூவரினடைபெற்று நால்வகை ப்பயத்ததாய் எழுவகையாசிரிய மதவிகற்பத்ததாய்ப் பத்துவகைகுற் றந்தீர்ந்து பத்துவகைக்குணத்ததாய்ப் பதிட்மூன்று வகையானுரை பெற்று முப்பத்திரண்டு தந்திர வுத்தியோடும் புணர்ந்ததெனக் கொள்க.

அவற்றுள் மூவகையான தந்திரஞ்சூத்திரம் விருத்தியெனவிவை. முதனூல் வழிநூல் சார்புநூலெனினு மமையும். மூவரினடை பெறு தலென்பது அவை மூன்றுகடாத்து மாசிரியர் மூவரெனக்கொள்க.

நால்வகைப்பயனாவன அறம், பொருள், இன்பம் வீடெனவிவை.

எழுவகையாசிரியர் மதவிகற்பமாவன. உடன்படல், மறுத்தல், பிறர்தம்மதமேற் கொண்டுகளைதல், தாஅனுட்டித்தனுது நிறுத்தல், இருவர்மாறுகோ ளொருதலைதுணிதல் பிறர்நூற் குற்றங்காட்டல், பிறிதொடுபடா அற றன்மதங்கொளல் என்னுமிவை.

பத்துவகைக் குற்றமாவன குன்றக்கூறல், மிகைபடக்கூறல், கூறியதுகூறல், மாறுகொளக்கூறல், வழூஉச்சொற்புணர்த்தல், மயங்க வைத்தல், வெற்றெனத்தொடுத்தல், மற்றொன்றுவிரித்தல், சென்று தேய்ந்திறுத்தல், நின்றுபயனின்மை எனவிவை.

பத்துவகைக் குணமாவன சுருங்கச்சொல்லல், விளங்கவைத்தல், நவின்றோர்க்கினிமை, நன்மொழிபுணர்த்தல், ஓசையுடைமை ஆழமுடைத்தாதல், முறையின்வைப்பு, உலகமலையாமை, விழுமிய துபயத்தல், விளங்குதாரணத்ததாகுதல் எனவிவை.

பதின்மூன்றுவகை யுரையாவன சூத்திரந்தோற்றல், சொல்வகுத்தல், சொற்பொருளுரைத்தல், வினாதல், விடுத்தல், விசேடங்காட்டல், உதாரணங்காட்டல், ஆசிரியவசனங்காட்டல், அதிகாரவரவு காட்டல், தொகுத்துமுடித்தல், விரித்துக்காட்டல், துணிவுகூறல், பயனொடுபுணர்த்தல் எனவிவை

முப்பத்திரண்டு தந்திரவுத்தியாவன நுதலிப்புகுதல், ஒத்துமுறைவைப்பு, தொகுத்துச்சுட்டல், வகுத்துக்காட்டல், முடித்துக்காட்டல், முடிவிடங்கூறல், தானெடுத்துமொழிதல், பிறன்கோட்கூறல், சொற்பொருள்விரித்தல், தொடர்சொற்புணர்த்தல், இரட்டுறமொழிதல், ஏதுவின்முடித்தல், ஒப்பின்முடித்தல், மாட்டெறிந்தொழுகல், இறந்ததுவிலக்கல், எதிரதுபோற்றல், முன்மொழிந்துகோடல், பின்னதுநிறுத்தல், விகற்பத்தின்முடித்தல், முடித்ததுமுடித்தல், உரைத்துமென்றல், உரைத்தாமென்றல், ஒருதலைதுணிதல், எடுத்துக்காட்டல், எடுத்தமொழியினெய்தவைத்தல், இன்னதல்ல

திறவெனமொழிதல், எஞ்சியசொல்லி னெய்தக்கூறல், பிறநூன் முடிந்தது தா னுடன்படுதல், தன்குறிவழக்க மிகவெடுத்துரைத்தல், சொல்லின்முடிவினப் பொருண்முடித்தல், ஒன்றினமுடித்தல், தன்னினமுடித்தல், உய்த்துணரவைப்புஎனவிவை, இவ்வாறுசொன்னோர் பாடலனென்னு மாசிரியரெனக்கொள்க. தந்திரவுத்தி முப்பத்திரண்டினும் பலவென்பாருமுளர். (அ)

## விடயநாம சங்கியை.

எழுத்துப் பதின்மூன் றிரண் டசைசீர் முப்பதேழ் தளையைந்
திழுக்கி லடிதொடை நாற்பதின் மூன்றைந் து பாவினமூன்
றொழுக்கிய வண்ணங்க ளுறுநூறனபதொண் பொருள்கோளி
ருமூ, விழுக்கில்விகாரம் வனப்பெட்டியாப்புள் வகுத்தனவே.

இந்நூலுள் வகுத்த பொருளெல்லாந் தொகுத்துணர்த்துதனுதலிற்று.

எழுத்துப் பதின்மூன்றாவன குற்றெழுத்து நெட்டெழுத்து உயிரெழுத்து, குற்றியலிகரம் குற்றியலுகரம் ஐகாரக்குறுக்கம், ஆய்தம் மெய்யெழுத்து வல்லினம் மெல்லினம் இடையினம் உயிர்மெய் அளபெடை எனவிவை. இரண்டசையாவன நேரசை நிரயசை எனவிவை. சீர் முப்பதாவன ஈரசைச்சீர்நான்கும் மூவசைச்சீரெட்டும் நாலசைச்சீர் பதினாறும் ஓரசைச்சீரிரண்டுமென விவை. ஏழ்தளையாவன நேரொன்றாசிரியத்தளை நிரையொன்றாசிரியத்தளை இயற்சீர்வெண்டளை வெண்சீர்வெண்டளை ஒன்றியவஞ்சித்தளை ஒன்றாவஞ்சித்தளை கலித்தளையென விவை. ஐந்தடியாவன குறளடி சிந்தடி அளவடி நெடிலடி கழிநெடிலடி யெனவிவை தொடைநாற்பத்து மூன்றாவன அடிமோனை அடியெதுகை அடிமுரண் அடியியைபு அடியளபெடை அந்தாதித்தொடை இரட்டைத்தொடை செந்தொடையெ

ணக்கிடந்த தொடையும் இணைமோனை முதலாகிய முப்பத்தைந்து தொடைவிகற்பமு மெனவிவை. ஐந்துபாவாவன வெண்பா ஆசிரியப்பா கலிப்பா வஞ்சிப்பா மருட்பாவென விவை, இன மூன்றாவன தாழிசை துறை விருத்தமெனவிவை. ஒழுக்கியவண்ணம் நூறாவன குறிலகவற்றூங்கிசை வண்ணமுதலாக மேற்காட்டிப் போந்தன. ஒன்பதொண் பொருள்கோளாவன நிரனிறை சுண்ணமொழிமாற்று முதலியன. இருமூவழுக்கில் விகாரமாவனவலிக்கும் வழிவலித்தன் முதலியன. வனப்பெட்டாவன அம்மைமுதலியன. யாப்புள்வகுத்தனவே எ - து, யாப்பருங்கலமென்னும் யாப்பிற்சொல்லப்பட்டன எ-று. எகாரமீற்றசை ஐந்திழுக்கிலடியென்று சிறப்பித்தவதனால் திணைவழுவும், பால்வழுவும், மரபுவழுவும், வினாவழுவும், விடைவழுவும், காலவழுவும், இடவழுவுமென்று சொல்லப்பட்ட எழுவழுவும் படாமற்புணர்க்கப் படுமெனக்கொள்க. வழுக்கில்விகாரமென்று சிறப்பித்தவதனால் எழுத்துக்குற்றம, சொற்குற்றம், பொருட்குற்றம், யாப்புக்குற்றம், அலங்காரக்குற்றம், ஆனந்தக்குற்றமென்னும் ஆறு குற்றமும் படாமற் புணர்க்கப்படுஞ் செய்யுட்களெனக்கொள்க. அவற்றுள் எழுத்துக்குற்றமுதலிய ஐந்தும் அவ்வவ் விலக்கணநூல்களாலறிந்துக்கொள்க. ஆனந்தக்குற்றமாவன எழுத்துமுதலியதிரிதல்.

சூ த் தி ர ம்.

எழுத்து நிலைதிரிந்த வெழுத்தா னந்தமும்
சொன்னிலை திரிந்த சொல்லா னந்தமும்
பொருணிலை திரிந்த பொருளா னந்தமும்
யாப்பு நிலைதிரிந்த யாப்பா னந்தமும்
கடைபெறு புலவர் காட்டின ரவையே.

அவற்றுள் எழுத்தானந்தம் வருமாறு.

வெண்பா.

ஆழி யிழைப்பப் பகல்போ மிரவெல்லாம்
தோழி துணையாத் துயர்தீரும்-வாழி
நறுமாலை தாராய் திரையவோஒ வென்னும்
செறுமாலை சென்றடைந்த போது.

இதனுள் திரையவோஒவென்று இயற்பெயரைச் சார்ந்தளபெழுந்தமையால் எழுத்தானந்தம்.

சூத்திரம்.

இயற்பெயர் சார்த்தி யெழுத்தள பெழினே
யியற்பா டில்லா வெழுத்தா னந்தம்.

சொல்லானந்தம் வருமாறு.

வெண்பா.

என்னிற் பொலிந்த திவண்முகமென் றெண்ணித்
தன்னிற் குறைபடுப் பான்றண்மதியம்-மின்னி
விரிந்திலங்கு வெண்குடைச் செங்கோல்விசயம்
எரிந்திலங்கு வேலி னெழும்.

இதனுள் தலைமகன்மேல் எரிந்ததென்னுஞ் சொற்புணர்ந்தமையால் சொல்லானந்தம்.

சூத்திரம்.

இயற்பெயர் மருங்கின் மங்கல மழியத்
தொழிற்சொற் புணர்ப்பினது சொல்லா னந்தம்.

பிறவும்வந்தவழிக் கண்டுகொள்க.

வெண்பா.

இந்திரனே போலு மிளஞ்சாத்தன் சாத்தற்கு
மந்தரமே போன்றிலங்கு மல்லாகம்-மந்தரத்தில்
தாழருவி போன்றுளது தார்மாலை யம்மாலை
வீழுலகு நாறு மிணர்.

இதனுள் சாத்தனென்னுங் கீழ்மகனை-அரசனை உவமித்ததாற் போல உவமித்தமையால் இறப்பவுயர்ந்த வானந்தவுவமை.

வெண்பா.

வள்ளெயிற்றுப் பேழ்வாய் வுமலிக்கு மான்குழாம்
எள்ளி யிரிந்தாற்போ லெவ்வழியும்-வள்ளற்கு
மாலார்கடலன்ன மண்பரந்த வாட்டானை
மேலாரு மேலார் விரைந்து.

இதனுட் புலியினோ டுவமிக்கப்படுகின்ற தலைமகனாகிய வீரனோடு மாயை உவமித்தமையால் இறப்பவிழிந்த வானந்தவுவமை.

சூத்திரம்.

இறப்ப விழிந்தது மிறப்ப வுயர்ந்தது
மறத்தகை வழீஇய வானந்த வுவமை.

அலங்கார குற்றமாவது.

வெண்டிங்கள் போன்றிலங்கு வெண்சங்கு சங்கனைய
வண்டிலங்கு தாழை வளர்தோடு-விண்டெங்கும்
கள்ளாவி நாறுங் கருங்கழிசூழ் கானகத்தெம்
உள்ளூவி வாட்டு முரு.

யக

இதனுள் வெண்டிங்கள்போலுஞ் சங்கு, சங்குபோலுந் தாமரைப்பூவென்று உவமைக்குவமை சொன்னமையால் அடுத்துவரலுவமையென்னும் அலங்காரக்குற்றம்.

சூத்திரம்

உவமைக்குவமை யில்லென்மொழிப.

இனி எல்லாக்குற்றமுந் தீர்ந்தசெய்யுள்வருமாறு.

ஆசிரியப்பா.

தாமரை புரையுங் காமர் சேவடி
பவளத் தன்ன மேனித் திகழொளி
குன்றி யேய்க்கு முடுக்கைக் குன்றின்
நெஞ்சுபக வெறிந்த செஞ்சுடர் நெடுவேற்
சேவலங் கொடி யோன் காப்ப
வேமவைக லெய்தின்றா லுலகே.

ஒழிபியல் - முற்றிற்று.

ஒழிபியற் செய்யுண் முதனினைப்பு.

விட்டிசை மாஞ்சீ ரியற்றளை சேர்ந்தருகி
வாரடர் கொங்கை வருக்கஞ் சுருங்கிற்று வான்பொருளும்
சீரிய தூங்கேந் தடுக்குச் சிறந்த வெழுத்து மன்றே
யாரு மொழிபியற் பாட்டின் முதனினைப் பாகுமன்றே.

யாப்பருங்கலக்காரிகை மூலமும் - உரையும்

முற்றிற்று.

## இந்நூலிற் சொல்லாத

### கட்டளைக்கலிப்பாவுக் கிலக்கணம்.

சூத்திரம்.

மாச்சீர் முன்வரு நாற்சீ ரடியே
நேர்முத னிரைமுத னிரனிறை யானே
பதினோ ரெழுத்தும் பன்னீ ரெழுத்து
மியைந்தவை யடியாய் நடந்தஃ திரட்டித்
தொத்துநான் கிறுவது கட்டளைக் கலிப்பா.

நேரசைக் கட்டளைக்கலிப்பா.

சொல்லி னீரிவ ராசைப்பட் டாரென்று
சொன்ன சொற்பொருள் வேறுகொண் டையமே
புல்லுவா ரெவ்வி தத்தினு மென்றுளம்
பூரித்தேயிருந் தேன்மட மங்கைமீர்
செல்லு லாம்பொழிற் கூவநகருறை
திருவிற் கோல ரினுமரு ளாமையால்
அல்லதேது திகம்பர ரென்பொரு
ளறையின்வன்கண ராவரென் மட்டுமே.

இது நேரசைமுதலாவந்த செய்யுள்.

## உயிர்.

ஆவியாவன, அகரமுதல் ஔகாரமீறாய்க்கிடந்த பன்னிரண்டெழுத்து மெனக்கொள்க.

சூத்திரம்.

அகரமுதல ஔகாரவிறுவாய்ப்
பன்னீரெழுத்து முயிரெனமொழிப.

குறுகியமூவுயிராவன, குற்றியலிகரமும், குற்றியலுகரமும், ஐகாரக்குறுக்கமும் எனவிவை இவைமேலேசொல்லுதும். ஆய்தமென்பதஃகேனம. அஃகேனமெனினும், ஆய்தமெனினும், தனிநிலையெனினும், புள்ளியெனினும், ஒற்றெனினுமொக்கும்.

சூத்திரம்.

அஃகெனமாய்தந் தனிநிலைபுள்ளி
யொற்றிப்பால வைந்துமிதற்கே.

வரலாறு, எஃகு-கஃசு-கஃடு-கஃது-கஃபு-கஃறு எனவரும்.

சூத்திரம்.

குறியதன்முன்ன ராய்தப்புள்ளி
யுயிரொடுபுணர்ந்த வல்லாறனமிசைத்தே.

## மெய்.

இனிமெய்யாவன, ககரமுதல் னகரமீறாய்க்கிடந்த பதினெட்டெழுத்து மெனக்கொள்க.

சூத்திரம்.

ககரமுதல னகரவிறுவாய்ப்
பதினெண்ணெழுத்து மெய்யெனமொழிப.

மெய்யெனினும், உடம்பெனினும், உறுப்பெனினும், ஒற்றெனினும், புள்ளியெனினுமொக்கும.

சூத்திரம்.

மெய்யுடம்புறுப்பொற் றிவைதாமொருபொருட்
செய்புபென்று செப்பினர்புலவர்.
மெய்யினியற்கை புள்ளியொடுநிலையல்.
எகரவொகரத் தியற்கையுமற்றே.
மெய்யினியக்க மகரமொடுசிவணும்.
மெய்யுயிர்நீங்கிற றன்னுருவாகும்.

ஏகாரம் எண்ணேகாரம்.

சூத்திரம்.

எண்ணேகார மிடையிட்டுக்கொளினு
மெண்ணுக்குறித்தியலு மென்மனார்புலவர்.

மறுவறுமூவினமாவன, வல்லினம்-மெல்லினம் - இடையினம்-எனவிவை. வல்லினமாவன கசடதபற. மெல்லினமாவன ஙஞணநமன-இடையினமாவன யரலவழள.

சூத்திரம்.

வல்லெழுத்தென்ப கசடதபற.
மெல்லெழுத்தென்ப ஙஞணநமன.
இடையெழுத்தென்ப யரலவழள.

மறுவறுமூவினமென்று சிறப்பித்தவதனால் அவை யுயிர்மெய்யாகியகாலத்தும், அப்பெயரானே வழங்கப்படுமெனக்கொள்க.

கழுஉ-மிலேஎ-கடைஇ-அரோஒ - அநௌஉ என்இவையேழுமிறுதி நிலையளபெடை. உயிரளபெடை எழுத்துநோக்கவேழாம். இடநோக்கநான்காம். எழுத்துமிடமுமுறழ்ந்துநோக்க விருபத்தெட்டாமெனக் கொள்க.

## ஒற்றளபெடை.

இனி ஒற்றளபெடைக்குச சொல்லுமாறு. ஒற்றுகளுள் ஙஞணநமன வயலளவாய்தமென்னும் பதினோரொற்றும், குறிற்கீழும், குறிலிணைக்கீழும் வந்தளபெடுக்கு மெனக்கொள்க.

சூத்திரம்.

ஙஞணநமன வயலளவாய்த
மெனுமிவையிரிடத்தள பெழுமொரோவழி
வன்மையொடுரஃகான ழஃகானொழிந்தாங்
கன்மையாய்தமோடளபெழுமொரோவழி.

மங்ங்கலம் - மஞ்ஞ்சு - மண்ண்ணு - பந்ந்து - அம்ம்பு - மின்ன்னு-தெவ்வ்வர்-வெய்ய்யர்-செல்ல்க-கொள்ள்க-எஃஃகு எனக்குறிற்கீழ்ப்பதினோரொற்று மளபெழுந்தவாறுகண்டுகொள்க. ரங்ங்கம்-முரஞ்ஞ்சு-முரண்ண்டு-பருந்ந்து-அரும்ம்பு-முரன்ன்று-குரவ்வ்வை - அரைய்ய்யர்-குரல்ல்கள் - திரள்ள்கள் - வரஃஃகு எனக்குறிலிணைக்கீழ்ப்பதினோரொற்று மளபெழுந்தவாறுகண்டு கொள்க. இவ்விருபத்திரண்டு புள்ளியளபெடையுஞ் செய்யுளகத்தல்லது ‡ பரவை வழக்கினுள்வாராவெனக் கொள்க.

சூத்திரம்.

மாத்திரைவகையாற் றளைதமகெடாநிலை
யாப்பழியாமையென் றளபெடைவேண்டும்.

---

‡ பரவைவழக்கென்பது - உலகவழக்கு.

## மாத்திரை

அறிஞருரைத்த அளபுமென்றுசிறப்பித்தவதனால் குற்றெழுத்தும் ஒற்றளபெடையும் ஒரோஒன்று ஒருமாத்திரை, நெட்டெழுத்திரண்டு மாத்திரை, உயிரளபெடை மூன்றுமாத்திரை, ஆய்தமும் மெய்யும் குற்றியலிகரமும் குற்றியலுகரமும் ஒரோவொன்றரைமாத்திரை, ஐகாரக்குறுக்கமும் ஔகாரக்குறுக்கமும் ஒரோஒன் றொன்றரைமாத்திரை, மகரகுறுக்கமும் ஆய்தக்குறுக்கமுமொரோரோவொன்று கான் மாத்திரை.

### சூத்திரம்.

ஒன்றிரண்டொரு மூன்றொன்றரையரைகா
லென்றனர்பொழுதிவை யிமைநொடியளவே
கண்ணிமைகைந் நொடியளவேமாத்திரை
நுண்ணிதினுணர்ந்தோர் கண்டவாறே.
ஒற்றுக்குமாத்திரை யொன்றேயளபெழுந்தாற
றெற்றக் குறிலதுவேயாம்.
உன்னல்காலே யூன்றலரையே
முறுக்கன்முக்கால் விடுத்தலொ

என்றார் பிறருமெனக்கொள்க. (௬)

### * அசை.

குறிலே நெடிலே குறிலிணை யேனைக் குறினெடிலே
நெறியே வரினு நிறைந்தொற் றடுப்பினு நேர்நிரையென்

* மேற்சொல்லிய வெழுத்துக்களால் அசைத்து இசைகொளவப்படுவது.